# மஹாத்மா காந்தியின் போதனைகள்

ஸ்ரீ யு. எஸ். மோஹன் ராவ்
ஆங்கிலத்தில் தொகுத்ததன்
தமிழாக்கம்

பப்ளிகேஷன்ஸ் டிவிஷன்
தகவல் ஒலிபரப்பு அமைச்சகம்
இந்திய சர்க்கார்

May 1970 (Vaishaka 1892)
வைசாக 1892 (மே 1970)

மஹாத்மா காந்தி நூற்றாண்டு விழா வெளியீடு

விற்பனைக்கு அல்ல

Not For Sale

The Message of Mahatma Gandhi (Tamil)

Published by the Director, Publications Division, Patiala House, New Delhi-1 and printed at Thompson & Co. (Minerva Press), 33, Broadway, Madras-1

## பொருளடக்கம்

# முன்னுரை

காந்திஜியின் எண்ணற்ற உரைகள், கட்டுரைகளி லிருந்து எடுக்கப்பட்ட மணிவாசகங்கள் இந்தச் சிறிய தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. இணைப்பான கோட்பாடுகளின் கோவையாகவும், சுதந்திரப் போராட்டக் காலத்தில் தம்முடைய சீடர்களின் பல் வேறு பிரிவினர்கள் செய்யவேண்டிய, மற்றும் விலக்க வேண்டிய காரியங்கள் பற்றி அவர் வெளியிட்ட யோசனைகளின் கோவையாகவும், மஹாத்மாவின் போதனைகளை எடுத்துக் காட்டுவதே தொகுப்பாசிரி யரின் நோக்கமாகும். ஆகவே, இந்த போதனைகள் அவை வெளியிடப்பட்ட சமயங்களுக்குப் பொருத்த மானவையாகவும் ஏற்கத் தக்கவையாகவும் இருந்த துடன், அவை எக்காலத்துக்கும் எந்தச் சந்தர்ப்பத்துக் கும் பொருத்தமான நிரந்தர வாழ்க்கைத் தத்துவமாக வும் கொள்ளத்தக்கவையும் ஆகும். அவர் அமரராகி இருபது ஆண்டுகள் கழிந்த பின்னர், அவருடைய வள மான படைப்புகளைப் புதுவதாக, நிதானமாய் ஆராய்ந்த தன் பேரில், பலரும் அறிந்த அவருடைய வாசகங்களை யும், அவ்வளவாக அறியப்படாத அவருடைய வாசகங் களையும், தெரிந்தெடுத்து, முறைப்படுத்தி விறுவிறுப்பான வரிசைக்கிரமத்தில் தருவதற்கு இந்த நூல் முயல்கிறது.

வெகுஜனங்களின் அற்புதத் தலைவராகவும், மஹானாகவும் காந்திஜி இருந்தபோதிலும், அரசியல், பொருளியல், கல்வி, சமூகப் பிரச்சினைகளில் அவ ருடைய கருத்துக்கள் பத்தாம் பசலியானவை என்றும், விஞ்ஞானமும் தொழில் நுட்பக்கலையும் ஓங்கிநிற்கும் இன்றைய அவசர உலகத்துக்கு அவை பொருத்த மற்றவை என்றும், பல்வேறு காரணங்களால், இப் போதும் ஒருசாரார் கருதுகின்றனர். காந்திஜியின் நூல்களைப் படித்து, அவருடைய உபதேசத்தின் சாராம்

சத்தைக் கிரகித்துக் கொண்டால்தான் இது எவ்வளவு தவறான கருத்து என்பது புலனாகும். மனித குலத்தின் வரலாற்றிலே எத்தனையோ மஹான்களும், தத்துவ ஞானிகளும், சிந்தனையாளர்களும், ராஜதந்திரிகளும், அரசியல் தலைவர்களும் இருந்திருக்கிறார்கள்; அவர்களுள் ஒவ்வொருவரும் தம்தம் துறையில் தலைசிறந்த சாதனைகளைப் புரிந்திருக்கின்றனர். ஆனால் காந்திஜீ அலாதியானவர்; ஏனெனில், அந்நிய ஆட்சியிலிருந்து தம் நாட்டை விடுதலை செய்வதற்காகத் தீவிர வெகு ஜனப் போராட்டத்துக்கு அவர் தலைமை தாங்கி நடத்தியபோதே, அரசியல் ரீதியிலும் தனி நபர்கள் சம்பந்தமாகவும் சுயராஜ்யம் எப்படி அமைந்திருக்க வேண்டும் என்பதை அவர் நிர்ணயித்தார்; அத்துடன், சிந்தனை பூர்வமாகவும் பரிசோதனைகளின் வாயிலாகவும் சாசுவதமான ஒரு வாழ்க்கைத் தத்துவத்தை வடிப்பதற்கும் அவர் முயன்றார். சமூகப் பிரச்சினைகளுக்கு அவர் தெரிவித்த பரிகாரங்கள் வியக்கத்தக்க எளிமையுடன் இருந்ததோடு, அவற்றின் பலன் பற்றிப் பலரும் சம்சயப்படும் விதத்திலும் அமைந்திருந்தன.

'காந்தி நூற்றாண்டு விழா' காரணமாக காந்திஜீயின் வாழ்க்கையிலும் போதனைகளிலும் உலக வியாபகமான சிரத்தை ஏற்பட்டிருக்கிறது. இவைகளைத் தகுந்த முறையில் ஆராய்ந்து பார்க்கும்போது, காந்திஜி சிந்தனையில் இலட்சியவாதியாக இருந்த போதிலும், இலட்சியங்களை நடைமுறைக்குக் கொண்டு வரும் விஷயத்தில் பிரத்தியட்சவாதியாகவே விளங்கினார் என்பது தெரியவரும். சத்தியம், அஹிம்ஸை போன்ற அடிப்படைக் கோட்பாடுகளில் அவர் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்தார்; ஆனால், அந்தக் கோட்பாடுகளை நடைமுறையில் கையாளும்போது, இடையறாத பரிசோதனைகளும் பிரத்தியட்ச நிலைமையும் அவற்றை முறைப்படுத்தி வளர்த்தன. பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான அவருடைய வழிமுறைகள் இறுதியானவை அல்ல, புதிய

பரிசோதனைகளுக்கு ஏற்ப அவற்றைச் செம்மைப் படுத்துவதற்குத் தடையேதும் இருக்கவில்லை.

சம்பந்தப்பட்ட எல்லா நிலவரங்களையும் நபர்களை யும் கருத்தில் கொண்டு, சமூகத்தின் கோளாறுகளை ஆராய்ந்து, அவற்றுக்குப் பரிகாரம் தேட முயன்ற ஒரு சமூக விஞ்ஞானி என்று காந்திஜியைச் சுருக்க மாகக் குறிப்பிடலாம். அவருடைய கருத்துக்கள் காலத் துக்கு முந்தியவைதாம்; அதன் காரணமாக அவை நடைமுறை சாத்தியமற்றவையாகத் தோன்றலாம்.

**கடவுள்தான் உண்டு**

இந்த மணிவாசகங்கள் எட்டுப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. கடவுள் இருக்கிறார் என்று காந்திஜி உறுதியாக நம்பியதையும், இறைவனைப் பற்றிய அவருடைய கருத்துக்களையும் முதல் பகுதியில் காணலாம். "கடவுள் இருக்கிறார், இருந்தார், எப் போதும் இருப்பார்". கடவுளை அவர் ஒரு புறப்பொரு ளாகக் கருதாமல், மனித இதயத்தில் எப்போதும் உறையும் பொருளாகக் கருதினர்; சாசுவதமான ஒரு நியதியில் நம்பிக்கை இல்லாமல் பூரண வாழ்வு நடத்துவது சாத்தியமல்ல; அந்த நியதியின்படியே பிரபஞ்சம் முழுவதும் இயங்குகிறது. தெய்வ நம்பிக்கை இல்லாத ஒருவன் கடலிலிருந்து வெளியே தெறிக்கப் பட்ட ஒரு நீர்த்திவலையைப் போல உலர்ந்து மறைவது திண்ணம். சிரஞ்சீவிக் கடவுளிடம் நம்பிக்கையிருந் தால் நமக்கு ஒரு குறைவும் இருக்காது. "சரியான காரியத்தைச் செய்யும்படி மனிதனை நிர்ப்பந்திக்கும் சக்திதான் கடவுள். சீவராசிகள் எல்லாவற்றின் ஒட்டு மொத்தமாக இருப்பவர் கடவுள்."

இவ்வாறு, கடவுளிடம் காந்திஜி கொண்டிருந்த முழு நம்பிக்கைதான் அவருடைய வலிமைக்கு முக்கிய ஆதாரமாகும். கடவுளின் பொறுப்பில் உள்ள ஒரு சிறு கருவியே தாம் என்றும், தம்மை எந்த விதத்தில், எந்த அளவுக்கு உபயோகிக்கலாம் என்பது ஆண்டவனுக்குத் தான் தெரியும் என்றும் அவர் எண்ணினர். "என்

பிரார்த்தனைக்குச் செவிசாய்க்காமல் அவர் இருந்ததே யில்லை. அடிவானம் கும்மிருட்டாக இருந்தபோது—சிறைச்சாலைகளில் எனக்கு ஏற்பட்ட கடும் சோதனைகளில் என் நிலைமை இரண்டுங் கெட்டானாக இருந்த போது—அவர் எனக்கு மிக அருகாமையில் இருப்பதாக உணர்ந்தேன்'' என்று காந்திஜி கூறியிருக்கிறார்.

**சத்தியமும் அஹிம்ஸையும் வேறல்ல**

(காந்திஜியின் இரண்டு அடிப்படை உபதேசங்களான சத்தியமும் அஹிம்ஸையும் இரண்டாவது பகுதியில் இடம் பெற்றுள்ளன. அவருடைய ஒவ்வொரு எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் இவை வெளிப்பட்டன. சத்தியத்தில் தாம் கொண்டிருந்த முழு நம்பிக்கையை வாயினால் சொல்வதுடன் அவர் நின்றுவிடவில்லை. அதுபற்றி அந்தரங்க சுத்தியுடன் சிந்தித்தார்; ஒருமுகமான ஈடுபாட்டுடன் அதை நடைமுறையில் கையாண்டார். முழு நம்பிக்கை ஏற்பட்ட தன்பேரில் உலகத்துக்கு இவ்வாறு பறைசாற்றினார் : சத்தியமே கடவுள். அவர் தம்முடைய நாட்டை முழு மூச்சுடன் நேசித்தபோதிலும் சத்தியத்துக்குப் பாதகமான முறையில் தேச சுதந்திரத்தைக்கூட அவர் பெற விரும்பவில்லை. "சத்தியத்தைப் பலியிட்டுவிட்டு சுதந்திரம் பெறுவதைவிட இந்தியா அழிவதே மேல் என்று சொல்வேன்.")

(சத்தியமும் அஹிம்ஸையும் இணைபிரியாதவை. "ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை, அல்லது, மிருதுவான, முத்திரையிடாத உலோக வட்டின் இருபக்கங்கள் போன்றவை அவை.'' சத்திய உபாசகர் ஒருவர் அஹிம்ஸை நெறியைத்தான் கடைப்பிடிக்கவேண்டும்; அதேபோல் சத்தியத்தைக் கண்டிப்புடன் கடைப்பிடிக்காமல் அஹிம்ஸையை அடைய முடியாது. "நம் வாழ்வின் நியதி அஹிம்ஸையும் சத்தியமும்தான், பலாத்காரமும் அசத்தியமும் அல்ல.'' ஆகவே, நம்முடைய இயல்பாக உள்ள அஹிம்ஸையை

நாம் கடைப்பிடித்துச் சத்தியத்தைக் கண்டறிய வேண்டும். "இந்த நியதியைப் புத்தி பூர்வமாக ஏற்று, ஊக்கத்துடன் நடைமுறையில் கடைப்பிடிக்கவேண்டும் என்று கடந்த ஐம்பதாண்டுகளாக நான் மன்றாடி வருகிறேன்." அஹிம்ஸை என்றால் ஹிம்ஸை செய்யாமல் இருப்பது என்று மாத்திரம் காந்திஜி கருதவில்லை; பிரபஞ்சம் முழுதுக்கும் பொதுவான, ஆக்க சக்தியாகிய, அன்பு நெறியாகும் அது.

அஹிம்ஸை நெறியிலிருந்து பிறழாமல் சென்றால் தான் தனிநபர்களும் தேசிய சமுதாயங்களும் கதி மோட்சம் பெறமுடியும். ரிஷிகளுக்கும் மஹான்களுக்கும் மாத்திரம் ஏற்பட்ட நியதி அல்ல இது, சாமானிய மக்களுக்கும் இது உரியது.

இலட்சியம் நல்லதாக இருந்தால் அதை அடைவதற்கு எந்த மார்க்கத்தையும் கையாளலாம் என்ற சித்தாந்தத்தைக் காந்திஜி நிராகரித்தார். நல்ல வழிமுறைக்குப் பதிலாக நல்ல நோக்கம் இருந்தால் போதும் என்பது சரியல்ல. காந்திஜி தம் ஆயுள் முழுதும் போதித்துக் கடைப்பிடித்த அஹிம்ஸையானது பலவீனம் காரணமாகவோ, நிராதரவான நிலையினாலோ ஏற்படுவதல்ல. தீரத்தின் சிகரமே அஹிம்ஸை. கோழைத்தனத்துக்கோ, பலவீனத்துக்கோ அதில் இடமில்லை. கோழைத்தனத்தைவிடப் பலாத்காரமே மேலானது என்று அவர் கூறினார்; ஏனெனில், "என்றாவது அஹிம்ஸாவாதியாக மாறலாம் என்ற நம்பிக்கை பலாத்காரவாதியின் விஷயத்தில் இருக்கிறது, ஆனால் கோழையின் விஷயத்தில் அறவே நம்பிக்கையில்லை."

ஒருவர் இன்னொருவரிடம் குரோதமோ, பகைமையோ பாராட்டக்கூடாது என்ற படிப்பினையை காந்திஜியின் வாழ்க்கையிலிருந்தும் உபதேசங்களிலிருந்தும் அறிகிறோம். எந்த மனிதரையும் விரோதியாக நினைக்கக்கூடாது. தீயவனின் உள்ளே இருக்கும்

தீமை என்னும் விஷத்தை ஒழிக்கப் போராடவேண்டுமே தவிர, அவனை வெறுக்கக்கூடாது.

தனிநபருக்கு ஒரு ஒழுக்கம், கோஷ்டிகளுக்கும் நாடுகளுக்கும் வேறு ஒழுக்கம் என்று காந்திஜி பிரித்துப் பேசியதில்லை. தனிநபர்களிடையே பலாத்காரம் கூடாது என்றால், நாடுகளிடையேயும் அது கூடாது தான். சத்தியத்தையும் அஹிம்சையையும் ஆதாரமாகக் கொண்ட சத்தியாக்கிரகப் போர் முறையில், சண்டைக்காரனின் ஆளுமைக்கும் உரிய மரியாதை உண்டு. அந்தப் போராட்டத்தில் வெற்றி கிடைக்கும் போது, ஒருவருக்குத் தோல்வியின் களங்கமோ, இன்னொருவருக்கு வெற்றியின் கர்வமோ ஏற்படுவதில்லை.

கஷ்டப்படுதல், அன்பு என்ற பண்புகளில் காந்திஜி ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தார். நிர்ப்பந்தத்தின் மூலம் எதிரியை நம் வழிக்கு மாற்றக்கூடாது; இதமாக எடுத்துச் சொல்லி மாற்றுவதுதான் மிகவும் கண்ணியமான, பயனுள்ள வழியாகும். ஆகவே சத்தியத்தைப் பரப்பும்போது, சரியான ஒரு காரியத்துக்காக மற்றவர்களுக்குக் கஷ்டம் கொடுப்பது தவறு; நாமே கஷ்டத்தை ஏற்றுக் கொள்வதுதான் சரியான முறை. நாமே கஷ்டத்தை அனுபவிப்பதுதான் நம்முடைய அந்தரங்க சுத்திக்கு அத்தாட்சி. மற்றும், நம்முடைய போக்கு தவறாக இருந்தால் அதைத் திருத்திக் கொள்வதற்கும் இவ்வழி உதவுகிறது. ஆகவே, அஹிம்சை மார்க்கம் தான் ஜனநாயகப் பாதையாகும்.

பலாத்காரம் உண்மையான பாதுகாப்பை அளிக்காது. அதன் விளைவாக ஆயுதப்போட்டி ஏற்படும், அல்லது அதிக ஆயுத பலம் வாய்ந்த கோஷ்டிகளை நிர்க்கதியாகச் சார்ந்து நிற்க நேரிடும். ஆனால் அஹிம்சையிலோ, கஷ்டத்தை அனுபவிக்கும் மன உறுதியின் விளைவான வலிமை பிறக்கிறது; இதற்குத் தளவாடங்கள் தேவையில்லை. நிர்க்கதியான நிலையில் இருப்பதாகத் தோன்றுகின்ற ஒரு சமூகக் கோஷ்டிகூட இந்த வலிமையைப் பெற முடியும். பலாத்காரப்

பயிற்சியின் போது, கொல்லும் கலையை ஒருவர் பயில வேண்டியிருக்கும்; அதேபோல், அஹிம்ஸைப் பயிற்சி பெறுவர் தாம் சாவதற்கான கலையைப் பயிலவேண்டும். பயத்தை ஏற்படுத்தி எதிரியைப் பணியவைப்பதற்காக அவனுக்குத் துன்பம் விளைவிப்பது யுத்தத்தின் நோக்கம் என்றால், எதிரியின் மனத்தை மாற்றி, நீதியுள்ள, புதிய சமூகத்தை நிருமாணிப்பதற்காக அவனுடைய ஒத்துழைப்பைப் பெறுவது சத்தியாக்கிரகத்தின் நோக்க மாகும். "அஹிம்ஸைப் போர் எப்போதுமே உடன் பாட்டில் முடிகிறது, எதிரியைப் பணியவைப்பதிலோ அவமானப் படுத்துவதிலோ அது ஒருகாலும் முடிவ தில்லை."

அஹிம்ஸையின் நிபந்தனைகளை ஏற்று, அவற்றைக் கடைப்பிடிக்க மேலும் மேலும் முயல்பவர்கள் எல்லோரும் அஹிம்ஸைச் சேனையில் சேரலாம். "பூரணமாக அஹிம்ஸையைக் கடைப்பிடிக்கும் சைனியம் ஒன்று எக்காலத்திலும் ஏற்படாது. அஹிம்ஸையைக் கடைப்பிடிப்பதற்கு உண்மையாக முயற்சி செய்பவர்களைக் கொண்ட சேனையாகவே அது இருக்கும்."

பரந்து விரிந்த ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகளில் வாழும் சாமானிய ஆண் பெண்களின் கூட்டங்களுக்குத் தலைமை தாங்கி சத்தியாக்கிரக இயக்கங்களை காந்திஜி நடத்தவேண்டியிருந்தது. அவர்களைக் கட்டுப்படுத்து வதும், அஹிம்ஸை முறையில் அவர்களுக்குப் பயிற்சி அளிப்பதும் இலேசான காரியமல்ல. "ஆயினும், அவர்கள் நடந்துகொண்ட முறை ஒரு அதிசயமாகும்."

சத்தியத்தையும் அஹிம்ஸையையும் ஆதாரமாகக் கொண்ட சத்தியாக்கிரகம் ஒரு புதிய போர்முறை யாகும். ஏனெனில் சமூக, அரசியல் அநீதிகளை ஒழிப் பதற்காகப் பரந்த அளவில் இந்த முறையைக் கையாள் வதற்கு மனித வரலாற்றிலே அதற்கு முன் யாரும் முயன்றதில்லை. அந்தப் பரிசோதனை பிரம்மாண்டமான அளவில் நடந்ததால் சில கட்டங்களிலோ, சில இடங்

களிலோ அதன் பிரயோகத்தில் தவறுகள் ஏற்படுவதைத் தவிர்க்க முடியவில்லை. ஆனால், இதற்காக, அந்த முறையே தோற்றுவிட்டதாகவும், அதைக் கைவிட வேண்டும் என்றும் கருதமுடியாது.

**பண்புகளும் கோட்பாடுகளும்**

இந்த மூன்றாவது பகுதி பெரும்பாலும் காந்திஜியின் சுயசரிதையுடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. "கூறு போடமுடியாத முழுப் பொருளாகும் என்னுடைய வாழ்க்கை; என்னுடைய நடவடிக்கைகள் எல்லாம் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்தவை; மனித குலத்தின்பால் எனக்கு இருக்கும் அடங்காத அன்பிலிருந்து கிளைத்தவையே அவையெல்லாம்." கடைப்பட்ட சீவராசியைக்கூடத் தன்னைப்போலவே கருதி நேசித்த காந்திஜி தம்மை ஒரு தீர்க்கதரிசி என்று கூறிக்கொள்ளவில்லை. "சத்தியத்தைக் கண்டு பிடிக்கும் உறுதியுடன் அதை நாடிச் செல்லும் பணிவுள்ள மனிதன்" என்றே தம்மை அவர் அழைத்துக்கொண்டார். சத்தியத்தைக் கண்டறிவதற்காக அவர் ஆயுள் முழுவதும் இடையறாமல் தவம் இயற்றினார்; அந்தச் சத்தியம் ஒரு சூட்சுமப் பொருளல்ல. மனித உறவுகளில் அதை நிலை நிறுத்த அவர் விரும்பினார். "என் போன்ற மற்ற உபாசகர்களையெல்லாம் முழு நம்பிக்கையுடன் என்னுடைய பரிசோதனையில் சேர்த்துக் கொள்கிறேன். என்னுடைய தவறுகளை அறிந்து திருத்திக் கொள்வதற்கு இது உதவியாக இருக்கும்."

மெல்ல மெல்ல மலைமேல் ஏறுவது போன்ற முயற்சி இது. ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும்போதும் காட்சி சிறிது சிறிதாகத் தெளிவாகிக் கொண்டிருந்தது; இறுதியில் அவர் ஒரு அதிமனிதராகிவிட்டதாகத் தோன்றியது. அவருடைய கோட்பாடும், எடுத்துக்காட்டான வாழ்க்கையும் கோடிக்கணக்கான ஆண், பெண்களுக்கு ஆதரிசம் அளித்தன என்றால், அவர் ஒளிவு மறைவின்றிப் பகிரங்கமாக வாழ்ந்ததுதான்

அதற்குக் காரணம். அவரிடம் இரகசியங்களே கிடையா. மற்றவர்கள் இரகசியமாகச் செயலாற்றுவதையும் அவர் ஆதரித்ததில்லை.

சத்திய ஆவேசம்தான் அவருடைய வாழ்க்கையின் பிரதான உணர்ச்சி; மற்ற மனிதர்களின் உள்ளங்களிலும் இதயங்களிலும் அவருக்கு மிகுந்த செல்வாக்கை அது ஏற்படுத்தியது. இந்த ஆவேசம் காரணமாகவே, இலட்சிய மார்க்கத்தின் தூய்மையை அவர் வலியுறுத்தினார். முன்கூட்டியே நிர்ணயித்த குறிக்கோள்களுடன் அவர் தம்மைப் பிணைத்துக்கொள்ளவில்லை. இதே ஆவேசத்தினால்தான் அவர் தம்முடைய அற்பத் தவறுகளையும் 'இமாலயத் தவறுகளை'யும் பகிரங்கமாக ஒப்புக்கொண்டார்.

அநீதி என்பது அசத்தியத்தின் ஒரு உருவமே. "அதனால்தான், சத்தியத்தில் எனக்குள்ள ஈடுபாடு என்னை அரசியல் துறைக்கு இழுத்தது. அரசியலுக்கும் மதத்துக்கும் சம்பந்தமேயில்லை என்று கூறுவோர் மதத்தின் பொருளை உணரவில்லை என்று சிறிதும் தயக்கமின்றியும் மிகுந்த பணிவுடனும் கூறுவேன்."

அதனால், மதமும் அறநெறியும் ஒன்றே என்று காந்திஜி கருதினார். இது இயற்கையே; ஏனெனில், காந்திஜி ஒரு கர்மயோகியாக விளங்கியவர். வாழ்வின் மற்ற அலுவல்களிலிருந்து மத அம்சத்தைப் பிரிக்க முடியாது.

## பல்வேறு மதங்களின் ஆன்மா ஒன்றே

ஒருவர் தம்முடைய மதத்தைப் போலவே மற்ற மதங்களையும் மதிக்க வேண்டும். ஏனெனில், "மனிதர்களைப் பிரித்து வைப்பது மதங்களின் நோக்கமல்ல, சேர்த்து வைப்பதே அதன் நோக்கமாகும்." நான்காவது பகுதியில் இந்த போதனை அடங்கியிருக்கிறது. "சத்தியம் என்பது எந்த ஒரு மதத்தின் சாத்திரத்துக்கும் ஏக போக்கியமல்ல" என்று காந்திஜி பறைசாற்றினார்.

அவர் தம்மை ஒரு ஹிந்து என்று அழைத்துக் கொண்டார்; ஹிந்து மதத்தின் சிறப்புகள் குறித்துப் பெருமிதம் கொண்டார். ஆயினும் அதன் பெயரால் நிலவிய தீண்டாமை முறையைப் பகுத்தறிவுக்கும் மனித வர்க்கத்துக்கும் எதிரானது என்று நிராகரித்தார். இராமாயணத்தின் அறநெறியும், உபநிடதங்கள், பகவத் கீதை ஆகியவற்றின் ஆழ்ந்த ஆன்மீக உண்மைகளும் அவருடைய ஹிந்து மதத்துக்கு ஆதாரமாக அமைந்தன. நற்கருமங்கள் நம் உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக் கடவுளைக் காட்டவல்லவை என்று அவர் கருதினார். "மனித குலத்துக்குச் சேவை செய்வதன் வாயிலாகக் கடவுளைக் காண்பதற்கு நான் முயல்கிறேன். ஏனெனில் கடவுள் சுவர்க்க லோகத்திலோ, கீழே மண்ணுலகிலோ இல்லை என்பதும், ஒவ்வொருவரின் உள்ளத்திலும் உறை கிறார் என்பதும் எனக்குத் தெரியும்."

காந்திஜி ஹிந்துவாக இருந்தபோதிலும் மற்ற மதங்களின் வேதங்களைப் பக்தியுடன் பயின்றார். ஏசு நாதருடைய "மலை உபதேச"த்தின் உன்னத அற நெறியும், இஸ்லாம் போதிக்கும் மனித சகோதரத்துவ உணர்வும் அவருடைய வாழ்க்கையில் இடம் பெற்றன. இவ்வாறே புத்த மதம் போதித்த அன்பு, இனிய சுபாவம், சாந்தி ஆகியவற்றையும் அவர் கிரகித்துக் கொண்டார்.

எல்லா மதங்களும் எல்லோருக்கும் பொதுவானவை என்ற உண்மையை அவர் திரும்பத் திரும்ப வலியுறுத் தினார்; தம்முடைய வாழ்க்கையிலும் இதை அனுஷ்டித் துக் காட்டினார்.

இதன் காரணமாக, "மதமாற்ற" நடவடிக்கையை அவர் கட்டோடு வெறுத்தார். மதம் மாற்றுவதற்குப் பதிலாக, "ஒரு ஹிந்து முன்னிலும் சிறந்த ஹிந்துவா வதற்கும், ஒரு கிறிஸ்தவர் முன்னிலும் சிறந்த கிறிஸ்தவர் ஆவதற்கும் ஒரு முஸல்மான் முன்னிலும் சிறந்த முஸல்மானுவதற்கும் நாம் உதவி செய்ய வேண்டும். நம்முடைய மதம்தான் அதிக உண்மை

யானது என்றும், இன்னொருவரின் மதம் உண்மைக் குறைவானது என்றும் இரகசியமாய்க் கர்வம் பாராட்டுவதை நாம் அடியோடு ஒழிக்க வேண்டும். மற்ற மதங்கள் சம்பந்தமான நம்முடைய மனப்பான்மை தெட்டத்தெளிவானதாகவும் அந்தரங்க சுத்தியுள்ளதாகவும் இருக்கவேண்டும்,'' என்று அவர் கூறினர்.

பிரார்த்தனை புரிவதுதான் மதத்தின் ஆன்மா, சாராம்சம் என்று காந்திஜி நம்பினர். ஆகவே பிரார்த்தனைதான் மனித வாழ்வின் கருப்பொருளாக இருக்கவேண்டும். ஏனெனில் அது ஒன்றுதான் நம் அன்றாட வாழ்வில் ஒழுங்கு முறையையும் இசைவையும் ஏற்படுத்த வல்லது.

தரித்திர நாராயணன்

ஏழைகள், தாழ்த்தப்பட்டவர்கள் ஆகியோரிடம் காந்திஜி கொண்டிருந்த கரிசனையும், அவர்களுடைய நிலையை உயர்த்துவதற்காக அவர் விடுத்த உருக்கமான வேண்டுகோள்களும், "தரித்திர நாராயணன்" என்ற தலைப்பைக் கொண்ட ஐந்தாவது பாகத்தில் இடம் பெற்றுள்ளன. வள்ளல் மனப்பான்மையுடனே, வெறும் உணர்ச்சி வசமாகவோ அவர் ஏழை மக்களிடம் கருணை காட்டவில்லை, தம்மையும் அவர்களுள் ஒருவராக அவர் கருதியதால்தான், சதா அவர்களுடைய நினைவுடன், அவர்களுடைய மேம்பாட்டுக்காகப் பாடுபட்டார்.

வறுமையைப் பெரும்பாலான மனிதர்களின் தலைவிதி என்று அவர் நம்பவில்லை. செல்வத்தை உற்பத்தி செய்பவர்களிடையே அந்தச் செல்வத்தை நியாயமான முறையில் பகிர்ந்து கொடுக்கவேண்டும் என்பது அவருடைய இலட்சியமாகும். உணவு, உடை, உறைவிடம் என்ற வாழ்க்கையின் அத்தியாவசியப் பொருட்கள் இல்லாமல் ஒரு குடியானவன்கூட, ஒரு தொழிலாளி கூட இருக்கமுடியாது. சாமானிய மக்களுக்கு இவை கிடைப்பதற்கு உத்தரவாதம் செய்யவேண்டும்.

எல்லாவகைச் சுரண்டல்களையும் அவர் எதிர்த்தார்.

தம்மைச் சுற்றிலும் காணப்பட்ட பொருளாதார ஏற்றத்தாழ்வையும் சமூக அநீதியையும் ஒழிப்பதற்கு அவர் முழு மூச்சுடன் பாடுபட்டார்.

விதேசி முதலாளித்துவம், சுதேசி முதலாளித்துவம் எனத் தாம் வேற்றுமை பாராட்டவில்லை என்று அவர் தெட்டத் தெளிவாக அறிவித்தார். அஹிம்ஸையில் அவர் உறுதியான நம்பிக்கை கொண்டிருந்ததால் முதலாளிகளை வதைப்பதை எதிர்த்தார். எனினும் சுரண்டல் ஒழிய வேண்டும் என்று கருதினார். தொழிலாளர்களின் தர்மகர்த்தாக்களாக முதலாளிகள் நடந்து கொண்டால் சுரண்டலை ஒழிக்க முடியும். "ஆலைகளின் பங்குதாரர்களைப் போலவே தொழிலாளர்களும் தங்கள் ஆலைகளின் உடமஸ்தர்கள்தாம். தம்மைப் போலவே ஆலைத் தொழிலாளர்களும் ஆலையின் சொந்தக்காரர்கள் என்பதை ஆலையதிபர் உணர்ந்து கொண்டால், அவர்களிடையே பூசலே இருக்காது," என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார். எல்லோரும் சம அந்தஸ்துடன் இருக்க வேண்டும் என்று அவர் விரும்பினார். இத்தனை நூற்றாண்டுகளாகப் பாட்டாளி வர்க்கத்தினர் தாழ்ந்த அந்தஸ்துடன் ஒதுக்கிவைக்கப்பட்டுள்ளனர். உழைப்பும் ஒரு விடுமுதல்தான் என்பதை அவர்கள் உணர வேண்டும். தொழிலாளர்களுக்குச் சரியான கல்வி போதித்து அவர்களை ஸ்தாபன ரீதியாக அமைத்தால், தங்கள் வலிமையை அவர்கள் உணர்ந்தால், எவ்வளவு மிகுதியான விடுமுதலும் அவர்களை அடக்க முடியாது." எனினும், முதலாளிகளும் தொழிலாளர்களும் ஒருவரை ஒருவர் சார்ந்திருப்பதால், அவர்கள் பூசலிடவேண்டிய அவசியமில்லை என்று அவர் கருதினார். "தொழிலாளரை முதலாளி அடக்கியாளக்கூடாது" என்பதுதான் முக்கியமானது.

பணக்கார முதலாளிகள் தர்ம கர்த்தாக்களாகச் செயல் புரியாமல், ஏழைத் தொழிலாளர்களைச் சுரண்டிக் கொண்டேயிருந்தால் என்ன செய்வது? சத்தியாக்கிரகம்தான் இதற்குச் சரியான, நிச்சயமான

பரிகாரம். அஹிம்ஸை முறை முதலாளியை ஒழிக்காது, முதலாளித்துவத்தைத்தான் ஒழிக்கும்; ஏனெனில், அப்போது தொழிலாளர்களின் தர்மகர்த்தாவாக முதலாளி நடந்து கொள்ள வேண்டியிருக்கும். தம் முடைய விடுமுதல் உருவாவதற்கும், அதைப் பாது காப்பதற்கும், வளர்த்துக்கொள்வதற்கும் தொழிலாளர் களையே நம்பியிருப்பார் முதலாளி.

தானம் கொடுப்பது, கொடுப்பவரையும் பெறுப வரையும் இழிவுபடுத்துகிறது என்று காந்திஜி கருதினார்.

இயந்திரங்களைக் காந்திஜி அடியோடு எதிர்க்க வில்லை. இயந்திர வெறியைத்தான் எதிர்த்தார். "எல்லோருக்கும் நன்மையளிக்கக் கூடிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு ஒவ்வொன்றையும் நான் போற்றுகிறேன்" என்று அவர் கூறியுள்ளார். ஆனால் உழைப்பாளர்களின் பிழைப்பைக் கெடுத்து, ஒருசிலர் கையில் அதிகாரத்தைக் குவிக்கக்கூடிய இயந்திரங்களை உபயோகிப்பதையும், அவற்றைக் கண்மூடித்தனமாகப் பெருக்குவதையும் அவர் ஆட்சேபித்தார். "இயந்திரங்களின் வெற்றிப் பகட்டில்" மயங்குவதற்கு அவர் மறுத்தார்.

எனினும், "உடலுழைப்பினால் மேற்கொள்ள முடியாத பொதுப்பணிகளுக்குக் கனரக இயந்திரங்களை உபயோகிக்க வேண்டியிருக்கும்," என்பதை அவர் ஒப்புக் கொண்டார். ஆனால், பெருவாரியான தொழி லாளர்களைக் கொண்ட பெருந்தொழில்களைத் தேசிய மயமாக்க வேண்டும் அல்லது அரசாங்கக் கட்டுப்பாட் டில் வைத்திருக்க வேண்டும் என்று சோஷலிஸவாதியான அவர் வலியுறுத்தினார். இந்தத் தொழில்கள் மக்களின் நலனுக்குப் பயன் படவேண்டும்.

"மனிதனைக் கடவுள் படைத்தபோது அவன் உழைத்து உண்ணவேண்டும் என்றும், உழைக்காமல் உண்பவர்கள் திருடர்கள் என்றும் விதித்தார்." ரஸ்கின் எழுதிய "கடையனுக்கும் கடைத்தேற்றம்" என்ற நூலைப்படித்தபோது, உணவுக்காக உழைக்கவேண்டும்

என்னும் கருத்தை காந்திஜி உணர்ந்தார். பின்னர், இதுபற்றிய டால்ஸ்டாயின் கட்டுரைகளைப் படித்த போது அவருடைய கருத்து உறுதியடைந்தது. மற்றும், பகவத்கீதையின் மூன்றுவது அத்தியாயத்திலும் இதற்கு ஆதரவு கிடைத்தது; யக்ஞம் செய்யாமல் உண்பவன் திருட்டு உணவை உண்டவனுவான் என்று அங்கு குறிப் பிடப்பட்டிருப்பதை அவர் கண்டார். இங்கு "யக்ஞம்" என்பது உடலுழைப்பை அல்லது உணவுக்காக உழைப் பதைக் குறிப்பதாக காந்திஜி விளக்கினுர். பல்வேறு மனிதர்களும் எத்தகைய தனிப்போக்குகளையும் திறன் களையும் கொண்டிருந்தாலும் அவர்கள் அனைவரும் உணவுக்காக உடலுழைப்புச் செய்யும் நியதிக்குக் கட்டுப்படவேண்டும். இது வாழ்க்கையின் நியதியாகும். தனிமனிதன் ஆரோக்கியமாகவும் ஆனந்தமாகவும் திருப்தியுடனும் வாழ்வதற்கு இது அவசியம். இந்த நியதியை நாம் புறக்கணித்ததுதான் இன்றைய சமூகத் தீமைகள் பலவற்றுக்கும் காரணம் என்று அவர் அபிப் பிராயப்பட்டார்.

கோடிக்கணக்கான மக்கள் கடுமையாக உழைத்தும் அரைப் பட்டினி கிடக்கிறுர்களே என்று கேட்கலாம். உணவுக்காக உழைப்பது என்ற நியதியை, நிர்ப்பந்தம் காரணமாக அவர்கள் ஏற்கவேண்டியிருப்பதே இத் தகைய நிலைமைக்கு உண்மையான காரணமாகும். "உணவுக்காக உழைப்பது என்ற நியதிக்கு நிர்ப்பந்த மாகக் கீழ்ப்படிவதன் விளைவாக வறுமையும் நோயும் அதிருப்தியும் விளைகின்றன. அது அடிமைத்தனமாகும். இஷ்டபூர்வமாக அதற்குக் கீழ்ப்படிந்தால் திருப்தியும் ஆரோக்கியமும் ஏற்படும். ஆரோக்கியம்தான் உண்மை யான செல்வம்." ஓரளவு உடலுழைப்போ தேகப் பயிற்சியோ இல்லாமல் எவரும், கோடீசுவரர்கூட, உயிர் வாழமுடியாது. "ஏழை - பணக்காரர் பேதமின்றி ஒவ்வொருவருக்கும் ஏதாவது ஒரு உருவில் தேகாப்பியா சம் செய்வது அவசியமாயிருக்கிறது என்றுல், அது ஏதாவது ஒரு வகை ஆக்க உழைப்பாக, அதாவது

உணவுக்கான உழைப்பாக, ஏன் இருக்கக்கூடாது?'' தம்முடைய உபதேசத்தின் மூலமும் அனுஷ்டானத்தின் வாயிலாகவும் உழைப்பின் பெருமையை அவர் வலியுறுத்தினர். சமூகத்துக்குப் பயனுள்ள உழைப்பு எதுவும் இழிவானதல்ல என்று அவர் கருதினர்.

## நாடு நலம் பெற

மனித குலம் முழுதையும் காந்திஜி நேசித்தபோதிலும், தம் பிறந்த நாட்டின் மீது அவர் தனிப்பாசம் கொண்டிருந்தார். நித்தியமான சில உண்மைகளின் பிரதிநிதியாக இந்தியா பல சகாப்தங்களாக இருந்து வந்திருப்பதே அதன் கவர்ச்சிக்குக் காரணம். இந்தக் கருத்தை மையமாகக் கொண்டிருக்கிறது ஆருவது பகுதி; இதன் பல்வேறு அம்சங்களை விளக்குவதற்காக அப்பகுதி பல உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

**நமது பாரத புண்ணிய பூமி:** இந்நாட்டின் ஐக்கியத்தை உருவாக்கிய சிற்பி காந்திஜி. இந்த நாட்டில் வாழ்கின்றவர்கள் எம்மதத்தினராயினும் அவர்கள் எல்லோரும் தங்கள் தாயகத்தின் சமபங்குதாரர்கள், அதன் பிதிரார்ஜிதத்தின் சமபங்குதாரர்கள், சமமான உரிமை-கடமைகளைக் கொண்டவர்கள் என்று அவர் குறிப்பிட்டார். மதம் என்பது கடவுளுடன் மனிதனுக்கு உள்ள சொந்த விவகாரம். "தேசிய சமுதாயம் சம்பந்தப்பட்டவரை எல்லாரும் முழுக்க முழுக்க இந்தியர்களே, அவர்கள் எந்த மதத்தை அனுஷ்டித்தாலும் பரவாயில்லை." பரந்த சகிப்புத்தன்மை, தேசிய ஒற்றுமை என்ற போதனைகளின் சின்னமாகும் அவருடைய உயிர்த்தியாகம்.

மொழி அடிப்படையில் மாகாணங்களை மாற்றியமைப்பதன் வாயிலாக இந்தியாவின் இயல்பான ஐக்கியத்துக்கு ஹானி ஏற்படக்கூடாது என்று அவர் எச்சரித்தார். "ஒவ்வொரு மாகாணமும் தன்னைத் தனியான ஆதிபத்திய அரசாக நினைத்துக் கொண்டால் இந்தியாவின் சுதந்திரம் பொருளற்றதாகிவிடும்;

அதனுடன் கூடப் பல்வேறு தனி அரசுகளின் சுதந்திரமும் மறைந்துவிடும்.'' வெளிநாட்டினர் நம்மை குஜராத்திகள், மஹாராஷ்டிரர்கள், தமிழர்கள் என்றெல்லாம் பார்ப்பதில்லை. இந்தியர்கள் என்றே அடையாளம் கண்டு கொள்கின்றனர். ''ஆகவே, எல்லாவிதப் பிரிவினைப் போக்குகளையும் நாம் உறுதியுடன் மட்டந்தட்டி, நாம் இந்தியர்கள் என்பதை உணர்ந்து அதற்கேற்ப நடந்து கொள்ளவேண்டும்.'' ஆரோக்கியமான மாகாணப் பற்று இருக்க வேண்டியதுதான். இல்லாவிடில் தனித்தனி மாகாணங்களை ஏற்படுத்தியிருப்பதில் அர்த்தம் இல்லை என்று அவர் கருதினார். ''ஆனால் நம்முடைய மாகாணப் பற்று குறுகியதாகவோ, தனித்து ஒதுங்கும் தன்மையுடையதாகவோ இருக்கவே கூடாது. நாடு முழுவதன் நலனுக்கும் உகந்ததாக அது இருக்க வேண்டும், ஏனெனில், நாட்டின் அங்கங்களே மாகாணங்கள்...... மாகாணங்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும் நாடு முழுவதற்கும் பெருமை கூட்டுவதாக இருக்கவேண்டும்.''

**அவர் கனவு கண்ட இந்தியா :** கோடிக்கணக்கான இந்திய மக்களின் வறுமையும் அவல நிலையும் மஹாத்மா காந்தியை வாட்டி வதைத்தன; அவர்களுடைய நிலையை உயர்த்துவதற்காக அவர் முழு மூச்சுடன் பாடுபட்டார். கோடிக்கணக்கான இந்நாட்டு மக்களில் ஒவ்வொருவரும், சுதந்திர இந்தியா அளிக்கக்கூடிய வாய்ப்புகளிலும் வசதிகளிலும் சம உரிமை பெறவேண்டும் என்று அவர் விரும்பினார்.

இந்தியா நகரங்களில் வாழவில்லை. தன்னுடைய ஏழுலட்சம் கிராமங்களில்தான் வாழ்கிறது என்று அவர் நம்பினார். இந்தியக் குடியானவனிடம் அவர் மிகுந்த நம்பிக்கை கொண்டிருந்தார்; அவன் உலகைத் தாங்குபவன் என்றும், ஜனநாயகத்தின் காவலன் என்றும் அவர் போற்றினார்.

நகரங்கள் துரிதமாக வளர்வதைக் கண்டு காந்திஜி மிகுந்த கவலை கொண்டார்; காலத்தின் கோளாறு இது

என்று அவர் கருதினார். கிராமங்களை நகரங்கள் சுரண்டுவதையும், நகர அறிவாளிகள் ஏழைக் கிராமவாசிகளிடம் வள்ளல் மனப்பான்மையுடனும் உயர்வு உணர்ச்சியுடனும் நடப்பதையும் கண்டு அவர் வேதனையுற்றார். நகரங்களில் அல்லாமல் கிராமங்களிலும், அரண்மனைகளில் அல்லாமல் குடிசைகளிலும், மக்கள் வாழ்ந்தால் தான் இந்தியாவில் உண்மையான சுயராஜ்யம் மலரும் என்று அவர் உறுதியுடன் நம்பினார்.'' நகரங்களிலும் அரண்மனைகளிலும் கோடிக்கணக்கான ஜனங்கள் ஒருக்காலும் சமாதானமாக வாழமுடியாது. பலாத்காரத்தையும் அசத்தியத்தையும் கையாள்வதைத் தவிர அவர்களுக்கு வேறு வழி இருக்காது.'' எளிய கிராம வாழ்க்கையில்தான் சத்தியத்தையும் அஹிம்ஸையையும் பூரணமாக அனுஷ்டிக்க முடியும்.

இந்தியாவின் பேருருவமும், பெரிய மக்கட் தொகையும், பூமியில் அதன் ஸ்தானமும், அதன் தட்ப-வெப்ப நிலையும், இந்நாட்டுக்குக் கிராமக் கலாசாரத்தையே விதித்திருக்கின்றன என்று காந்திஜி கருதினார். தற்போது இந்தக் கலாசாரத்தில் பலப்பல குறைபாடுகள் உள்ளன; ஆனால் அவற்றையெல்லாம் சரி செய்ய முடியும். யாவரும் அறிந்த இந்தக் குறைபாடுகளை நீக்குவதற்காக, படித்த இளைஞர்கள் கிராமங்களில் குடியேறி, கிராம மக்களுக்கு "ஆரோக்கியத்தையும் பணத்தையும் சேமிப்பது எப்படி'' என்பதைப் போதிக்க வேண்டும். பல்லாண்டுகளாக அவர்களை நாம் சுரண்டி வந்திருக்கிறோம். அதன் விளைவாக கிராமங்கள் இப்போது சீரழிந்து கிடக்கின்றன. "இந்தச் சீரழிவை எவ்வாறு தடுப்பது என்பது—அதாவது, எல்லாரும் வசதியாக வாழும் விதத்தில் இந்தியக் கிராமங்களை எவ்வாறு சீரமைப்பது என்பது—நாட்டுப்பற்றுள்ள ஒவ்வொருவருக்கும் ஏற்பட்டுள்ள கடமையாகும்.''

கிராமவாசிகள் கூட, குறிப்பாக அவர்களுள் படித்த பிரிவினர், நகர வாழ்க்கையின் கவர்ச்சியில் மயங்கி நகரங்களுக்கு ஓடுவதைக் கண்டு அவர் மனம் வருந்

தினர். அதனால், கிராமவாசிகள் தன்னிறைவும் தற்காப்பும் பெறுவதற்கு வசதியாகக் கிராமக் கைத்தொழில்களை வளர்ப்பதில் அவர் ஒருமுகமான கவனம் செலுத்தினர். கிராமவாசிகள் தங்களுக்குத் தேவையா பொருட்களைக் கிராமங்களிலேயே தயாரிக்க வேண்டும், அவைகளுக்காக நகரங்களை எதிர்பார்க்கக் கூடாது என்று அவர் கூறினர்.

இந்திய நகரங்களில் காணப்படும் செல்வம் ஏழைக் கிராமவாசிகளின் இரத்தத்தை உறிஞ்சித் திரட்டியதாகும். "நானே ஒரு கிராமவாசியாதலால், கிராமவாசிகளின் நிலைமை எனக்குத் தெரியும். கிராமப் பொருளாதாரம் எனக்குத் தெரியும். மேலேயுள்ள பளு அடியிலுள்ளவர்களை நசுக்குகிறது. அவர்களுடைய தோளிலிருந்து மற்றவர்கள் இறங்கினல் போதும்," என்றார் காந்திஜி.

இதன் காரணமாகவே கைராட்டையும், காதியும் முக்கியமானவை என்று அவர் கருதினர். சர்க்காவை நகைப்புக்குரிய பொருளாதாரச் சாதனம் என்று சிலர் கருதக்கூடும். கிராமவாசிகளின் பிழைப்புக்கு வழி செய்யக்கூடிய ஒரே சாதனமாக அதை காந்திஜி கருதியிருந்தால் அது நகைப்புக்குரியதுதான். ஆனல் அவர் அவ்வாறு கூறவேயில்லை. விவசாயத்தின் துணையான, உலக வியாபகமான தொழில் என்ற ஆதி அந்தஸ்தை கை நூற்புத் தொழில் மறுபடி பெறவேண்டும் என்றும், விவசாய வேலை இல்லாத ஓய்வு நேரத்தில் அத்தொழிலைக் கிராமவாசிகள் மேற்கொள்ளவேண்டும் என்றும் அவர் நினைத்தார் கிராமவாசியின் அற்ப வருமானத்தைச் சற்று அதிகரிக்கவும், அவருடைய துணிச் செலவை மிச்சப்படுத்தவும் சர்க்கா உதவும் என்று காந்திஜி கூறினர்.

பிரிட்டிஷ்காரர்கள் வருவதற்கு முன் நூற்புக் குடிசைத் தொழில் நாடெங்கிலும் மோடியாக நடந்து வந்தது; அவர்கள் பின்னர் அதை அழித்தனர். கை

விடப்பட்ட, பத்தாம்பசலிக் கைத்தொழில் அது என்று காந்திஜி கருதவில்லை. லட்சக்கணக்கான மக்கள் உப வருமானம் பெறுவதற்கும், இந்நாட்டின் செல்வம் வெளி யேறுவதைத் தடுப்பதற்கும் அதுதான் இயற்கையான, காரிய சாத்தியமான, இலகுவான வழி என்று அவர் எண்ணினார்.

"இந்திய மக்களுடைய ஒற்றுமையின் சின்ன மாகவும், பொருளாதார சுதந்திரத்தின் சின்னமாகவும், பொருளாதார சமத்துவத்தின் சின்னமாகவும் காதியை நான் மதிக்கிறேன். இறுதியில், ஜவஹர்லால் நேரு கவிதைப் பாணியில் குறிப்பிட்டதுபோல், இந்திய சுதந்திரத்தின் சீருடை அது."

**ஜனநாயகம்:** நாமாகவே கட்டுப்பாட்டுடன் நடந்து கொண்டால்தான் உண்மையான சுதந்திரத்தை அனுப விக்க முடியும். "கூட்டுச் சுதந்திர வாழ்வின் முதல் தேவை இஷ்டபூர்வமான கட்டுப்பாடுதான்." கட்டுப் பாடு, சகிப்புத்தன்மை, பரஸ்பர மரியாதை ஆகியவை இல்லாமல் ஜனநாயக வாழ்க்கைமுறை சாத்தியமல்ல. "சுயராஜ்யத்தின் மிக உயர்ந்த நிலையில் மிக அதிகமான கட்டுப்பாடும் பணிவும் அடங்கியுள்ளன." "பிறவியில் ஜனநாயகவாதியாக இருப்பவர் பிறவியிலேயே கட்டுப் பாடுவாதியாகவும் இருப்பார்."

தனிநபர் சுதந்திரத்தை காந்திஜி போற்றினார்; ஆனால் சமூக உறுப்பினன் என்ற முறையில் மனிதன் மிகுந்த கட்டுப்பாடுடன் தன் சுதந்திரத்தை அனுபவிக்க வேண்டும் என்று அவர் கருதினார். தனி மனித சுதந் திரத்தின் பெயரால் தனி நபர்கள் இஷ்டம்போல் நடப்பது தவறு, ஜனநாயகத்துக்கு முரணானது. "சுதந் திரத்தை அழிப்பதில் கொண்டுவிடக் கூடிய பாதை அது."

**"உண்மையான ஜனநாயக உணர்வை வளர்த்துக் கொள்ள நாம் விரும்பினால் சகிப்பில்லாமல் நடக்கக் கூடாது. ஒருவருக்குத் தம்முடைய வாதத்தில் நம்பிக்கை**

யில்லை என்பதைத்தான் சகிப்பின்மை வெளிப்படுத்து கிறது.'' அதுவே ஒருவகைப் பலாத்காரம்தான்; உண்மையான ஜனநாயக உணர்வு வளர்வதை அது தடுக்கிறது. எதிராளியின் கருத்தைக் கேட்பதற்கு ஒருவர் எப்போதும் தயாராய் இருக்கவேண்டும். நம் முடைய நம்பிக்கைகளின் பிரகாரம் நாம் பயமின்றிச் செயல் புரியவேண்டும் என்றாலும், "நாம் எப்போதும் திறந்த உள்ளத்துடன் இருக்கவேண்டும்; உண்மை என்று நாம் நம்பியது உண்மையல்ல என்று பின்னர் தெரியவரலாம் என்பதை உணர்வதற்கு எப்போதும் தயாராய் இருக்கவேண்டும். இந்தத் திறந்த உள்ளம் நம்மிடம் இருக்கும் உண்மையை வலுப்படுத்தி அதில் இருக்கக்கூடிய மாசுமருவை அகற்றுகிறது. தாம் சொல்வதே சரி என்று எவரும் ஏகபோக உரிமை கொண்டாட முடியாது. நாம் எல்லோரும் தவறு செய்யும் இயல்பு உள்ளவர்கள்தாம்; முந்திய அபிப் பிராயங்களையோ முடிபுகளையோ மாற்றிக்கொள்ள வேண்டிய நிலைமை நமக்கு அடிக்கடி ஏற்படுகிறது. தனி நபர்களும், மக்கட் பிரிவினர்களும் தங்கள் சிந்தனைகளை வெளியிடச் சுதந்திரமும் வாய்ப்பும் இருக்கவேண்டும்; என்றாலும், "எதிராளியின் கருத்தைப் புரிந்துகொள்ள முயலவேண்டும்; அதை நாம் ஏற்றுக்கொள்ளாவிடினும் நம் கருத்தை அவர் மதிக்க வேண்டும் என நாம் எதிர் பார்ப்பது போல் அவர் கருத்தையும் நாம் மதிக்க வேண்டும்; நமக்கும் மற்றவர்களுக்கும் நாம் செய்ய வேண்டிய கடமை இது.''

அசத்தியமான அல்லது பலாத்கார வழியில் உண்மையான ஜனநாயகத்தைப் பெறமுடியாது என்று காந்திஜி கருதினார். "ஜனநாயக உணர்வை வெளியி லிருந்து திணிக்க முடியாது, உள்ளிருந்தே அது எழவேண்டும்.'' ஜனநாயக அமைப்பிலே பலவானுக்குச் சமமான வாய்ப்பு பலவீனனுக்கும் கிடைக்கவேண்டும். "அஹிம்ஸையின் மூலமாகவன்றி வேறு எந்த வழியிலும் இந்நிலைமை ஏற்பட முடியாது. இன்று உலகில் உள்ள

எந்த நாடும் பலவீனர்களிடம் வள்ளல் மனப்பான்மை யுடன்தான் நடந்து கொள்கிறது.''

**தீண்டாமை :** 'தீண்டத்தகாதவர்கள்' என்று கருதப் பட்டவர்களை 'ஹரிஜனங்கள்' என்று காந்திஜி அழைத் தார். அவர்களிடம்தான் அவர் மிகுந்த சிரத்தை கொண்டிருந்தார், அவர்களுக்குத்தான் அவர் மிக அதிகமான தொண்டு ஆற்றினார். தீண்டாமையை ஒழிப்பது காந்திஜியின் மிக முக்கியமான வாழ்க்கைப் பணிகளுள் ஒன்றாக விளங்கியது. "தீண்டாமையை வேரோடு ஒழிப்பதுதான் என் ஆசை, அதற்காகவே நான் உயிர் வாழ்கிறேன், அதற்காகவே நான் மகிழ்ச்சி யுடன் உயிரைக் கொடுப்பேன்.'' நம்முடைய சமூகம் மிகத் தாழ்ந்த நிலையில் இருந்த காலத்தில் இந்த விஷம் அதில் புகுந்திருக்க வேண்டும் என்றும், அப்போது முதல் நம்மை அது விடாமல் பிடித்துக்கொண்டிருக் கிறது என்றும் அவர் கருதினார்.

ஹரிஜனங்கள் அனுமதிக்கப்படாத ஆலயங்களுக்குத் தாம் செல்வதற்கு காந்திஜி மறுத்துவிட்டார்.

**பெண்கள் :** பெண்மையைப் போற்றியது காந்திஜியின் மிகச் சிறந்த பண்புகளுள் ஒன்று. தியாகம், கஷ்டப் படுதல் என்ற குணங்களின் ஸ்தூல உருவங்களாக மாதர்களை அவர் மதித்தார். "எல்லையற்ற அன்பு என்பது அஹிம்ஸையின் பொருள், கஷ்டப்படுவதற்கு அளவற்ற சக்தி என்பது அன்பின் பொருள். மனிதனின் தாயாகிய பெண்ணைத் தவிர வேறு யாரிடம் இந்தச் சக்தி மிக அதிக அளவில் இருக்கிறது?'' "கணவனுக்கு மனைவி அடியோடு கீழ்ப்படிய வேண்டும் என்றும், மனைவி தனித்துவம் இன்றி கணவனுடன் ஒன்றிவிடவேண்டும் என்றும் ஹிந்துக் கலாச்சாரம் வற்புறுத்தியிருப்பது தவறு. இதன் விளைவாக, சில சமயங்களில் கணவன் மீண்டும் கீழ் நிலைக்கு இழியும் விதத்தில் அதிகாரத்தை முறையின்றிப் பிரயோகிக்க நேரிடுகிறது'' என்று அவர் எண்ணினார்.

பெண்களின் உரிமைகள் சம்பந்தப்பட்டவரை காந்திஜி சிறிதும் விட்டுக் கொடுக்க மறுத்துவிட்டார். ஆணுக்கு இல்லாத சட்ட ரீதியான விலங்கம் எதுவும் பெண்ணை வருத்தக் கூடாது என்று அவர் கருதினார். பிள்ளைகளுக்கு முற்றிலும் சமமாகப் பெண்களை நடத்த வேண்டும் என்று அவர் குறிப்பிட்டார்.

**தேசிய பாஷை:** நம்முடைய பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் தாய்மொழிகளில் கல்வி போதிக்க வேண்டும் என்றும், ஹிந்தியை நாட்டின் பொதுத் தொடர்பு மொழியாகக் கைக்கொள்ள வேண்டும் என்றும் காந்திஜி கருதினார். "எளிய ஹிந்தியும் எளிய உருதுவும் கலந்து உருவான" ஹிந்துஸ்தானிதான் பொதுமக்களின் பாஷையாக இருக்க முடியும் என்றும், எல்லா மாகாணங்களைச் சேர்ந்த இந்தியர்களுக்கும் பொது மொழியாக இருப்பதற்கு அது பொருத்தமானது என்றும் அவர் கூறினார்.

தனிநபரின் வளர்ச்சிக்கு

நல்லது செய்யவேண்டும் என்ற உள்ளுணர்வு நம்மிடம் எப்போதும் இருக்கிறது; அதைச் சரியான முறையில் வளர்ப்பதுதான் நாம் செய்யவேண்டிய காரியம். "மனித குலத்தின் நலனுக்காக நாம் இடையருமல் பாடுபடவேண்டும் என்பதுதான் மிக உன்னதமான தார்மிக நியதி" என்ற போதனை இந்நூலின் ஏழாவது பகுதியில் அடங்கியிருக்கிறது. சுயநலமின்றிச் சகோதர மனிதர்களுக்குத் தொண்டாற்றுவதுதான் வாழ்க்கையின் மகோன்னதக் குறிக்கோள். தம்முடைய சொந்த நலனுடன் மற்றவர்களின் நலனும் பின்னிப் பிணைந்திருக்கிறது என்பதை ஒவ்வொருவரும் உணர வேண்டும். மற்றவர்களுக்குச் சேவை செய்வதற்காகத் தம்மை அர்ப்பணித்துக்கொண்டவருக்குத் தம்மையோ, தம் வசதிகளையோ பற்றி நினைப்பதற்கு அவகாசமே இருக்காது. "நம்முள் தெய்வீகத் தன்மை இருக்கிறது என்பதை நாம் உணர்ந்துகொண்டால், தெய்வ பயத்

யைத் தவிர இந்த உலகில் வேறு எந்தப் பயமும் நம்மிடம் இருக்காது.'' இந்த உணர்வு காரணமாக, வாழ்வின் பிரச்சினைகளைப் பணிவுடனும், உறுதியுடனும், பயமின்றியும் நாம் சமாளிக்க முடியும்.

உடம்புக்கு ஓரளவு சௌகரியமும் வசதியும் அவசியம்தான் என்றாலும், "சொந்த அறிவுத் தேவைகள் உட்பட ஒருவருடைய உடல் தேவைகளைத் திருப்தி செய்து கொள்வது ஒரு அளவை எட்டியவுடன் அடியோடு நின்றுவிட வேண்டும்; இல்லாவிடில் அவை உடலின்ப வேட்டையாகவும் அறிவு வேட்டையாகவும் இழிந்து விடும்'' என்று காந்திஜி கருதினார். "மனம் என்பது அமைதியற்ற ஒரு பறவை; எவ்வளவு கிடைத்தாலும் இன்னும் வேண்டும் என்று அது கேட்கும், பின்னரும் அதற்குத் திருப்தி ஏற்படாது.'' போதுமென்ற மனம்தான் மனிதனுக்கு உண்மையான இன்பம் அளிக்க வல்லது.

இதே காரணத்தினால் அவர் பிரம்மச்சரியத்துக்கு மிகுந்த முக்கியத்துவம் அளித்தார். பிரம்மச்சரியத்துக்கு அவருடைய விளக்கம் வருமாறு: "ஒருவரைக் கடவுளுடன் தொடர்புபடுத்தும் ஒழுக்கம் அது எல்லாப் புலன்களையும் பூரணமாகக் கட்டுப்படுத்துவதே அந்த ஒழுக்கம். அச்சொல்லுக்கு உண்மையான பொருத்தமான பொருள் இதுதான்.'' பரிபூரணத் துறவு இலட்சிய நிலையாகும்; ஆனால் "அதைப் பற்றிச் சிந்திக்கவே உங்களுக்குத் துணிவு இல்லாவிடில், தாராளமாய்த் திருமணம் செய்துகொள்ளுங்கள்; ஆனால் அப்போதும் தன்னடக்கத்துடன் வாழுங்கள்'' என்று அவர் கூறினார்.

### மனிதக் குடும்பம்

காந்திஜியின் வாழ்க்கையும் உபதேசங்களும் மனித குலம் முழுவதற்கும் ஆதரிசம் அளிப்பவை. அவர் பிரதானமாக, மனிதனின் மனச்சாட்சியைக் கவர்கின்ற மத, தார்மிகச் சக்தியாக விளங்கினார். மதங்கள், நாடுகள், இனங்கள் என்ற பேதங்களை அவர் பொருட்

படுத்தவில்லை. அதனால் அவர் ஒரு மாபெரும் சர்வ தேசியவாதியாக இருந்தார்; அடிப்படை மனித ஒற்றுமையிலும் சர்வதேச ஒற்றுமையிலும் அவர் நம்பிக்கை கொண்டிருந்தார். "இந்திய மக்களிடையே என்னைக் கடவுள் பிறப்பித்திருப்பதால், அவர்களுக்கு நான் சேவை செய்யாவிடில் என்னைப் படைத்தவருக்குத் துரோகம் செய்தவனுவேன். அவர்களுக்கு எவ்வாறு தொண்டாற்றுவது என்பதை நான் அறியாவிடில் மனித குலத்துக்கு எவ்வாறு தொண்டாற்றுவது என்பதை நான் ஒருகாலும் அறிய முடியாது. என் நாட்டுக்குச் சேவை செய்யும்போது, மற்ற நாடுகளுக்குத் தீங்கிழைக் காதவரை நான் தவறு எதுவும் செய்ய நேரிடாது," என்ற அவருடைய உபதேசத்தை எட்டாவது கடைசிப் பிரிவில் காணலாம்.

ஒரு நபரோ, ஒரு நாடோ எதையும் தனக்கே உரியது என்று கருதுவதற்கு அவருடைய அஹிம்சை இடம் கொடுக்கவில்லை. இந்தியாவை அவர் தலைசிறந்த தேசமாகப் போற்றினுர் என்றுல், தந்நலத்தியாகம் புரியும் கலையில் உலகத்துக்கே அது தலைமை தாங்க முடியும் என்று அவர் நம்பியதே அதற்குக் காரணம்.

# I. கடவுள்தான் உண்டு

எல்லாவற்றிலும் பரவி நிற்கும் மர்ம சக்தி ஒன்று இருக்கிறது. அது எத்தகையது என்று வரையறுத்துச் சொல்ல முடியாது. அதை என்னல் பார்க்க முடிய வில்லை, ஆனல் அதை உணர்கிறேன். கண்ணுக்குப் புலனாகாத அந்தச் சக்தி, தான் இருப்பதை உணர்த்து கிறது ; ஆனல் நிரூபணத்துக்கு அது அண்டுபடுவதில்லை. ஏனெனில் புலன்களின் வாயிலாக நான் உணரும் எல்லாப் பொருட்களிலுமிருந்து அது முற்றிலும் வேறு பட்டிருக்கிறது. அது பகுத்தறிவுக்குப் புறம்பானது. ஆயினும், கடவுள் இருப்பதைப் பகுத்தறிவின் மூலமும் ஓரளவுக்கு நிரூபிக்க முடியும்.

என்னைச் சுற்றிலும் உள்ள எல்லாப் பொருட்களும் மாறிக் கொண்டேயிருக்கின்றன, மரித்துக் கொண்டே யிருக்கின்றன. இந்த மாறுதல்களின் மையத்தில் மாருத ஜீவ சக்தி ஒன்று இருக்கிறது ; அது எல்லா வற்றையும் பிணைக்கிறது ; அது படைத்து அழித்து மீண்டும் படைக்கிறது—இதெல்லாம் மங்கலாக எனக் குப் புலனாகிறது. இவ்வாறு வியாபித்திருக்கும் சக்தி அல்லது சூட்சுமப் பொருளே கடவுள். வெறும் புலன் களால் நான் உணர்கின்ற வேறு பொருள் எதுவும் நிலைத்திருக்க முடியாது, நிலைத்திருக்கப் போவதும் இல்லை. ஆகவே அவர்தான் உண்டு.

இந்தச் சக்தி நல்லதா அல்லது தீயதா ? அது முற்றிலும் நல்லது என்பதைக் காண்கிறேன். ஏனெ னில் சாவின் மத்தியில் வாழ்வு நிலைத்திருப்பதையும், அசத்தியத்தின் மத்தியில் சத்தியம் நிலைத்திருப்

பதையும், இருளின் மத்தியில் ஒளி நிலைத்திருப்பதையும் என்னால் பார்க்க முடிகிறது. ஆகவே கடவுள் என்றால் வாழ்வு, சத்தியம், ஒளி என்பதை நான் தெரிந்துகொள்கிறேன். அன்பு, ஆவல் மகோன்னதமான நன்மை அவர்.

நாம் எல்லாரும் உணர்கின்ற, விளக்க முடியாத, நமக்குப் புரியாத ஒரு வஸ்து கடவுள். எனக்குக் கடவுளே சத்தியமும் அன்பும்; கடவுளே அறநெறியும் ஒழுக்கமும். கடவுள் என்பது அஞ்சாமை. ஒளிக்கும் வாழ்வுக்கும் ஊற்றுக் கண் கடவுள்; ஆயினும் இவை எல்லாவற்றையும் கடந்து உயர்ந்து நிற்பவர் அவர். கடவுள் என்பவர் மனச்சாட்சி. நாத்திகனின் நாத்திகம்கூட அவர்தான்.........சொல்லுக்கும் பகுத்தறிவுக்கும் அப்பாற்பட்டவர் அவர்.........அவருடைய உருவப் பிரசன்னம் தேவைப்படும் மனிதர்களுக்கு அவர் உருவமுள்ள ஒரு கடவுள். அவருடைய ஸ்பரிசம் தேவைப்படுவோருக்கு அவர் தேகத்துடன் இருக்கிறார். அவர் பரம பரிசுத்தமான சாரப்பொருள். நம்பிக்கை உள்ளவர்களுக்கு அவர் உண்டு. அவர் எல்லா மனிதர்களுக்கும் எல்லாப் பொருட்களாகவும் இருக்கின்றார். அவர் நம்முள் இருக்கிறார்; அதோடு நம்மைக் கடந்து, உயர்ந்தும் நிற்கிறார்.........அவர் மிகுந்த சகிப்புத் தன்மை வாய்ந்தவர். அவர் பொறுமை உள்ளவர், ஆனால் பயங்கரமானவரும் கூட.........அறியாமல் செய்துவிட்டதாகச் சொல்லி அவரிடம் மன்னிப்புப் பெறமுடியாது. ஆயினும் அவர் எப்போதும் மன்னிக்கிறார்; ஏனெனில் நாம் கழிவிரக்கம் கொள்வதற்கு அவர் எப்போதும் வாய்ப்பளிக்கிறார். உலகம் அறிந்த மிகப்பெரிய ஜனநாயகவாதி அவர்தான்; ஏனெனில், தீயது அல்லது நல்லதை நாமே தெரிந்தெடுத்துக் கொள்ளும்படி நம்மை அவர் 'வில்லங்கமின்றி' விட்

டிருக்கிறார்; உலகம் அறிந்தவரை அவரே மிகமிகக் கொடியவர்; ஏனெனில், பருகுவதற்காக உதட்டருகே நாம் கொண்டுபோகும் பானக் கிண்ணத்தை அவர் அடிக்கடி தட்டிவிட்டு நொறுக்குகிறார்; சுயேச்சை உள்ளம் என்ற போர்வையின் கீழ் அவர் நமக்கு மிகக் குறைவான சுயேச்சையையே கொடுத்திருக்கிறார்; இதன் வாயிலாக அவர் ஒருவருக்கே மகிழ்ச்சி கிடைக்கிறது.........அதனால்தான் ஹிந்து மதம் இதை அவருடைய லீலை என்று குறிப்பிடுகிறது.

தம்முடைய சிருஷ்டிகளால் நிரூபிக்கத் தக்க பொருளாக இருப்பதற்குக் கடவுள் தம்மை அனுமதித்தால் அவர் கடவுளாக இருக்க முடியாது. ஆனால் மிகப் பயங்கரமான சோதனைகளைக் கடப்பதற்கு வேண்டிய சக்தியைத் தன்னிச்சையாக முன் வரும் தம்முடைய அடிமைக்கு அவர் கொடுக்கத்தான் செய்கிறார். மிகக் கடுமையாக வேலைவாங்கும் அந்த எஜமானருக்கு இஷ்டபூர்வமான அடிமையாக அரை நூற்றாண்டுக்கு மேலாக நான் இருந்து வருகிறேன். ஆண்டுகள் செல்லச் செல்ல அவருடைய குரலோசையும் வலுத்து வந்திருக்கிறது. மிக்க இருள்மயமான வேளையிலும் அவர் என்னைக் கைவிட்டதேயில்லை. அவர் பலமுறை என்னிடமிருந்தே என்னைக் காப்பாற்றியிருக்கிறார்; என்னிடம் இம்மி சுதந்திரம் கூட விட்டு வைத்ததில்லை. நான் எவ்வளவு அதிகமாக அவரைச் சரணடைந்தேனோ அவ்வளவு அதிகமான ஆனந்தத்தைப் பெற்றிருக்கிறேன்.

கடவுள் இருப்பதைத் தர்க்க வாதத்தின் மூலம் நிரூபிப்பதற்கு ஆதாரமாக எண்ணற்ற காட்சிகள்

உள்ளன. ஆனால் பகுத்தறிவு பூர்வமான அத்தகையை விளக்கம் கொடுத்து உங்கள் அறிவை நான் அவமதிக்கப் போவதில்லை. பகுத்தறிவு விளக்கங்களை யெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு, அப்பாவிக் குழந்தை யைப் போல நீங்கள் கடவுளிடம் நம்பிக்கை கொள்ளத் தொடங்கவேண்டும் என்று விரும்புகிறேன். நான் இருக்கிறேன் என்றால் கடவுளும் இருக்கிறார். கோடானு கோடி மனிதர்கள் உயிர்வாழ்வதற்கு அந்த நம்பிக்கை அவசியமானது, அதுபோலத் தான் எனக்கும் அவசிய மானது.

ஒரு மனிதன் உண்மையிலேயே கடவுளின் குரலைக் கேட்டுவிட்டான் என்றால் அவன் பின்னர் பின்வாங்கவே முடியாது; நீச்சல் கற்றுக்கொண்ட ஒருவனால் அதை மறக்க முடியாது என்பது போலத்தான் இதுவும். அந்தக் குரலுக்குச் செவிசாய்த்துக் கொண்டிருந்தால் மனிதர் களின் வாழ்க்கை நாளுக்கு நாள் மேலும் மேலும் வளம் பெறும்.

செவி சாய்ப்பதற்குத் தகுதி இருந்தால்தான் இவ்வாறு செவிசாய்க்க முடியும்; பொறுமையுடன் இடைவிடாமல் முயற்சி செய்து, கடவுளுக்குப் பணிவிடை புரிந்தால்தான் இவ்வாறு தகுதிபெற முடியும். ஒரு புல்லின் நுனியைப் போன்ற சின்னஞ்சிறு வடிகட்டியின் வழியே கடலை வடியவைக்க முயல்வது போன்ற காரியம் இது என்று சங்கராச்சாரியார் கூறி யிருக்கிறார். ஆகவே இந்த முயற்சி முடிவற்றது என்பது தெளிவு, ஜன்ம ஜன்மாந்தரங்களாக அது தொடர்ந்து கொண்டே போகும். எனினும், சுவாசிப்பதையும் கண்ணிமைப்பதையும் போல இந்த முயற்சியும் இயல்பாகவே நடக்கவேண்டும்; நம்மை அறியாமலே சுவாசிக்கிறோம், கண்ணிமைக்கிறோம். வாழ்க்கை முழுதும் இம்முயற்சி வியாபிக்கிறது. அனவரதமும்

முயல்வது என்ற இந்த மார்க்கம் மாத்திரமே நம்மை நேருக்கு நேராகக் கடவுளிடம் கொண்டுவிடக்கூடியது; இதை உங்களுக்குச் சிபாரிசு செய்கிறேன்.

உடம்பெடுத்த உயிர்கள் என்ற முறையில் நாம் கணநேரமே உயிர்வாழ்கிறோம்; எல்லையற்ற காலத்தில் ஒரு நூறு ஆண்டுகள் என்பது எம்மாத்திரம்? ஆனால் அகங்கார விலங்கை நாம் உடைத்தெறிந்து, மனிதக் கடலில் ஒன்றிக் கலந்து விட்டால், அக்கடலின் பெருமை யில் நாமும் பங்கு பெறுகிறோம். நாம் ஒரு தனிப் பொருள் என்று எண்ணுவது கடவுளுக்கும் நமக்கும் இடையே ஒரு தடை மதிலை எழுப்புவதாகும்; நாம் ஒரு தனிப்பொருள் என்பதை மறந்து விடுவது கடவுளுடன் ஒன்றிக் கலப்பதாகும். கடலின் ஒரு துளியானது தன் தந்தையான கடலின் பெருமையில் தன்னையறியாமலே பங்கு பெறுகிறது. ஆனால், கடலினிடமிருந்து பிரிந்து அது தனியாக வாழ முற்படும்போது, உடனடியாக உலர்ந்து போய்விடுகிறது. வாழ்க்கை ஒரு நீர்க்குமிழி தான் என்று நாம் பேசுவதில் உயர்வு நவிற்சியே இல்லை.

தொண்டு புரியும் வாழ்க்கை பணிவுள்ள வாழ்க்கை யாகவும் இருக்கவேண்டும். மற்றவர்களுக்காகத் தன்னுடைய வாழ்க்கையைத் தியாகம் செய்யக்கூடிய ஒருவனுக்குத் தன் சொந்த வாழ்வுக்கு வழிசெய்து கொள்ள அவகாசமே இருக்காது. சும்மாயிருப்பதே பணிவு என்று தவறாக எண்ணக்கூடாது; ஹிந்து மதம் அவ்வாறு கூறுவதாகத் தப்பர்த்தம் செய்து கொள்ளப் படுகிறது. மனித வர்க்கத்துக்குச் சேவை செய்வதற் காகக் கடுமையாக, அனவரதமும் பாடுபடுவதுதான் உண்மையான பணிவு ஆகும். கடவுள் ஒரு விநாடிகூட ஓய்வெடுத்துக் கொள்ளாமல் செயல் புரிந்து கொண்டே யிருக்கிறார். அவருக்கு நாம் தொண்டு செய்ய வேண்டும், அல்லது அவருடன் ஒன்றிக் கலக்க வேண்டும் என்றால், நாமும் அவரைப் போலவே அலுப்புச் சலிப்பின்றி செயல் புரிந்து கொண்டேயிருக்க வேண்டும். கடலி லிருந்து பிரிந்த நீர்த்துளிக்குக் கணநேர ஓய்வு கிடைக்க

லாம்; ஆனால் கடலுடன் கலந்திருக்கும் நீர்த்திவலைக்கு ஓய்வே கிடையாது. நமக்கும் அதைப்போலத்தான். கடவுள் என்ற கடலுடன் நாம் கலந்துவிட்டால், பிறகு நமக்கு ஓய்வே கிடையாது, ஓய்வும் தேவைப்படாது. நம் உறக்கம் கூடச் செயலாகிவிடும். ஏனெனில் நம் இதயத்தில் தெய்வ சிந்தனையுடன் உறங்குவோம். இந்த ஓய்வின்மைதான் உண்மையான ஓய்வு. முடிவற்ற இந்தச் சலனத்தில்தான் சொல்லுக்கடங்காத சாந்திக்கு வழி உள்ளது. பரிபூரணச் சரணாகதி என்ற இந்த மகோன்னத நிலையை வர்ணிப்பது கஷ்டம், ஆனால் அது மனிதனின் அனுபவத்துக்குப் புறம்பானது அல்ல பரம பக்தர்கள் பலருக்கு அந்த நிலை கைவரப் பெற்றுள்ளது, நாமும் அதை எட்டிப் பிடிப்பது சாத்தியமாகலாம்.

ஒருவர் தம்மையே அறிந்து கொள்வதுதான் வாழ்க்கையின் குறிக்கோள் என்பதில் ஐயமில்லை. எல்லாச் சீவராசிகளுடனும் நம்மைச் சமமாக எண்ணு கின்ற பரிபக்குவத்தை நாம் பெறாவிடில் இது சாத்தியம் அல்ல— அந்தச் சீவன்கள் எல்லாம் சேர்ந்த சீவன்தான் கடவுள். அதனால்தான், நம் ஒவ்வொருவருள்ளும் கடவுள் உறைகிறார் என்பதை உணர்வது அவசியமாகிறது. வரம்பற்ற, தந்நலமற்ற சேவை புரிவதுதான் இந்த ஞானத்தைப் பெறுவதற்கான சாதனம்.

அவனின்றி ஓர் அணுவும் அசையாது என்ற முது மொழியில் அடங்கியுள்ள உண்மையை நான் முழுக்க முழுக்க நம்புகிறேன்......

தீமை ஏன் இருக்கிறது என்பதற்குத் தர்க்க வாதத் தினால் காரணம் காட்ட என்னால் முடியாது. அவ்வாறு விளக்க முற்படுவது கடவுளுக்குச் சமதையாக நம்மைக்

கருதுவதாகும். ஆகவே, தீமை இருக்கிறது என்பதை உணர்வதுடன் நான் பணிவாக நின்று விடுகிறேன். உலகில் தீமை நிலவுவதைக் கடவுள் அனுமதிக்கிறார் என்பதால்தான், அவரை மிகுந்த சகிப்புத்தன்மையும் பொறுமையும் வாய்ந்தவர் என்று நான் குறிப்பிடுகிறேன். அவரிடம் தீயது எதுவும் கிடையாது என்பது எனக்குத் தெரியும்; ஆனால் தீமை என்பது இருக்கிறது, அதை உண்டாக்கியவர் அவரே; ஆயினும் அது அவரைத் தீண்டுவதில்லை.

என் உயிரையும் பொருட்படுத்தாமல் தீமையை எதிர்த்து நான் போராடாவிட்டால் கடவுளை என்னால் ஒருக்காலும் அறிந்து கொள்ள முடியாது என்பதையும் நான் அறிவேன். அடியேனுடைய குறுகிய அனுபவம் காரணமாக இந்த நம்பிக்கை உறுதிப்படுகிறது. என்னை மேலும் மேலும் தூய்மைப்படுத்திக்கொள்ள முயலும் போது, கடவுளை நான் மேலும் மேலும் நெருங்குவதாக உணர்கிறேன். இமயமலையைப் போல அசைக்க முடியாததாகவும், அதன் சிகரங்களின் பனிக்கட்டியைப் போல வெண்மையும் ஒளியும் வாய்ந்ததாகவும் என் நம்பிக்கை இருந்தால் அவருக்கு இன்னும் எவ்வளவு அண்மையில் நான் இருக்க முடியும்! இப்போது ஓரளவுக்குத்தான் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. அதற்கிடையே, நியூமன் அனுபவ ரீதியாகப் பாடியது போல் நானும் பிரார்த்தனை செய்கிறேன் :

“கருணை ஒளியே வழிகாட்டு,
கப்பிய சூழ் இருளில்
நீ வழிகாட்டு;
இருள் நிறைந்த இரவு,
என் இல்லமோ வெகுதூரம்,
நீ வழிகாட்டு;
நீயே என்கால்களை நடத்து ;
தொலைவுக் காட்சியைக் காட்டெனக்
கூறவில்லை; ஓரடி எடுத்து
வைத்தாலே போதும் எனக்கு.”

நான் அறிந்தவரை, இந்த உலகிலேயே, மிகக் கடுமையாகக் கசக்கிப் பிழியும் எசமானர் கடவுள்தான். அவர் மறுபடியும் மறுபடியும் நம்மைச் சோதிக்கிறார். நம் நம்பிக்கை தளரும்போது, நம் தேகம் தகரும் போது, நாம் சோர்ந்து சாயும்போது அவர் எப்படி யாவது நமக்கு உதவி செய்ய வந்து விடுகிறார்; நம்பிக்கையை நாம் இழக்கக் கூடாது என்றும் நாம் கூப்பிட்டவுடன் தாம் வரத் தயாராய் இருப்பதாகவும் அவர் எடுத்துக் காட்டுகிறார். ஆனால் வருவது அவர் இஷ்டத்தைப் பொறுத்தது, நம் விருப்பத்தைப் பொறுத்ததல்ல.

கடவுள் சிரேஷ்டமானவர், கருணை நிறைந்தவர். தாங்கமுடியாத அளவுக்குத் தம் அடியார்களை அவர் சோதிக்கமாட்டார்.

வாழ்க்கை யாத்திரையில் நாம் முன்னேறிச் செல்லும்போது பிரச்சினைகள் எழுந்தவண்ணம் இருக் கின்றன, அவைகளை நாம் தீர்க்க வேண்டியிருக்கிறது. ஏறக்குறைய கடவுளைப் போன்ற குரலில் சைத்தான் பேசும்போதுதான் பிரச்சினைகளைச் சமாளிப்பது மிகவும் கஷ்டமாகிவிடுகிறது. (கடவுளிடம்) பரிபூரண நம்பிக் கையும், முழுத் தூய்மையும், அளவற்ற பணிவும் இருந்தால்தான் நாம் சரியான முடிவுக்கு வரமுடியும்.

ஹிந்து சாத்திரங்கள் குறிப்பிடும் கடவுளின் சஹஸ்ர நாமங்களைப் பாராயணம் செய்யும்படி இளம்

பிராயத்தில் எனக்குப் போதித்தார்கள். ஆனால் கடவுளுக்கு இந்த ஆயிரம் பெயர்கள் தாம் உண்டு என்பதில்லை. எத்தனை சீவராசிகள் உள்ளனவோ அத்தனை நாமங்கள் ஆண்டவனுக்கு உண்டு என்று நாம் நம்புகிறோம்; இது உண்மை என்பது என் கருத்து. அதனால்தான் கடவுளைப் பெயரில்லாதவர் என்றும் நாம் குறிப்பிடுகிறோம். கடவுளுக்கு எத்தனையோ உருவங்கள் இருப்பதால் அவரை உருவற்றவர் என்றும் நாம் கருதுகிறோம். அவர் எத்தனையோ மொழிகளில் பேசுவதால் அவரைப் பேச்சற்றவர் என்றெல்லாம் கருதுகிறோம். இவ்விதமே இஸ்லாத்தை நான் ஆராய்ந்தபோது, இஸ்லாத்திலும் ஆண்டவனுக்கு எண்ணற்ற பெயர்கள் இருப்பதாகக் கண்டேன்.

கடவுளே அன்பு என்று சொல்வோருடன் சேர்ந்து கடவுளே அன்பு என்று நானும் சொல்லுகிறேன். எனினும் 'கடவுளே அன்பாக இருக்கலாம்; ஆனால் கடவுளே சத்தியம் என்பதுதான் எல்லாவற்றையும் விட முக்கியமானது' என்று மனதுக்குள் சொல்லிக் கொள்வது என் வழக்கம். மனித நாவினால் கடவுளைப் பூரணமாக வருணிப்பது சாத்தியமானால் 'கடவுளே சத்தியம்' என்று வருணிக்க வேண்டும் என்பது என்னுடைய முடிவு. ஈராண்டுகளுக்கு முன் நான் இதற்கும் ஓரடி மேலேசென்று, 'சத்தியமே கடவுள்' என்று குறிப்பிட்டேன். 'கடவுளே சத்தியம், சத்தியமே கடவுள்' என்ற இரு வாசகங்களுக்கும் இடையே உள்ள நுண்ணிய வேறுபாட்டை நீங்கள் கவனிக்க வேண்டும். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்தொடங்கி, இடைவிடா மலும் மும்முரமாகவும் சத்தியத்தைத் தேடிய பின்னர் நான் அந்த முடிவுக்கு வந்தேன். சத்தியத்துக்கு மிகவும் அண்மையானது அன்பு என்று அப்போது நான் கண்டேன்; ஆனால் ஆங்கில பாஷையில் 'லவ்' (அன்பு) என்ற சொல்லுக்குப் பல பொருட்கள் இருப்பதையும் கண்டேன், புலன் வெறி என்ற பொருளில் வரும் மனித அன்பு கீழ்த்தரமானது என்பதையும் உணர்ந்தேன்.

அஹிம்ஸை என்ற பொருளில் வரும் அன்பைக் கடைப் பிடிப்பவர்கள் இவ்வுலகில் சொற்பமானவர்களே என்பதையும் தெரிந்துகொண்டேன். ஆனால் சத்தியத் துக்கு இரண்டு அர்த்தங்களை நான் கண்டதில்லை; சத்தியத்தின் சக்தி அவசியமானது என்பதை நாத்திகர் கள் கூட மறுத்ததில்லை. ஆனால் சத்தியத்தைக் கடை பிடிக்கும் வெறியில் நாத்திகர்கள் கடவுளை இல்லை என்று தயங்காமல் கூறுகிறார்கள்; அவர்களுடைய கருத்தின்படி இது சரியே. இந்தத் தர்க்கவாதம் காரண மாக, 'கடவுளே சத்தியம்' என்பதைவிடச் 'சத்தியமே கடவுள்' என்று சொல்வது சிறந்தது என்று நான் நினைத்தேன்......தவிர, கோடிக்கணக்கானவர்கள் கடவுளின் நாமத்தைப் பயன்படுத்தி, அவருடைய பெயரால் எத்தனையோ விதமான அட்டூழியங்களைப் புரிந்திருக்கிறார்கள். ஆனால் சத்தியத்தின் பெயரால் விஞ்ஞானிகள் அடிக்கடி அட்டூழியங்கள் செய்வதில்லை என்றும் கூறமுடியாது......ஹிந்துத் தத்துவத்தில் இன் னொரு விஷயமும் இருக்கிறது— கடவுள்தான் உண்டு, வேறு எதுவும் இல்லை என்பதே அது. இஸ்லாத்தின் 'கல்மா'விலும் இதே உண்மை உதாரண பூர்வமாக வலியுறுத்தப்பட்டுள்ளது. கடவுள்தான் உண்டு. வேறு எதுவும் இல்லை என்று அங்கு தெட்டத் தெளிவாகக் குறிப்பிடப்பட்டிருப்பதை நீங்கள் காணலாம். உண்மை என்பதைக் குறிக்கும் 'சத்' என்ற வார்த்தைக்கு 'இருக்கும்' பொருள் என்பது தான் நேரடியான அர்த்தம். இவற்றாலும், வேறு காரணங்களினாலும், 'சத்தியமே கடவுள்' என்ற விளக்கம்தான் மிகவும் திருப்திகரமானது என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன். கடவுளை சத்திய ரூபமாகக் காண்பதற்கு நாம் விரும்பி னால், அதற்குரிய ஒரே சாதனம் அன்புதான். அதாவது அஹிம்ஸைதான். இலட்சியங்களும் மார்க்கங்களும் இறுதியில் ஒரே பொருளைக் கொண்டவை என்று நான் கருதுவதால், கடவுளே அன்பு என்று சொல்வதற்கும் தயங்கமாட்டேன்.

அப்படியானல், 'சத்தியம்' என்பது என்ன? இது ஒரு கஷ்டமான கேள்வி. ஆனல் என்னைப் பொறுத்த வரை அதற்கு நான் விடை கண்டுவிட்டேன்; அதாவது, நம் அந்தராத்மா என்ன சொல்கிறதோ அதுவே சத்தியம். அப்படியென்ருல், வேறுபட்ட, மாறுபட்ட சத்தியங்களைப் பல்வேறு மனிதர்களும் சிந்திப்பது ஏன் என்று நீங்கள் கேட்கலாம். எண்ணற்ற வழிகளில் மனிதமனம் இயங்குகிறது, எல்லா மனிதர்களின் மனங்களும் ஒரே மாதிரியான பரிணமம் பெற்றவை அல்ல. ஆகவே ஒருவருக்குச் சத்தியமாகத் தோன்றுவது இன்னொருவருக்கு அசத்தியமாகத் தோன்றும். அதனல், இந்தச் (சத்திய) சோதனைகளைச் செய்யும் போது சில நிபந்தனைகளைக் கவனிக்கவேண்டும் என்று அவ்வாறு சோதனை செய்துள்ளவர்கள் கருதுகின்றனர்.

எத்தகைய ஒழுங்கு முறையையும் கடைப்பிடிக்காமல், மனச்சாட்சிப்படி நடக்கும் உரிமை தங்களுக்கு உண்டு என்று எல்லாரும் கூறுகின்றனர். அதனல், திகைத்து நிற்கும் உலகிற்கு அளவற்ற அசத்தியம் வழங்கப்படுகிறது. இந்நிலையில், உண்மையான பணிவுடன் நான் உங்களுக்குச் சொல்லக் கூடியது இதுதான். அபரிமிதமான பணிவு கொண்டிராத எவராலும் சத்தியத்தைக் கண்டறிய முடியாது. சத்தியக் கடலின் மத்தியில் நீந்த வேண்டுமானல் நம்மை ஒரு பூஜ்யமாக ஒடுக்கிக் கொள்ளவேண்டும்.

சத்தியம் உள்ள இடத்தில் மெய்யறிவு இருக்கும். சத்தியம் இல்லாத இடத்தில் மெய்யறிவு இருக்க முடியாது. அதனல்தான் 'சித்' அல்லது அறிவு என்ற பதம் கடவுளின் பெயருடன் இணைக்கப்பட்டிருக்கிறது. மெய்யறிவு இருக்கும் இடத்தில் சதா 'ஆனந்தம்' இருக்கும். அங்கு துயரத்திற்கு இடமில்லை. சத்தியம் சிரஞ்சீவியாக இருப்பது போலவே, அதிலிருந்து கிடைக்கும் ஆனந்தமும் சிரஞ்சீவியானது. அதனல்தான் கடவுளைச் 'சத்-சித்-ஆனந்தம்' என்று அறிகிறோம்;

அதாவது உண்மையையும், மெய்யறிவையும், இன்பத்தையும் தம்முள் ஒருசேரப் பெற்றவர் கடவுள்.

சத்தியத்திலிருந்து அன்பும் பரிவும் பணிவும் தோன்றுகின்றன. சத்தியத்தை உபாசிப்பவர் தூசிக்குச் சமமான பணிவுடன் இருக்கவேண்டும். சத்தியத்தை மேலும் மேலும் கடைப்பிடிக்கும்போது அவருடைய பணிவும் அதிகரிக்கிறது. என் வாழ்க்கையின் ஒவ்வொரு விநாடியிலும் இதை உணர்கிறேன். சத்தியத்தையும் என் சிறுமையையும் ஓராண்டுக்கு முன் உணர்ந்ததைவிட மிக அதிகமான தெளிவுடன் இப்போது நான் உணர்கிறேன். 'பிரும்ம சத்தியம், ஜகம் மித்திய' (கடவுளே உண்மை, மற்றவையெல்லாம் மாயை)என்ற பேருண்மையின் அற்புத உட்பொருளை நாளுக்கு நாள் அதிகத் தெளிவாக நான் உணர்கிறேன். அது நமக்குப் பொறுமையை உபதேசிக்கிறது. இது நம்முடைய கொடிய சுபாவத்தை நீக்கி சகிப்புத் தன்மையை வளர்க்கும். புற்றுக்கள் போன்ற நம் குறைகளை அது மலைகளாகப் பெரிதாக்கிக் காட்டும், பிறருடைய மலைபோன்ற குறைகளைப் புற்றுகளாகக் குறுக்கிக் காட்டும். தந்நலம் காரணமாக உடல் என்னும் தளை நீங்காமலிருக்கிறது. உடலை அல்லது தந்நலத்தை அடியோடு அழிப்பதுதான் மோட்சம். இதைச் சாதிப்பவர் சத்தியத்தின் பிம்பமாக, அல்லது பிரம்மமாக இருப்பார். அதனால்தான் ஆண்டவர் 'தாஸானுதாஸன்' (அடியார்க்கு அடியான்) என்ற அன்புத் திருநாமத்தைப் பெற்றுள்ளார். மனைவி, மக்கள், உற்றார், உடைமைகள் எல்லாம் சத்தியத்துக்குக் கீழ்ப்பட்டவையே. சத்தியத்தைக் காணும் முயற்சியில் இவை ஒவ்வொன்றையும் தியாகம் செய்யவேண்டும்.

★ ★ ★ ★

## II. சத்தியமும் அஹிம்ஸையும் வேறல்ல

அஹிம்ஸையும் சத்தியமும் பின்னிப் பிணைந்திருக்கின்றன; அவற்றை அவிழ்த்து வேறுபடுத்துவது அனுஷ்டான சாத்தியமல்ல. ஒரு நாணயத்தின் இரு புறங்களைப் போன்றவை அவை; முத்திரை பதிக்காத மழமழப்பான ஒரு உலோக வட்டின் இருபுறங்களைப் போன்றவை என்று கூறுவது இன்னும் பொருத்தமானது. இந்த வட்டின் முன் பக்கம் எது, பின் பக்கம் எது என்று யாரால் கூறமுடியும்! எனினும், அஹிம்ஸையை மார்க்கம் என்றும் சத்தியத்தை இலட்சியம் என்றும் கூறலாம். மார்க்கம் என்பது எப்போதும் நாம் கடைப்பிடிக்கச் சாத்தியமானதாக இருக்கவேண்டும். ஆகவே அஹிம்ஸையைக் கடைப்பிடிப்பது நம்முடைய தலையாய கடமை. நாம் மார்க்கத்தைச் சரியாகக் கடைப்பிடித்தால் சீக்கிரமாகவோ தாமதமாகவோ இலட்சியத்தை எட்டிப் பிடிப்பது திண்ணம். இந்த விஷயத்தை நாம் கிரகித்துக் கொண்டுவிட்டால், இறுதி வெற்றி பெறுவதில் சந்தேகமேயில்லை. எத்தகைய இடர்ப்பாடுகள் எதிர்ப்பட்டாலும், தோல்விகள் போல் தோன்றுபவை எத்தனை சம்பவித்தாலும், சத்திய வேட்டையை நாம் கைவிடக்கூடாது. சத்தியம்தான் நிலையானது; கடவுளே சத்தியம்தான்.

அஹிம்ஸை என்பது குறிக்கோள் அல்ல. சத்தியம் தான் குறிக்கோள். ஆனால் அஹிம்ஸையைக் கடைப்பிடிக்காமல் மனித உறவுகளில் சத்தியத்தை நாம்

காணமுடியாது. அஹிம்ஸையை உறுதியுடன் கடைப் பிடிப்பதுடன் சத்தியம் பிணைந்திருக்கிறது; பலாத் காரத்துடன் அது பிணைந்திருக்கவில்லை. அதனால்தான் நான் அஹிம்ஸையில் உறுதி பூண்டிருக்கிறேன். சத்தியம் இயல்பாகவே என்னிடம் வந்தது. அஹிம்ஸை யைப் பாடுபட்டுத்தான் பெற்றேன்.

ஆனால் அஹிம்ஸையே மார்க்கமாக இருப்ப தால், அதில்தான் நம் அன்றாட வாழ்வில் அதிகச் சிரத்தை காட்டவேண்டியிருக்கிறது ஆகவே அஹிம் ஸையில்தான் நம் மக்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். அதன் இயற்கை விளைவாகச் சத்தியத்திலும் பயிற்சி கிடைக்கும்.

அஹிம்ஸை என் கடவுள், சத்தியம் என் கடவுள். நான் அஹிம்ஸையைத் தேடும்போது, 'என் வாயிலாக அதைக் கண்டுகொள்' என்று சத்தியம் கூறுகிறது. நான் சத்தியத்தைத் தேடும்போது, 'என் வாயிலாக அதைக் கண்டுகொள்', என்று அஹிம்ஸை சொல்கிறது.

உலகினருக்கு நான் புதிதாக எதையும் போதிக்க வில்லை. சத்தியமும் அஹிம்ஸையும் மலைகளைப் போலப் பழமையானவைதாம். இவை இரண்டு சம்பந்தமாக, என்னால் இயன்ற அளவு, மிக விரிவான அளவில் சோதனைகள் நடத்த முயன்றதுதான் நான் செய்துள்ள காரியம். இவ்வாறு செய்யும்போது சில சமயங்களில் தவறியிருக்கிறேன், தவறுகளின் படிப்பினையைத் தெரிந்து கொண்டுள்ளேன். இவ்விதமாக, வாழ்க்கையும் அதன் பிரச்சினைகளும் சத்தியத்தையும் அஹிம்ஸையை யும் கடைப்பிடிப்பது சம்பந்தமான பல்வேறு பரிசோதனைகளாக எனக்கு அமைந்துள்ளன.

சுபாவமாகவே நான் சத்தியத்தைக் கடைப்பிடிப் பவன்; ஆனால் அஹிம்ஸை எனக்கு இயல்பானது

அல்ல. சத்தியத்தில் இருக்கும் அளவுக்கு அஹிம்ஸையில் எனக்கு ஈடுபாடு இல்லை என்று ஜைன முனிவர் ஒருவர் ஒரு சமயம் சரியாகச் சொன்னார். சத்தியத்துக்கு முதலிடமும் அஹிம்ஸைக்கு இரண்டாவது இடமும் கொடுத்திருந்தேன். ஏனெனில், அவர் கூறியது போல, சத்தியத்துக்காக அஹிம்ஸையைத் தியாகம் செய்யக் கூடியவனாக நான் இருந்தேன் உண்மையில், சத்தியத்தை, நான் தேடியபோதுதான் அஹிம்ஸையைக் கண்டுபிடித்தேன்.

ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக, இடையறாமல், விஞ்ஞான நுட்பத்துடன், அஹிம்ஸையின் சாத்தியக் கூறுகளை அறிந்து அதை நான் கடைப்பிடித்து வந்திருக்கிறேன். வாழ்வின் ஒவ்வொரு துறையிலும்—வீடு, ஸ்தாபனம் பொருளியல், அரசியல் என்ற எல்லாத் துறைகளிலும்— அதை நான் கையாண்டிருக்கிறேன். நானறிந்தவரை, ஒரு சந்தர்ப்பத்தில்கூட அது தோற்றதில்லை. சில வேளைகளில் அது தோற்றதுபோலத் தோன்றியபோது, என்னுடைய குறைபாடுகளே அதற்குக் காரணம் என்று உணர்ந்தேன். நான் பூரணமானவன் என்று உரிமை கொண்டாடவில்லை. ஆனால் கடவுளின் மறுபெயரான சத்தியத்தை ஆவேசத்துடன் நாடுபவன் நான் என்று உரிமை கொண்டாடுகிறேன். சத்தியத்தை அவ்வாறு தேடும் பொழுது அஹிம்ஸையைக் கண்டுபிடிக்க நேர்ந்தது. அதைப் பரப்புவது தான் என் வாழ்க்கையின் பணி. இந்தப் பணியைச் செய்வது தவிர வாழ்க்கையில் எனக்கு வேறு சிரத்தை இல்லை.

தீந்நலத் தியாகம் என்ற பழமையான நியதியை இந்தியாவினிடம் சமர்ப்பிக்க நான் முற்பட்டுள்ளேன்.

ஏனெனில், சத்தியாக்கிரகமும் அதன் கிளைகளாகிய ஒத்துழையாமை, சட்ட மறுப்பு ஆகியவையும் கஷ்டப் படுதல் என்ற நியதியின் புதுப் பெயர்கள்தாம்.

பலாத்காரத்தின் இடையே அஹிம்ஸை என்ற நியதியைக் கண்டுபிடித்த ரிஷிகள், நியூட்டனைவிடப் பெரிய மேதைகள்; அவர்கள் வெல்லிங்டனை விடப் பெரிய போர் வீரர்கள். ஆயுத வித்தையை அவர்கள் அறிந்திருந்த போதிலும் ஆயுதங்களின் பயனற்ற தன்மையை உணர்ந்தனர். வன்முறையின் மூலம் கதிமோட்சம் பெற முடியாது என்றும் அஹிம்ஸையின் மூலமே பெற முடியும் என்றும் சோர்ந்துகிடந்த உலகத்துக்கு அவர்கள் உபதேசம் செய்தனர்.

அனுஷ்டான பூர்வமான அஹிம்ஸை என்றால் வேண்டுமென்றே கஷ்டத்தை அனுபவிப்பது என்று பொருள். தீமை செய்பவனின் விருப்பத்துக்கு அஞ்சிப் பணிவது என்பது அதன் அர்த்தமல்ல; கொடியவனின் விருப்பத்தை ஆன்ம பூர்வமாக, முழு மூச்சுடன் எதிர்ப்பது என்பதே அதன் பொருள். நம் வாழ்வுக்கு ஆதாரமான இந்த நெறியின்படி செயலாற்றினால், தனி ஒரு மனிதன் தன்னுடைய மானத்தையும் மதத்தையும் ஆன்மாவையும் காப்பாற்றிக் கொள்வதற்காக, அநியாய ஏகாதிபத்தியத்தின் பெருவல்லமையை எதிர்த்து நிற்க முடியும்; அந்த ஏகாதிபத்தியத்தை நசிக்கச் செய்வதற்கோ வீழ்த்துவதற்கோ அடிகோலவும் அவனால் முடியும்.

ஆகவே, இந்தியா பலவீனமாக இருக்கிறது என்பதற்காக அது அஹிம்சையைக் கையாள வேண்டும் என்று நான் வலியுறுத்தவில்லை. தன்னுடைய வலிமையையும் ஆற்றலையும் உணர்ந்தே இந்தியா அஹிம்ஸையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று கூறுகிறேன். இந்தியா தன்னுடைய வலிமையை உணர்வதற்கு ஆயுதப் பயிற்சி எதுவும் அவசியமில்லை. நாம் வெறும் சதைப் பிண்டம்தான் என்ற எண்ணம் காரணமாகவே

ஆயுதப் பயிற்சி அவசியம் என்று தோன்றுகிறது போலும்.

அழிவற்ற ஆன்மா தன்னிடம் உள்ளது என்பதை, ஸ்தூலமான எத்தகைய பலவீனங்களையும் விஞ்சி அது வெற்றி பெறும் என்பதை, உலகம் முழுதும் ஸ்தூல உருவில் ஒன்றுசேர்ந்தாலும் எதிர்த்து நிற்கத் தன்னால் முடியும் என்பதை, இந்தியா உணரவேண்டும் என்று விரும்புகிறேன்.

சாசனபூர்வமான சரித்திர காலம் தொடங்கியது முதல் நம் காலம் வரை ஆராய்ந்து பார்த்தால் அஹிம்ஸையை நோக்கி மனிதன் இடையறாமல் முன்னேறி வந்திருப்பது தெரியவரும். நம்முடைய ஆதி முன்னோர்கள் நரமாமிச பட்சிணிகளாக இருந்தனர். பின்காலத்தில் அவர்கள் நரமாமிசத்தில் வெறுப்புற்று, விலங்குகளை வேட்டையாடி உண்ணலாயினர். அதற்குப் பிந்திய கட்டத்தில், நாடோடி வேட்டைக்காரனாக வாழ்வது குறித்து மனிதனுக்கு வெட்கம் ஏற்பட்டது. அதனால் அவன் விவசாயத்தில் ஈடுபட்டு, அன்னை பூமியிடமிருந்து தன் பிரதான உணவைப் பெறலானான். இவ்வாறு, முதலில் நாடோடியாகத் திரிந்த அவன் நாகரிகமான, நிலையான வாழ்வில் அமர்ந்தான்; கிராமங்களையும் நகரங்களையும் நிருமாணித்தான் ; ஒரு குடும்பத்தின் உறுப்பினன் என்ற நிலையிலிருந்து ஒரு சமூகத்தின், ஒரு தேசிய சமுதாயத்தின் உறுப்பினன் என்ற நிலைக்கு மாறினான். மேலும் மேலும் அஹிம்ஸை வளர்ந்து ஹிம்ஸை குறைந்து வந்திருப்பதற்கு இவையெல்லாம் அத்தாட்சிகள். இதற்கு மாறாக நடந்திருந்தால், வேறு பல கீழ்த்தர உயிரினங்கள் மறைந்தது போலவே மனித இனமும் இதற்குள் பூண்டற்றுப் போயிருக்கும்.

தீர்க்கதரிசிகளும் அவதார புருஷர்களும் அஹிம்சை என்னும் போதனையை உபதேசித்துள்ளனர். அவர்களுள் ஒருவர்கூட ஹிம்சையைத் தாம் போதிப்பதாகக் கூறவில்லை. இதற்கு மாறாக எப்படி இருக்க முடியும்? ஹிம்சையைப் போதிக்க வேண்டிய அவசியமேயில்லை. மிருக அம்சத்தைக் கொண்டவன் என்ற முறையில் மனிதன் பலாத்காரவாதி; ஆனால் ஆன்மாவைக் கொண்டவன் என்ற முறையில் மனிதன் அஹிம்ஸாவாதி. தன்னுள் இருக்கும் ஆன்மாவைத் தட்டியெழுப்பினால் அவனால் பலாத்காரவாதியாக நீடித்திருக்க முடியாது. ஒன்று அஹிம்சையை நோக்கி அவன் முன்னேற வேண்டும், அல்லது அழிவை நோக்கி விரைய வேண்டும். அதனால்தான் தீர்க்கதரிசிகளும், அவதார புருஷர்களும் சத்தியம், சமரசம், சகோதரத்துவம், நீதி என்பன போன்ற அஹிம்சையின் அம்சங்களைப் போதித்துள்ளனர்.

இப்போதுகூட, உலகெங்கிலும் மனித வர்க்கத்தினர் பரஸ்பர சகிப்புத்தன்மையை ஆதாரமாகக் கொண்டே வாழவும், உடைமைகளை வைத்திருக்கவும் முடிகிறது என்று கருதுகிறேன்; அஹிம்சையைப் புத்திபூர்வமாக ஏற்றுக் கொள்வதை அடிப்படையாகக் கொண்டு சமூகம் அமைந்திரா விட்டாலும் இந் நிலைமையே காணப்படுகிறது. அவர்கள் இவ்வாறு சகித்துக் கொள்ளா விட்டால் படுபயங்கரமான ஒருசில மனிதர்களே எஞ்சியிருப்பவர். ஆனால் உண்மை நிலைமை இப்படி இல்லை. குடும்பங்களை அன்பு பிணைத்து வைத்திருக்கிறது; நாகரிக சமுதாயங்கள் என்று அழைக்கப்படும் தேசிய சமுதாயங்களும் இவ்வாறே பிணைத்து வைக்கப்பட்டுள்ளன. அஹிம்சை நெறியின் முதன்மையை அவை உணரவில்லை என்பதுதான் குறை. அதன் எண்ணற்ற சாத்தியக் கூறுகளை அவை ஆராய்ந்து

பார்க்கவில்லை என்பது புலனாகிறது. உடைமை இல்லாமை என்பது போன்ற நோன்புகளைக் கைக் கொண்ட ஒருசிலர்தாம் பூரண அஹிம்ஸையைக் கையாள முடியும் என்று நாம் இதுவரை கருதி வந்திருக் கிறோம். நம்முடைய சோம்பல்தான் இக்கருத்திற்குக் காரணம் என்று நினைக்கிறேன். ஈடுபாடு உள்ளவர்கள் தாம் ஆராய்ச்சி நடத்தி, மனிதர்களை நெறிப்படுத்தும் அந்த மகத்தான, சிரஞ்சீவி நியதியின் புதிய சாத்தியக் கூறுகளை அவ்வப்போது வெளிப்படுத்த முடியும்; ஆயினும், அது ஒரு நியதி என்றால், எல்லாருமே கடைப்பிடிக்கத் தக்கதாக இருக்க வேண்டும். நாம் காணும் பல தோல்விகள் அந்த நியதியின் தோல்விகள் அல்ல, அதைப் பின்பற்றுவோரின் தோல்விகளே அவை. விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் தாங்கள் அந்த நியதிக்கு உட்பட்டவர்கள் தாம் என்பதுகூட அவர் களில் பலருக்குத் தெரியாது. தன்னுடைய குழந்தைக் காக ஒரு தாய் தன்னுயிரையே கொடுக்கும்போது அவள் தன்னையறியாமலே அந்த நியதிக்குத்தான் கீழ்ப் படிந்து நடக்கிறாள். அந்த நியதியை நாம் புத்தி பூர்வ மாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும், தோல்வி களைப் பொருட்படுத்தாமல் அதை உத்வேகத்துடன் கடைப்பிடிக்க வேண்டும் என்றும் கடந்த ஐம்பதாண்டு களாக நான் வாதாடி வருகிறேன். ஐம்பது வருஷப் பணியின் மூலம் அற்புதப் பலன்கள் கிடைத்திருக் கின்றன, என்னுடைய நம்பிக்கையும் உறுதியடைந் திருக்கிறது. அதை நாம் இடைவிடாமல் அப்பியாசம் செய்தால், சட்டபூர்வமாக ஒருவர் வைத்திருக்கும் உடைமைகளை எல்லோரும் தம்மிச்சையாக மதித்து நடக்கும் நிலை ஏற்பட முடியும் என்பது என்னுடைய வாதம். இத்தகைய உடைமை தீமைக் கலப்பற்றதாக இருக்கவேண்டும் என்பதில் ஐயமில்லை. நம்மைச் சுற்றி எங்கணும் காணப்படும் ஏற்றத்தாழ்வுகளின் அகம்பாவ விளம்பரமாக அது இருக்காது. அநியாயமான, சட்ட விரோதமான உடைமைப் பிரச்சினைபற்றி அஹிம்ஸா

வாதி கிலியடைய வேண்டியதுமில்லை. சத்தியாக்கிரம், ஒத்துழையாமை என்ற அஹிம்ஸா பூர்வமான ஆயுதம் அவரிடம் இருக்கவேயிருக்கிறது. இதுவரை இந்த ஆயுதத்தை நேர்மையுடனும் போதிய அளவிலும் பிரயோகித்த சந்தர்ப்பங்களில் எல்லாம், அது பலாத்காரத்துக்குப் பதிலான பூரண ஆயுதம் என்பது நிரூபணமாகியிருக்கிறது. அஹிம்ஸை, விஞ்ஞானம் முழுவதையும் நான் விளக்கி யிருப்பதாக எச்சமயத்திலும் கூறியதில்லை. அதை அவ்வளவு சுலபமாக விளக்கிவிட முடியாது நானறிந்தவரை, மிகத் துல்லிய விஞ்ஞானமான கணிதம் உட்பட, பௌதிக விஞ்ஞானம் எதுவுமே பூரணமாகக் கண்டறியப்படவில்லை. அதை அறிய முயல்பவன் என்பதுதான் எனது நிலை.

அற்புதங்கள் நிறைந்த யுகம் இது; ஒரு பொருள் அல்லது கருத்து புதியது என்பதற்காக அதைப் பயனற்றது என்று இந்த யுகத்தில் யாரும் கூறமாட்டார். கஷ்டமானது என்பதற்காக அதைச் சாத்தியமற்றது என்று கூறுவதும் இந்த யுகத்தின் தன்மைக்கு முரணானது. முன்பு நாம் கனவிலும் கண்டிராத விஷயங்களை இப்போது அன்றாடம் காண்கிறோம்: சாத்தியமற்றதெல்லாம் இப்போது சாத்தியமாகிக் கொண்டிருக்கிறது. இக்காலத்தில் பலாத்காரத் துறையில் கண்டு பிடிக்கப்படும் அற்புத விஷயங்களைப் பார்த்து நாம் வியந்த வண்ணம் நிற்கிறோம். ஆனால் அஹிம்ஸை என்னும் துறையில் இவற்றையும் விடப் பிரமாதமான, கனவிலும் அறியாத, அசாத்தியமானவையாகத் தோன்றக்கூடிய கண்டுபிடிப்புகள் வரும் என்று நான் திண்ணமாகக் கருதுகிறேன்.

"அக்கிரமத்துக்கு எதிரான உண்மைப் போராட்டத்திலிருந்து அடியோடு விலகியிருப்பதுதான்

அஹிம்ஸை" என்று கூறுவது சரியல்ல. இதற்கு மாறாக, என் கருத்தின்படி அமைந்த அஹிம்ஸையானது அக்கிரமத்துக்கு எதிராக உள்ள அதி தீவிரமான, உண்மையான போராட்டமாகும். அதர்மங்களை மனோ பாவ ரீதியாகவும் அதன் விளைவான தார்மிக ரீதியாகவும் எதிர்ப்பதுபற்றி நான் சிந்திக்கிறேன். கொடுமைக்காரனுடைய வாள் முனையை அடியோடு கூர்மழுங்கச் செய்ய நான் முற்படுகிறேன்; அதைவிடக் கூர்மையான வாள் முனையை அதனெதிரே காட்டு வதற்குப் பதில், நான் வன்முறையில் எதிர்ப்பேன் என்ற அவனுடைய நம்பிக்கையைப் பொய்ப்பிப்பதன் வாயிலாக இதை நான் சாதிப்பேன். நான் அவனுக்கு எதிராக ஈடுபடுத்தும் ஆன்மிக எதிர்ப்பு அவனுடைய பிடியில் சிக்காது. முதலில் அது அவனைப் பிரமிக்கச் செய்யும்; குறைந்த பட்சம் அதை அவன் மதிக்க வேண்டியிருக்கும். இவ்வாறு மதிப்பது அவனைத் தாழ்த்தாது, உயர்த்தவே செய்யும்; இது இலட்சிய வாதம் என்று கூறப்படலாம். ஆம், இலட்சிய வாதம் தான்.

மிக உயர்ந்த, விறுவிறுப்பான சக்தியாகும் அஹிம்ஸை. அது ஆத்ம சக்தி, அல்லது நம்முள் இருக்கும் தெய்விக சக்தி. முழுமை பெறாத மனிதனால் அந்த சாரம் முழுவதையும் கிரகித்துக்கொள்ள முடியாது; ஆனால் அதில் ஒரு துளி நம்முள் இயங்க ஆரம்பித்தால் கூட அற்புதங்களை நிகழ்த்த முடியும்.

நம்முள் கடவுள் இருந்து செயல் புரிகிறார் என்பதை உணர்வதுதான் முதல் தேவை என்பதில் ஐயமில்லை.

ஒருவரிடம் கர்வமும், தந்நலமும் இருந்தால், அவரிடம் அஹிம்ஸை இருக்காது. பணிவு இல்லாமல் அஹிம்ஸையைக் கடைப்பிடிக்க முடியாது.

என்னை ஒரு பூஜ்யமாக அடக்கிக்கொண்ட பின்னர் தான் தென் ஆப்பிரிக்காவில் சத்தியாக்கிரஹத்தின் சக்தியை உருவாக்க முடிந்தது.

அஹிம்ஸைக்கு வெளியாரிடம், அல்லது வெளிப் படையான பயிற்சி பெறுவது அவசியம் இல்லை. பதில் நடவடிக்கையாகக்கூட யாரையும் கொல்லுவதில்லை என்ற மன உறுதியும், பழிவாங்கும் எண்ணமின்றிச் சாவை எதிர் நோக்கும் தீரமும்தான் அதற்குத் தேவை. இது அஹிம்ஸை சம்பந்தமான இதோபதேசம் அல்ல; இது முழுக்க முழுக்கத் தர்க்கவாதம்தான்; எல்லாருக்கும் பொதுவான ஒரு நியதிதான். இந்த நியதியில் அசையாத நம்பிக்கை இருந்தால், எவ்வளவு ஆத்திரம் ஊட்டப்பட்டாலும் பொறுமையை இழக்கவுமாட்டோம். இதைத்தான் 'தீரனின் அஹிம்ஸை' என்று நான் வர்ணித்திருக்கிறேன்.

அன்பு ஒருகாலும் தனக்கென உரிமை கொண்டாடுவதில்லை, அது எப்போதும் கொடுத்துக் கொண்டே இருக்கிறது. அன்பு எப்போதும் துன்பத்தை ஏற்றுக் கொள்கிறது. அது ஒருகாலும் ஆத்திரம் கொள்வதில்லை, ஒருகாலும் பழிவாங்குவதில்லை.

அன்பு இருக்கும் இடத்தில் வாழ்வு இருக்கும், துவேஷம் அழிவில் கொண்டுவிடும்.

உலகிலேயே மிகுந்த வல்லமை வாய்ந்த சக்தி அன்புதான்; ஆயினும், அதைவிடப் பணிவுள்ளது எதையும் கற்பனைகூடச் செய்ய முடியாது.

வேறு எவர்மீதும் ஆணை செலுத்துவதற்கு அன்பைத் தவிர வேறு ஆயுதம் எதுவும் என்னிடம் இல்லை.

நான் கனவு காண்பவன் அல்ல; அனுஷ்டான பூர்வமான இலட்சியவாதி நான் என்றே உரிமை கொண்டாடுகிறேன். அஹிம்ஸை என்னும் மதம் ரிஷிகளுக்கும் மஹான்களுக்கும் மாத்திரம் ஏற்பட்டதல்ல. அது சாதாரண ஜனங்களுக்கும் ஏற்றதுதான். பலாத்காரம் விலங்கின் நியதியாக இருப்பதுபோல, அஹிம்ஸை நம்முடைய இனத்தின் நியதியாகும். விலங்கின் ஆன்மிக சக்தி அடங்கிக் கிடக்கிறது. அதனால் உடல் வலிமையைத் தவிர வேறு நியதி எதுவும் அதற்குத் தெரிவதில்லை; அதைவிட உயர்ந்த ஒரு நியதிக்கு, ஆன்மிக வலிமைக்கு, கீழ்ப்படிவதுதான் மனிதனின் கௌரவத்துக்கு உகந்தது.

அஹிம்ஸா ரீதியில் சமூகத்தை அமைக்க முடியாது என்று சொல்வது இக்காலத்தில் ஒரு மோஸ்தராகி விட்டது. இக்கருத்தை நான் ஆட்சேபிக்கிறேன். ஒரு குடும்பத்தில் தவறு செய்யும் தம் குழந்தையைத் தந்தை

அடித்தால், திருப்பி அடிக்கலாமா என்று அந்தக் குழந்தை எண்ணுவதில்லை. தந்தைக்கு அவன் கீழ்ப்படிகிறான்; அடியின் விளைவல்ல அது. அன்பு குறைவதை அந்த அடி பிரதிபலிக்கிறது என்பதால்தான் கீழ்ப்படிகிறான். சமூகம் எப்படி அமைந்திருக்க வேண்டும் என்பதற்கு இதுவே எடுத்துக்காட்டு என்பது கருத்து. ஒரு குடும்பத்துக்குப் பொருந்துவது சமூகத்துக்கும் பொருத்தமானதே; சமூகம் என்பது ஒரு பெரிய குடும்பம்தானே.

என்னுடைய அஹிம்ஸைக் கோட்பாடு, மிகுந்த வீரியம் வாய்ந்த சக்தியாகும். கோழைத் தனத்திற்கோ, பலவீனத்துக்கோகூட, அதில் இடமில்லை. பலாத்கார வாதியாவது என்றாவது அஹிம்ஸாவாதியாக மாறுவான் என்ற நம்பிக்கை உண்டு. ஆனால் கோழை விஷயத்தில் எத்தகைய நம்பிக்கைக்கும் இடம் கிடையாது. அதனால்தான், நம்மையும் நம்முடைய மாதர்களையும், நம் பிரார்த்தனைத் தலங்களையும், நாம் துன்பப்படுவதன் மூலம்—அதாவது அஹிம்ஸை மூலம்—பாதுகாத்துக் கொள்ளத் தெரியாவிட்டால், நாம் மனிதர்கள் என்றால், போரிடுவதன் மூலமாகவாவது இவைகளை யெல்லாம் பாதுகாக்கத் தயாராகயிருக்க வேண்டும் என்று அடிக்கடி எழுதியிருக்கிறேன்.

ஒருவர் சத்தியத்தை நாடும்போது தம்முடைய எதிரிமீது பலாத்காரத்தைப் பிரயோகிக்கக்கூடாது; மாறாக, பொறுமையுடனும் அனுதாபத்துடனும் அவனைத் திருத்தவேண்டும். சத்தியாக்கிரகத்தைக் கையாண்டபோது, ஆரம்ப கட்டத்திலேயே இவ்

விஷயத்தை நான் கண்டு கொண்டேன். ஏனெனில் ஒருவருக்குச் சத்தியம் என்று தோன்றுவது, இன்னொருவருக்குத் தவறானது என்று காட்சி அளிக்கக்கூடும். பொறுமை என்றால் நாமே கஷ்டத்தை அநுபவிப்பது என்று பொருள். ஆகவே, எதிரியைத் துன்பப்படுத்தாமல் நாமே துன்பத்தை அனுபவிப்பதன் மூலம் சத்தியத்தை நிலை நாட்டுவது என்பதுதான் சத்தியாக்கிரகச் சித்தாந்தத்தின் பொருள்.

அஹிம்ஸையுடன் இணைந்த சத்தியாக்கிரகத்தின் மூலம் உலகையே உங்களுக்கு அடிபணியச் செய்யலாம். அரசியல் வாழ்வில், அதாவது தேசிய வாழ்வில், சத்தியத்தையும் மென்மையையும் புகுத்துவது என்பதுதான் சத்தியாக்கிரகத்தின் சாராம்சம்.

அஹிம்ஸையினால் அதிகாரத்தைக் கைப்பற்ற முடியாது, அவ்வாறு கைப்பற்றுவது அதன் நோக்கமும் அல்ல. இது அதன் இயல்பும் அல்ல. ஆனால் இதை விடவும் பெரிய காரியத்தை அது சாதிக்க முடியும்; அதாவது, அரசாங்க இயந்திரத்தைக் கைப்பற்றாமலேயே, ஆட்சி அதிகாரத்தைக் கட்டுப்படுத்தவும் நெறிப்படுத்தவும் அதனால் முடியும். இதுதான் அதன் அழகு.

தீமை செய்பவனைச் சங்கடத்துக்கு உள்ளாக்குவது சத்தியாக்கிரகியின் நோக்கமே அல்ல. அவனுடைய பய உணர்ச்சியைத் தூண்டவே கூடாது. அவனது

இதயத்தைத்தான் கவர வேண்டும். தீமை செய்பவனைத் திருத்துவதுதான் சத்தியாக்கிரகியின் நோக்கமே தவிர, நிர்ப்பந்திப்பது நோக்கம் அல்ல. இயல்பாகவும், ஆன்மிக நம்பிக்கையுடனுமே சத்தியாக்கிரகி செயல் புரிகிறான்.

தீமை வேறு, தீமை செய்பவன் வேறு என்ற பாகுபாட்டை சத்தியாக்கிரகி ஒருபோதும் மறக்கக்கூடாது. தீமை செய்பவன் மீது அவனுக்கு வெறுப்போ, மனக் கசப்போ இருக்கக்கூடாது....தீமையை நன்மையாலும், கோபத்தை அன்பினாலும், அசத்தியத்தைச் சத்தியத்தினாலும், ஹிம்சையை அஹிம்ஸையினாலும் வெல்வதற்கே சத்தியாக்கிரகி எப்போதும் முயற்சி செய்வான். உலகிலிருந்து தீமையைக் களைவதற்கு வேறு வழியே இல்லை.

நேரடி நடவடிக்கைகளுள் மிக அதிகமான ஆற்றல் வாய்ந்தது சத்தியாக்கிரகம்; ஆகவே சத்தியாக்கிரகி ஒருவன் சத்தியாக்கிரகத்தில் இறங்குவதற்கு முன் வேறு எல்லா வழிகளிலும் முயன்று பார்க்க வேண்டும்; ஆட்சியாளருடன் அவன் இடையறுமல் சமரசம் பேசவேண்டும்; பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க வேண்டும்; தனக்குச் செவிசாய்ப்போரிடமெல்லாம் தன்னுடைய நிலையை அமைதியாக எடுத்துரைக்க வேண்டும். இந்த வழிகளையெல்லாம் கையாண்டு பார்த்த பிறகே அவன் சத்தியாக்கிரகத்தில் இறங்க வேண்டும். ஆனால் அவன் அந்தராத்மாவின் கட்டளையைக் கேட்டு, சத்தியாக்கிரகத்தில் இறங்கிய பின்னர், அந்த முடிவை மாற்றவோ, பின்வாங்கவோ கூடாது.

சர்க்காரைச் சங்கடப்படுத்துவதற்காகச் சத்தியாக்கிரகி சிறை செல்வதில்லை; தன்னுடைய குற்றமற்ற தன்மையை அவர்களுக்கு வெளிப்படுத்துவதற்காகவே அவன் சிறை செல்கிறுன். சிறை செல்வதற்குத் தார்மிகத் தகுதி வேண்டும் என்று சத்தியாக்கிரக நியதி கோருகிறது; இந்தத் தகுதி இருப்பதாக உணராவிடில் நீங்கள் சிறை செல்வதில் பயனில்லை; அதன் விளைவாக இறுதியில் உங்களுக்கு ஏமாற்றந்தான் ஏற்படும்.

சத்தியாக்கிரகி அச்சத்துக்கு இடமே கொடுப்பதில்லை; ஆகவே எதிரியை நம்புவதற்கு அவன் எச்சமயத்திலும் அஞ்சுவதில்லை. எதிரி இருபது தடவை நம்பிக்கைத் துரோகம் செய்தாலும், இருபத்தோராவது முறையும் அவனை நம்புவதற்குச் சத்தியாக்கிரகி தயாராயிருக்கிறுன். ஏனெனில், மனித சுபாவத்தில் உறுதியான நம்பிக்கை கொள்வதுதான் அவனுடைய கோட்பாட்டின் சாராம்சம்.

''வெகு ஜனங்களுக்கு அஹிம்ஸையை நீங்கள் உபதேசிக்க முடியாது. தனிப்பட்டவர்களுக்குத்தான் அது சாத்தியமாகும்'' என்று சொல்லிப் பலர் தலையசைத்து விட்டனர். இது தங்களையே அப்பட்டமாக ஏமாற்றிக் கொள்வதாகும் என்பது என் அபிப்பிராயம். மனித வர்க்கத்துக்கு அஹிம்ஸை பழக்கமாகியிராவிட்டால், எத்தனையோ சகாப்தங்களுக்கு முன் அது தன்னைத்தானே அழித்துக் கொண்டிருக்கும். ஆனல் பலாத்கார சக்திகளுக்கும் அஹிம்ஸா சக்திகளுக்கும் இடையே நடந்துவந்த யுத்தங்களில் பிந்தியவைக்குத்தான் எப்போதுமே இறுதி வெற்றி கிடைத்து வந்திருக்கிறது.

பொறுமையுடன் காத்திருந்து, அரசியல் குறிக்கோள்களுக்கான மார்க்கமாக அஹிம்ஸையை மக்களிடையே பரப்புவதில் நாம் முழு மூச்சுடன் முனைவதில்லை. இதுதான் உண்மை நிலை.

கேள்வி :—கோபமும், துவேஷமும், குரோதமும் கொள்வதை இயல்பாக உடைய வெகு ஜனங்களால் அஹிம்ஸையைக் கையாள முடியும் என்று நீங்கள் எப்படி நினைக்கலாம்? அற்ப விஷயங்களுக்குக்கூட சண்டை போடுபவர்கள் அவர்கள் என்பது தெரிந்த விஷயமல்லவா ?

பதில் :—அவர்கள் அப்படிப்பட்டவர்கள்தாம். ஆயினும், பொதுநலனுக்காக அஹிம்ஸையை அவர்கள் கடைப்பிடிக்க முடியும் என்றே நான் நினைக்கிறேன். தடையை மீறி உப்புச் சேகரித்த ஆயிரக்கணக்கான மாதர்கள் எவரையும் வெறுத்ததாக உங்களால் சொல்ல முடியுமா? சில காரியங்களைச் செய்யும்படி காங்கிரஸோ காந்தியோ தங்களிடம் சொல்லியிருப்பதை அவர்கள் உணர்ந்து, நம்பிக்கையுடன் அக்காரியங்களைச்செய்தனர். சம்பரான் நிலைதான் பரிபூரண அஹிம்ஸையை வெளிப் படுத்தியது என்பது என் கருத்து. அங்கு, விவசாயக் கொடுமைகளை எதிர்த்துக் கலகம் செய்த ஆயிரக்கணக் கான குடியானவர்கள் சர்க்காரிடமோ, தோட்ட முதலாளிகளிடமோ குரோதம் கொண்டிருந்தனரா ? அஹிம்ஸையில் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை புத்திபூர்வமானது அல்ல. உலகம் உருண்டையானது என்பதைப் பலர் புத்திபூர்வமாக உணர்வதில்லை என்பதுபோலத்தான் இதுவும். ஆனால் அவர்கள் தங்கள் தலைவர்களிடம் உண்மையான நம்பிக்கை கொண்டிருந் தனர். அதுவே போதுமானது. ஆனால் தலைமை தாங்கு வோரின் விஷயம் வேறு மாதிரியானது. அவர்களுக்குப் புத்திபூர்வமான நம்பிக்கை இருக்கவேண்டும். அந்த

நம்பிக்கையின் பொறுப்புகளையெல்லாம் அவர்கள் நிறைவேற்றவேண்டும்.

கேள்வி :—" கஷ்டமான இந்தக் கலையில் தனி நபர்களையோ சமுதாயங்களையோ எவ்வாறு பயில்விப்பது ?"

பதில் : - உங்கள் வாழ்க்கையில் அந்தக் கோட்பாட்டை அனுஷ்டித்துக் காட்டுவதுதான் ஜீவனுள்ள உபதேசமாகும்; இதைத் தவிர வேறு ராஜபாட்டை இல்லை. ஆழ்ந்த ஆராய்ச்சி, விடாமுயற்சி, தம்மிடம் உள்ள அசுத்தங்களையெல்லாம் அடியோடு களைதல் என்ற நிபந்தனைகளைப் பூர்த்தி செய்தால்தான் அதை ஒருவர் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்துக் காட்ட முடியும். பௌதிக விஞ்ஞானங்களில் தேர்ச்சி பெறுவதற்காக உங்கள் ஆயுள் முழுவதையும் அர்ப்பணிக்கவேண்டியிருக்கிறது என்றால், மனிதவர்க்கம் அறிந்த ஆன்மிக சக்திகளுள் மிக உன்னதமான இதில் தேர்ச்சி பெறுவதற்காக எத்தனை பிறவிகள் தேவைப்படும்? பல பிறவிகள் தேவைப்பட்டாலும் எதற்காகக் கவலைப்படவேண்டும்? ஏனெனில், வாழ்க்கையில் இது ஒன்றுதான் சாசுவதமானது என்றால், இது ஒன்றுதான் முக்கியமானது என்றால், பின்னர் அதில் தேர்ச்சி பெறுவதற்காக நீங்கள் எவ்வளவு பாடுபட்டாலும் நல்லதுதான். 'முதலில் சுவர்க்க சாம்ராஜ்யத்தை நாடுங்கள்; அதனுடன் வேறு எல்லாமும் சேர்த்து உங்களுக்கு வழங்கப்பெறும்!' இங்கு அஹிம்ஸைதான் சுவர்க்க சாம்ராஜ்யம்.

கேள்வி :—வெகுஜனப் புரட்சிதான் சுதந்திரம் பெறுவதற்கான ஒரே வழி என்று நம்புகையில், வெகுஜனங்கள் அத்தகைய புரட்சியின்போது சிந்தனையிலும்

செயலிலும் எப்போதும் அஹிம்ஸையை முழுக்கக் கடைப்பிடிப்பது காரிய சாத்தியமானது என்று நம்புகிறீர்களா? எவ்வளவு ஆத்திரமூட்டப் பட்டாலும் அவர்கள் இவ்வாறு கடைப்பிடிப்பார்களா? அத்தகைய நிலையைத் தனி நபர் ஒருவர் அடைவது சாத்தியமாக இருக்கலாம். ஆனால் வெகு ஜனங்கள் செயல் ரீதியாக அத்தகைய அஹிம்ஸை நிலையை எட்டுவது சாத்தியம் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

பதில் :—இவ்வளவு காலம் கழித்து நீங்கள் இம் மாதிரிக் கேள்வி கேட்பது விசித்திரம் தான். ஏனெனில், அஹிம்ஸா பூர்வமான நம்முடைய போராட்டம் முழுவதும் அதற்கு அத்தாட்சியாக உள்ளது. எங்கெல்லாம் பலாத்காரம் எழுந்ததோ அங்கெல்லாம் அதை வெகு ஜனங்கள் எழுப்பவில்லை; ஆனால் உயர்ந்தோர் எனப் படுவோர் தாம் எழுப்பினர்; அறிவாளிகள் தாம் அதைக் கிளப்பி விட்டனர் என்பதே அந்த அத்தாட்சி; பலாத்காரச் சண்டையில்கூட தனி நபர் ஒருவர் எல்லாவற்றையும் மறந்து ஆவேசமாகச் சண்டையிடுவாரே தவிர, போர்ப்படையில் உள்ள பெரும்பாலோர் அவ்வாறு செய்யத் துணிவதுமில்லை, செய்வதுமில்லை. உத்தர விட்டால்தான் அவர்கள் ஆயுதங்களைப் பிரயோகிக்கின்றனர்; உத்தரவிட்டால் சுடுவதை அவர்கள் நிறுத்தவும் வேண்டியிருக்கிறது. சொந்த ஹோதாவில் பழி வாங்கவும் பதிலடி கொடுக்கவும் அவர்களுக்கு எவ்வளவு வேகம் இருந்தாலும் சுடுவதை நிறுத்த வேண்டியிருக்கிறது. திட்டமிட்ட யுத்தத்தில் போர்ப்படை சாதாரணமாகக் கடைப்பிடிக்கும் கட்டுப்பாட்டை, அஹிம்ஸைப் போராட்டத்தில் கட்டுப்பாடுள்ள வெகு ஜனங்கள் கடைப்பிடிக்க மாட்டார்கள் என்று கருதுவதற்கு இயல்பான காரணம் எதுவும் இல்லை. தவிர, அஹிம்ஸைத் தளபதிக்கு வேறொரு விசேஷ வசதி இருக்கிறது. அதாவது, தம்முடைய போராட்டத்தை வெற்றிகரமாய் நடத்துவதற்காக அவருக்கு ஆயிரக்கணக்கான தலைவர்கள் தேவைப்படுவதில்லை. அஹிம்ஸைத் தாக்

கீதை அனுப்புவதற்குப் பெருவாரியான தலைவர்கள் அவசியமில்லை. அஹிம்ஸை உணர்வில் ஊறிய, உண்மையான ஆண்கள், பெண்கள் ஒருசிலரின் உதாரணமே இறுதியில் வெகு ஜனங்கள் அனைவரையும் தொற்றிக் கொண்டுவிடும். இயக்கத்தின் ஆரம்பக் கட்டத்தில் எனக்குக் கிடைத்த அனுபவம் வருமாறு: நான் அஹிம்ஸையை உபதேசித்த போதிலும் உள்ளூற பலாத்காரத்தை நான் ஆதரித்ததாக ஜனங்கள் உண்மையாகவே நினைத்தனர். தலைவர்களின் உரைகளை இவ்வாறு படித்து வியாக்கியானம் செய்வதற்கே அவர்கள் பயிற்சி பெற்றிருந்தனர். ஆனால், சொன்னதையே அந்தரங்க சுத்தியுடன் நம்புபவன் நான் என்பதை அவர்கள் தெரிந்து கொண்டதும், மிகக் கடுமையான சோதனைகளுக்கிடையிலும் அஹிம்ஸையை அவர்கள் கடைப்பிடித்து நின்றனர். சௌரி சௌராவில் நிகழ்ந்தது போன்ற சம்பவம் மறுபடி நிகழவேயில்லை. சிந்தனையில் அஹிம்சை இருக்கிறதா என்பதை ஆண்டவன் தான் அறிய முடியும். ஆனால், சிந்தனையில் அஹிம்ஸை இல்லாமல் செயலில் அஹிம்ஸையை நீடித்துக் கடைப்பிடிக்க முடியாது என்பது மாத்திரம் நிச்சயம்.

பலாத்கார அஸ்திவாரத்தின் மீது சாசுவதமான எதையும் நிருமாணிக்க முடியாது என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை.

மிருகத்தனத்தை மிருகத்தனத்தால் ஒருவர் எதிர்ப்பது தம்மிடம் ஒழுக்கமும், அறிவும் இல்லை என்று ஒப்புக்கொள்வதாகும். இவ்வாறு செய்வதால் ஒரு விஷமச் சக்கரம்தான் தொடங்கும்.

பலாத்காரம் சட்டபூர்வமானது அல்ல என்றாலும், தற்காப்புக்காகவோ, தீனர்களைப் பாதுகாப்பதற்காகவோ அதைப் பிரயோகித்தால், கோழைத்தனமாக அடிபணிவதை விட, அது மிகமிக உயர்வான தீரச் செயல் ஆகும். பிந்தையது ஆணுக்கும் தகுந்ததல்ல. பெண்ணுக்கும் ஏற்றதல்ல.

ஒரு இனம் முழுவதும் பேடியாவதைப் பார்க்கிலும் ஆயிரம் முறை பலாத்காரத்தைப் பிரயோகிப்பதையே நான் சிலாகிப்பேன்.

நான் அவமானப் படுத்தப்படுவதை கோழைத்தனமாக, நிர்க்கதியாக இந்தியா பார்த்துக் கொண்டிருப்பதைவிட, தன்னுடைய மானத்தைக் காத்துக்கொள்வதற்காக இந்நாடு ஆயுதம் எடுப்பதையே நான் சிலாகிப்பேன்.

பலாத்காரம் நன்மை தருவதாகத் தோன்றினாலும் அது அளிக்கின்ற நன்மை தற்காலிகமானது; அது செய்கின்ற தீமையோ நிரந்தரமானது. அதனால்தான் பலாத்காரத்தை நான் ஆட்சேபிக்கிறேன்.

ஆனால் பலாத்காரத்தைவிட அஹிம்ஸை மிகமிக உயர்வானது. தண்டிப்பதைவிட மன்னிப்பதில்தான்

அதிக ஆண்மை இருக்கிறது. மன்னிப்பது போர் வீரனுக்கு அணிகலன். ஆனால், தண்டிக்கும் சக்தி இருக்கும்போது தண்டிக்காமல் இருப்பதுதான் உண்மையான மன்னிப்பு; கையாலாகாத ஒரு ஜந்து மன்னிப்பதாக நடிப்பதில் அர்த்தமில்லை...

ஆனால், இந்தியா கையாலாகாத நாடு என்று நான் கருதவில்லை. ...என்னை ஒரு கையாலாகாத ஜந்து என்று நான் நினைக்கவில்லை...ஸ்தூல சக்தியிலிருந்து வலிமை தோன்றுவதில்லை. அசையாத மன உறுதியிலிருந்தே அது தோன்றுகிறது.

கோபமோ குரோதமோ இல்லாமல் துன்பத்தை ஒருவர் ஏற்றுக்கொள்வது உதயசூரியனுக்கு ஒப்பானது. அதன் முன்னிலையில் கல்நெஞ்சும் கரையும், கனத்த அறியாமையும் மறையும்.

பேராசை இல்லாவிடில் ஆயுதங்களுக்கும் அவசியம் இருக்காது. எத்தகைய உருவில் உள்ள சுரண்டலிலும் ஈடுபடவே கூடாது என்பது அஹிம்ஸைக் கோட்பாட்டுக்கு இன்றியமையாதது.

ஒன்று மாத்திரம் உறுதி: வெறித்தனமான ஆயுதப் போட்டி நீடித்தால், வரலாறே கண்டறியாத படுகொலையை அது விளைவிப்பது நிச்சயம். இறுதியில், வென்றவர் எவரும் எஞ்சியிருந்தால், வெற்றி பெறும் நாட்டை அந்த வெற்றியே உயிர்ப்பிணமாக்கிவிடும்.

அற்புத நன்மைகளைக் கொண்ட அஹிம்ஸை முறையைத் தீரத்துடனும் நிபந்தனையின்றியும் ஏற்றுக் கொண்டால் தான் அடுத்து வரப்போகும் நாசத்திலிருந்து தப்பலாம், வேறு வழியில்லை.

அஹிம்ஸையை அடிப்படையாகக் கொண்ட சமுதாயமாகவே நாளைய உலகம் இருக்கும், இருக்க வேண்டும் என்பதில் எனக்கு இம்மியும் சந்தேகம் இல்லை.

★ ★ ★ ★

# III. பண்புகளும் கோட்பாடுகளும்

என்னிடம் அலாதித் தெய்வீகத் தன்மை எதுவும் இருப்பதாக நான் உரிமை கொண்டாடவில்லை, ஆனால் சத்தியத்தைத் தேடும் அடக்கமான மனிதன் நான்; அதைக்கண்டு பிடிக்க உறுதி பூண்டவன். கடவுளை நேருக்கு நேர் காண்பதற்காக எத்தகைய தியாகம் செய்வதும் எனக்குப் பெரிதல்ல. என்னுடைய செயல் முழுவதும் சமூகம், அரசியல், மனிதாபிமானம், ஒழுக்கம் முதலிய எந்தத் துறையிலாயினும் சரி—அந்தக் குறிக்கோளையே கொண்டிருக்கிறது. தம் சிருஷ்டிகளுள் உயர்ந்தவர்கள், வலியவர்கள் ஆகியோரிடையே இருப்பதைவிட, மிகவும் கடைப்பட்டவர்களிடையேதான் கடவுள் அதிகமாக உறைகிறார் என்பதால், இந்தக் கடைப்பட்டவர்களின் நிலையை நானும் அடைவதற்கு பாடுபட்டுக் கொண்டிருக்கிறேன். அவர்களுக்குச் சேவை செய்யாமல் நான் அதை அடைய முடியாது ; அதனால்தான் ஒடுக்கப்பட்ட ஜாதியினருக்குத் தொண்டாற்றுவதில் நான் மிகுந்த ஆர்வம் காட்டுகிறேன். அரசியலில் பிரவேசிக்காமல் இவ்வாறு என்னால் சேவை செய்ய முடியாது என்பதால் நான் அதில் ஈடுபட நேர்ந்தது. ஆகவே, நான் ஒரு எசமானன் அல்ல, இந்தியாவுக்கும் அதன் வாயிலாக மனித வர்க்கத்துக்கும், தட்டுத்தடுமாறிக் கொண்டு சேவை செய்யும் பணிவுள்ள ஊழியனே நான்.

கூறுபோட முடியாத முழுப் பொருளாகும் என்னுடைய வாழ்க்கை ; என்னுடைய காரியங்கள் எல்லாம் ஒன்றோடொன்று இணைப்புள்ளவை ; மனித இனத்தின்

பால் நான் கொண்டுள்ள அடங்காத அன்பிலிருந்து கிளைத்தவையே அவையெல்லாம்.

என்னுடைய உபதேசமும் போதனையும் உணர்ச்சி வசமானவை அல்ல. அனுஷ்டான சாத்தியமற்றவை அல்ல; ஏனெனில் புராதன உண்மைகளையே நான் போதிக்கிறேன், உபதேசிப்பதை நானே அனுஷ்டிக்க முயல்கிறேன். மற்றும், நான் அனுஷ்டிப்பதை எல்லாரும் கையாள்வது சாத்தியமே என்று வாதாடு கிறேன். ஏனெனில், நான் மிகச் சாமானியமான ஒரு மனிதன்தான். நம்முள் கடைப்பட்ட ஒருவனை எத்தகைய ஆசைகளும் பலவீனங்களும் பீடிக்குமோ அவை என்னையும் பீடிக்க வல்லவை.

எனக்குச் சாத்தியமானது எதுவும் ஒரு குழந்தைக்குக் கூடச் சாத்தியமானதுதான் என்ற என்னுடைய நம்பிக்கை வலுத்து வருகிறது; இவ்வாறு நான் சொல்வதற்குச் சரியான காரணங்கள் இருக்கின்றன. சத்தியத்தைத் தேடுவதற்கான கருவிகள் வெவ்வேருக இருப்பது போலவே எளிமையானவையாகவும் உள்ளன. அவற்றைக் கையாள்வது அசாத்தியம் என்று ஒரு அகம்பாவிக்குத் தோன்றலாம், ஆனால் அப்பாவிக் குழந்தைக்கு அவை சுலப சாத்தியமானவையே. தூசியைக் கால்களால் நசுக்கிக்கொண்டு உலகோர் செல்கின்றனர். ஆனால் சத்திய வேட்பாளனே தூசிகூடத் தன்னை நசுக்கும்படியாக அவ்வளவு பணிவு கொள்ள வேண்டும். அப்போதுதான் அவன் சத்தியத்தைச் சற்றே பார்க்க முடியும், அதற்கு முன் பார்க்க முடியாது.

என்னை ஒரு துறவி என்று குறிப்பிடுவது தவறு. என்னுடைய வாழ்க்கையை நெறிப்படுத்தும் இலட்சியங்களைப் பொதுவாக மனித இனம் முழுவதும் ஏற்றுக் கொள்ள முடியும். படிப்படியான பரிணமத்தின் மூலம் அவைகளை நான் பெற்றுள்ளேன். தீர்க்காலோசனை செய்து அலசி. ஆராய்ந்து பார்த்த பின்னரே ஒவ்வொரு காலடியும் எடுத்து வைத்தேன். என்னுடைய புலனடக்கமும் அஹிம்ஸையும் சொந்த அனுபவத்திலிருந்து வடிக்கப் பெற்றவை; பொது ஜன சேவைக்கு அவை அவசியமாயின. தென் ஆப்பிரிக்காவில், ஒரு குடும்பஸ்தனுக, வழக்கறிஞனுக, சமூகச் சீர்திருத்தவாதியாக அல்லது அரசியல்வாதியாக நான் ஒதுக்கமான வாழ்க்கை நடத்தியபோது, இந்தத் துறைகளில் உள்ள கடமைகளைச் சரிவர நிறைவேற்றுவதற்காக, புலனுகர்ச்சியை மிகக் கடுமையாக ஒழுங்குப்படுத்துவதும், மனித உறவுகளில்—என் நாட்டினருடனும் ஐரோப்பியருடனும் உள்ள உறவுகளில்—அஹிம்ஸையையும் சத்தியத்தையும் கண்டிப்புடன் கடைப்பிடிப்பதும் அவசியமாயின. சராசரி அளவைவிடவும் குறைவான திறமையைக் கொண்ட சராசரி மனிதனைவிட மேலானவன் என்று என்னைச் சொல்லிக் கொள்ள முடியாது. சிரமமான ஆராய்ச்சி பேரில் நான் பெற்ற அஹிம்ஸை அல்லது புலனடக்கம் காரணமாக விசேஷப் பெருமை கொண்டாடவும் எனக்கு உரிமை இல்லை. எந்த ஒரு ஆணும் சரி, பெண்ணும் சரி, என்னளவு முயற்சி செய்து, என்னளவு நம்பிக்கையை வளர்த்துக் கொண்டால், நான் சாதித்ததை அவராலும் சாதிக்க முடியும் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகம் இல்லை.

என்னுடைய நாட்டுக்கும், அதன் வாயிலாக மனித வர்க்கத்துக்கும் தொண்டாற்றுவதற்காக இடைவிடாமல் உழைப்பதுதான் எனக்கு கதிமோட்சம்

அளிக்கக் கூடிய மார்க்கம், எல்லாச் சீவராசிகளையும் என் போல் பாவிப்பதற்கு ஆசைப்படுகிறேன். கீதை கூறுவது போல, நண்பன்—எதிரி என்ற இருவருடனும் சமாதான மாக வாழ நான் விரும்புகிறேன். ஆகவே, ஒரு முஸல் மானோ, கிறிஸ்தவரோ, ஹிந்துவோ என்னை இழிவாகக் கருதி வெறுத்தாலும்கூட, அவரையும் நேசித்து, அவருக்கும் சேவை செய்ய விரும்புகிறேன். என் மனைவியோ மகனோ என்னை வெறுத்தாலும் அவர்களை நேசிப்பேன் என்பது போலத்தான் இதுவும். ஆகவே, சுதந்திரமும் சமாதானமும் நிரந்தரமாக நிலவும் ஒரு நாட்டை நோக்கி நான் செல்லும் யாத்திரையில் ஒரு கட்டம்தான் என்னுடைய தேசாபிமானம் என்று கருது கிறேன். மதசம்பந்தமற்ற அரசியலில் எனக்குச் சிரத்தை யில்லை என்பது இதிலிருந்து புலனாகும். மதத்துக்கு அனுசரணையானதே அரசியல். மதம் சேராத அரசியல் ஒரு மரணப் பொறியாகும், ஏனெனில் அது ஆன்மா வையே கொல்லுகிறது.

எங்கும், எதிலும் நிறைந்த சத்திய சக்தியை ஒருவர் நேருக்கு நேர் காண விரும்பினால், சிருஷ்டிகளுள் மிக அற்பமானதைக் கூடத் தனக்குச் சமமாகக் கருதி நேசிக்கும் திறனை அவர் பெறவேண்டும். இந்த அபி லாஷையைக் கொண்ட ஒரு மனிதனால் வாழ்க்கையின் எந்தத் துறையையும் விலக்கித் தள்ள முடியாது. அதனால் தான், சத்தியத்தில் எனக்குள்ள ஈடுபாடு என்னை அரசியல் துறைக்கு இழுத்திருக்கிறது. மதத்துக்கும் அரசியலுக்கும் எவ்வித சம்பந்தமும் கிடையாது என்று கூறுவோருக்கு மதத்தின் பொருள் விளங்கவில்லை என்று சிறிதும் தயக்கமின்றி, ஆனால் மிகுந்த பணிவுடன் நான் சொல்வேன்.

தவறு செய்யும் ஒருவனைக் கண்டால் நானும் தவறு செய்தவன்தான் என்று எனக்குள் சொல்லிக் கொள்கிறேன் ; காமவெறி பிடித்த ஒருவனைக் கண்டால் நானும் ஒரு காலத்தில் அப்படித்தான் இருந்தேன் என்று எனக்குள் சொல்லிக் கொள்கிறேன். இவ்விதமாக, உலகில் உள்ள ஒவ்வொருவருடனும் எனக்கு உறவு ஏற்படுகிறது. நம்முள் மிகத் தாழ்ந்த நிலையில் இருப்பவர் கூடச் சந்தோஷமாக இல்லாவிடில் நான் மகிழ்ச்சியுடன் இருக்க முடியாது என்பதை உணர்கிறேன்.

என்னுடைய சொந்த வாழ்வில் நான் மீண்டும் மீண்டும் பரீட்சித்துப் பார்த்திராத எதையும் கடைப்பிடிக்கும்படி என் மக்களை நான் கேட்பதில்லை ; இதில் தான் என் வலிமை அடங்கியிருக்கிறது.

என்னுடைய வாழ்க்கைத் தத்துவத்தின்படி இலட்சியமும் அதை அடைவதற்கான மார்க்கமும் வெவ்வேறானவை அல்ல.....‘மார்க்கம் என்பது வெறும் வழிமுறைதானே’ என்று சிலர் கூறுவர். ‘மார்க்கம் தான் சர்வமும்’ என்று நான் சொல்லுவேன். இலட்சியத்தையும் மார்க்கத்தையும் பிரிக்கக் கூடிய சுவர் எதுவும் இல்லை.! மார்க்கத்தை ஓரளவு நிர்ணயித்துக் கொள்ளும் உரிமையைத்தான் கடவுள் நமக்கு வழங்கியிருக்கிறார், இலட்சியம் சம்பந்தமாக நமக்கு எவ்வித அதிகாரத்தையும் அவர் வழங்கவில்லை. மார்க்கத்தை எந்த அளவுக்குக் கடைப்பிடிக்கிறோமோ அந்த அளவுக்குத்தான் இலட்சியமும் கைகூடும். இந்த விதிக்கு விலக்கே கிடையாது.

மார்க்கத்தை வித்துக்கும், இலட்சியத்தை விருட்சத்துக்கும் ஒப்பிடலாம். விதைக்கும் மரத்துக்கும் இடையே உள்ள மாற்ற முடியாத சம்பந்தம் போன்றது தான் இலட்சியத்துக்கும் இலட்சிய மார்க்கத்துக்கும் இடையே உள்ள சம்பந்தமும்.

கலப்பற்ற அஹிம்ஸா பூர்வமான செயல் முறையையும், பகிரங்கமான மார்க்கத்தையும் நான் ஆதரிக்கிறேன். இரகசிய முறையை நான் அடியோடு வெறுக்கிறேன்.

பாபங்கள் எல்லாம் இரகசியமாகச் செய்யப்படுகின்றன. நம்முடைய எண்ணங்களைக் கூடக் கடவுள் அறிவார் என்பதை நாம் உணர்ந்து விட்டால், அந்த விநாடி முதல் நமக்கு விடுதலைதான்.

மார்க்கம் பரிசுத்தமாக இல்லாவிடில் இலட்சியமும் பரிசுத்தமாக இருக்காது. சத்தியத்தை அசத்தியத்தின் வாயிலாக நாம் அடைய முடியாது. சத்திய ஒழுக்கத்தின் மூலமே சத்தியத்தை அடைய முடியும்.

வெற்றியோ தோல்வியோ நம் கையில் இல்லை. நம் கடமையை நன்கு செய்தால் போதும். முயல்வது தான் நம் பொறுப்பு. இறுதியில், ஆண்டவன் சித்தப்படியே நடக்கும்.

பலனைப் பற்றிக் கவலையேபடாமல் இருப்பதற்கு என்னை 50 ஆண்டுகளுக்கு மேலாகப் பழக்கிவைத்திருக்கிறேன். மார்க்கத்தைப் பற்றித்தான் நான் அக்கறை கொள்ள வேண்டும் ; மார்க்கம் பரிசுத்தமானது என்று நான் நிச்சயமாக உணர்ந்தால், மேற்கொண்டு எனக்கு வழிகாட்டுவதற்கு என் நம்பிக்கையே போதுமானது. அந்த நம்பிக்கையின் முன்னிலையில் அச்சமும் நடுக்கமும் கரைந்து மறைந்துவிடும்.

என் ஆயுள் முழுவதிலும், சத்தியத்தில் எனக்குள்ள உறுதிப்பாடு காரணமாக, சமரச பாவத்தில் உள்ள அழகை நான் புரிந்து கொண்டிருக்கிறேன். சமரச பாவம் சத்தியாக்கிரகத்தின் ஒரு முக்கிய அங்கம் என்பதை என் பிற்கால வாழ்வில் கண்டேன். இதன் காரணமாகப் பலமுறை என் உயிருக்கு ஆபத்து நேர்ந்துள்ளது, நண்பர்களின் அதிருப்திக்கு ஆளாகவும் நேர்ந்துள்ளது. ஆயினும், சத்தியம் என்பது வைரத்தைப் போல் திண்ணமானது, மலரைப் போல் மென்மையானது.

என்னைப்பற்றிப் பொய்ப் பிரசாரம் நடப்பது என் வாழ்நாள் முழுவதிலும் எனக்குப் பழக்கப்பட்டது தான். பொதுநல ஊழியர் ஒவ்வொருவருக்கும் இதே கதிதான் ஏற்படுகிறது. அவருடைய தோல் தடித்திருக்க வேண்டும். ஒவ்வொரு பொய்ப் பிரசாரத்துக்கும் பதிலளித்து நிலைமையை தெளிவுபடுத்த வேண்டும் என்றால் வாழ்க்கையே ஒரு பாரமாகிவிடும். இயக்கத்தின் நலனுக்காகத் திருத்தம் அவசியமாயிருந்தாலொழிய, மற்றபடி, பொய்ப் பிரசாரங்களுக்குப் பதில் அளிப்பதில்லை என்பதை வாழ்க்கையின் ஒரு விதியாக நான் கொண்டிருக்கிறேன். இதன் பலனாக கால விரயத்தையும் கவலையையும் வெகுவாக நான் தவிர்க்க முடிந்திருக்கிறது.

சத்திய உபாசகனே நான். அதற்கு ஒரு வழியைக் கண்டறிந்திருப்பதாக நான் உரிமை கொண்டாடு கிறேன். சத்தியத்தைக் கண்டறிவதற்கு இடையருமல் முயற்சி செய்வதாக நான் உரிமை கொண்டாடுகிறேன். ஆனுல் அதை நான் இன்னும் கண்டுபிடிக்கவில்லை என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஒருவர் தம்மை அறிந்தால்தான், தம் கதிமோட்சத்தை அறிந்தால் தான் — அதாவது பூரணத்துவப் பெற்ருல்தான்— சத்தியத்தை முழுமையாக அறியமுடியும். என்னுடைய குறைபாடுகளை வேதனையுடன் நான் உணர்கிறேன்; இதில்தான் என்னுடைய வலிமையெல்லாம் அடங்கி யிருக்கிறது. ஏனென்ருல், எந்த மனிதனும் தன்னுடைய சொந்தக் குறைபாடுகளை உணர்வது என்பது அபூர்வமான விஷயம்.

சத்தியத்தைத் தவிர வேறு யாரிடமும் எனக்குப் பக்தி இல்லை, சத்தியத்தைத் தவிர வேறு எந்தக் கட்டுப் பாட்டுக்கும் நான் உட்படுவதில்லை.

வருங்காலம் பற்றி அடக்க முடியாத நம்பிக்கை கொண்டவன் நான்; ஏனெனில் எனக்குத் தன்னம்பிக்கை இருக்கிறது. இது மிகுந்த அகம்பாவத் தைக் காட்டுகிறது அல்லவா? ஆனுல் நானே அளவற்ற பணிவுடன்தான் இவ்வாறு கூறுகிறேன். கடவுளின் உன்னத சக்தியில் எனக்கு நம்பிக்கை உண்டு. நான் சத்தியத்தில் நம்பிக்கை கொண்டவன். இந்நாட்டின் வருங்காலம்பற்றி, அல்லது மனித வர்க்கத்தின் வருங் காலம் சம்பந்தமாக எனக்குச் சந்தேகமே கிடையாது.

பழையவை எல்லாமுமே, அவற்றின் பழைமை காரணமாக, நல்லவை என்று நான் நினைக்கவில்லை. பழைய வழமுறையைக் கண்டவுடன், கடவுள் தந்த தர்க்கவாத சக்தியைக் கைவிடுமாறு நான் போதிக்க வில்லை. எவ்வளவு புராதனமான வழமுறையாக இருந் தாலும், அறநெறிக்கு மாறுபட்டதாக அது இருந்தால் அதை இந்த நாட்டைவிட்டு ஓட்ட வேண்டும். (தீண்டாமை) ஒரு பிராசீன சம்பிரதாயமாகக் கருதப் படலாம்; குழந்தைக் கைம்மையும் குழந்தைத் திருமணமும் புராதன வழமுறையாகக் கருதப்படலாம். இதேபோல் இன்னும் பல பயங்கரமான நம்பிக்கை களும் மூடப்பழக்கங்களும் பழைமையானவையாகக் கருதப்படலாம். எனக்கு மாத்திரம் அதிகாரம் இருந் தால் இவை அனைத்தையும் ஒரே மூச்சில் துடைத்து அழித்து விடுவேன்.

மனிதனைக் கண்டு அஞ்சுவதை விட்டுவிட்டு, கடவுளின் சத்தியத்தில் மாத்திரம் நாம் நாட்டம் கொண்டால், நாம் எல்லோரும் ஆண்டவனின் தூதர் களாகிவிடலாம் என்று நம்புகிறேன். கடவுளின் சத்தியத்தை மாத்திரம் நான் நாடுவதாகவும், மனித னிடம் இருந்த அச்சத்தையெல்லாம் கைவிட்டு விட்ட தாகவும் நம்புகிறேன்.

முரண்பாடு இல்லாதிருப்பதை நான் பிரமாதப் படுத்தியதே கிடையாது. நான் சத்தியத்தை உபாசிப் பவன்; ஒரு குறிப்பிட்ட வேளையில் ஒரு பிரச்சினை சம்பந்தமாக எனக்குத் தோன்றும் உணர்ச்சியையும் எண்ணத்தையும் நான் அப்படியே சொல்ல வேண்டும்; முன்பு அதுபற்றி நான் என்ன சொல்லியிருப்பேன் என்பதைப் பொருட்படுத்தக்கூடாது......என்னுடைய பார்வை தெளிவாகும்போது, அன்றாடப் பயிற்சியின்

மூலம் என் கருத்துக்களும் மேலும் மேலும் தெளிவு பெறவேண்டும். எவ்விஷயத்திலாவது ஒரு அபிப்பிராயத்தை நான் வேண்டுமென்றே மாற்றிக்கொண்டால் அந்த மாறுதல் தானாகவே தெளிவாகத் தெரிய வரும். ஆனால் படிப்படையான, கட்புலனாகாத பரிணாம மாறுதல், பழகிய கண்களுக்குத்தான் புலனாகும்.

ஒரு குறிப்பிட்ட பிரச்சினை சம்பந்தமாக முன்பு தெரிவித்த கருத்துக்களுக்கு முரண்படாமல் இருக்க வேண்டும் என்பது என் நோக்கமல்ல : ஒரு குறிப்பிட்ட சமயத்தில் சத்தியம் எனக்கு எவ்வாறு புலனாகிறதோ அதற்கு முரணின்றி இருப்பதே என்னுடைய நோக்கம். இதன் பலனாக ஒரு சத்திய நிலையிலிருந்து வேறு சத்திய நிலைகளுக்கு மேலும் மேலும் உயர்ந்து வந்திருக்கிறேன்.

என்னுடன் விவகாரம் செய்வது சுலபம். ஒரு குறிப்பிட்ட கருத்தை நான் உறுதியுடன் ஆதரிக்கலாம்; ஆனால் அது தவறானது என்று தெரிந்தால் உடனே அதைக் கைவிட்டு விடுவேன்.

வருங்காலத்தைத் தெரிந்து கொள்வதில் எனக்கு விருப்பம் இல்லை. நிகழ்காலத்தைக் கவனித்துக் கொள்வதில்தான் எனக்கு அக்கறை. அடுத்து வரும் வினாடியைக்கூடக் கட்டுப்படுத்தும் சக்தியை கடவுள் எனக்கு வழங்கவில்லை.

நம்மைச் சூழ்ந்திருக்கும், ஊடுருவிப்பார்க்க முடியாத கன இருள் ஒரு சாபத்தீடு அல்ல, அது ஒரு பாக்கியமே. நமக்கு முன்னுள்ள ஒரு தப்படித் தூரத்தைப் பார்ப்பதற்கு வேண்டிய சக்தியை மாத்திரம் கடவுள் நமக்குத் தந்திருக்கிறார் ; அந்த ஓரடியைத் தெய்வ ஒளி நமக்கு புலப்படுத்தினால் போதும். அப்போது நாமும் நியூமனுடன் சேர்ந்து " ஓரடி எடுத்து வைத்தாலே போதும் எனக்கு " என்று பாடலாம். அடுத்த அடியும் நிச்சயமாகத் துலங்கும் என்று, முந்தைய அனுபவத்திலிருந்து, நாம் உறுதியாக நம்பலாம். இதையே வேறு விதமாகச் சொல்வதென்றால், ஊடுருவ முடியாத இருள் என்று நாம் நினைப்பது ஊடுருவமுடியாத இருள் அல்ல. ஓரடி தூரத்துக்கு அப்பாலும் பார்ப்பதற்கு நாம் பொறுமையின்றி விரும்பினால்தான் அது ஊடுருவமுடியாத இருளாகத் தோன்றுகிறது.

நான் நம்பிக்கை உள்ளவன். கடவுளே கதியென்று இருப்பவன் நான். ஒரு தப்படி எடுத்து வைத்தாலே எனக்குப் போதுமானது. தகுந்த நேரம் வரும்போது, அடுத்தத் தப்படியையும் அவர் துலக்கிக் காட்டுவார்.

முழுக்க முழுக்க நல்லவனாக, முழுக்க முழுக்கச் சத்திய சந்தனாக, சிந்தனையிலும் சொல்லிலும் செயலிலும் முழுக்க முழுக்க அஹிம்சை வாதியாக இருப்பதற்காக ஏங்கிக் கொண்டிருக்கும், பாடுபட்டுக் கொண்டிருக்கும் அப்பாவி மனிதன் நான். ஆனால் உண்மையானது என்று நான் கருதும் இலட்சியத்தை எட்டிப் பிடிக்க என்னால் ஒருகாலும் முடிவதில்லை. கஷ்டப்பட்டு

உயர ஏறும் முயற்சி இது என்பதை ஒப்புக்கொள்கிறேன், ஆனால் இதில் உள்ள வேதனை எனக்கு இன்பமே தருகிறது. ஒவ்வொரு தப்படியாக முன்னேறும் போது நான் அதிக வலிமை பெறுகிறேன், அடுத்த அடி எடுத்து வைக்கத் தெம்பு ஏற்படுகிறது.

சத்தியத்தை உறுதியாகக் கடைப்பிடிப்பதிலிருந்து தான் என்னுடைய வலிமையெல்லாம் கிடைக்கிறது. இதே உறுதிப்பாட்டிலிருந்துதான் அஹிம்ஸையும் சுரக்கிறது.

சத்தியத்தில் அழகைக் காண்கிறேன், சத்தியத்தின் வாயிலாகவும் அழகைக் காண்கிறேன். எல்லாச் சத்தியங்களும்—உண்மையான கருத்துக்கள் மாத்திரம் அல்ல; உண்மையுள்ள முகங்கள், உண்மையான சித்திரங்கள், உண்மையான பாடல்கள் முதலியவையும் —மிகமிக அழகானவை. பொதுவாக மனிதர்கள் சத்தியத்தில் உள்ள அழகைக் காண்பதில்லை; அதைக் கண்டால் சாதாரண மனிதன் ஓட்டம் பிடிக்கிறான், அதில் உள்ள அழகை அவனுடைய கண்கள் பார்ப்பதில்லை. மனிதர்கள் சத்தியத்தில் அழகைக் காணும் போதெல்லாம் உண்மையான கலை பிறக்கிறது.

கலைகள் எல்லாவற்றையும் விடப் பெரியது வாழ்க்கை. முழுமைக்கு மிக அருகாமையில் உள்ள வாழ்க்கையைக் கொண்ட மனிதன்தான் மிகப்பெரிய கலைஞன் என்றுகூட நான் சொல்லுவேன். ஏனெனில்,

உன்னதமான வாழ்க்கை என்ற உறுதியான அஸ்திவாரத்தையும் கட்டுக்கோப்பையும் பெற்றிராவிட்டால் கலைக்குப் பொருள் ஏது ?

பரிசுத்தமான வாழ்க்கைதான் மிக உயர்ந்த, மிக உண்மையான கலை ; உலக வாழ்வின் இறுதியை நெருங்கிக் கொண்டிருப்பவன் என்ற நிலையில் இவ்வாறு நான் சொல்கிறேன். குரலைச் சாதகம் செய்துகொண்டு நல்ல இசைபாடும் கலையில் பலர் தேர்ச்சி பெறமுடியும் ; ஆனால் பரிசுத்த வாழ்க்கையிலிருந்து வாழ்வின் நல்லிசைவு என்ற அந்த இசையில் தேர்ச்சி பெறுவது மிகமிக அபூர்வம்.

என்னுடைய மக்களின் கஷ்டங்களைத் தடுப்பதை விட, மனித இயல்பை மிருக இயல்பாக மாற்றுவதைத் தடுப்பதில்தான் நான் அதிக அக்கறை கொண்டிருக்கிறேன். தம்மிச்சையாகக் கஷ்டத்தை அனுபவிக்கும் ஒரு நாட்டினர் தங்கள் நிலையையும் மனித வர்க்கம் முழுவதன் நிலையையும் உயர்த்துகின்றனர் என்பதை நான் அறிவேன். எதிரிகளை வெல்வதற்காக, அல்லது பலவீனமான நாடுகளையோ மனிதர்களையோ சுரண்டுவதற்காக, விரக்தியுடன் தங்களை மிருக இயல்பினராக மாற்றிக் கொள்ளும் நாட்டினர் தங்களை மாத்திரமன்றி மனித வர்க்கத்தையும் தாழ்த்துகிறார்கள் என்பதும் எனக்குத் தெரியும். மனித சுபாவம் சேற்றில் புகுத்தப் படுவதைக் காண்பதில் நானோ வேறு யாருமோ மகிழ்ச்சி கொள்ள முடியாது. நாம் எல்லாரும் ஒரே கடவுளின் மைந்தர்கள், ஒரே தெய்வீக சத்தைக் கொண்டவர்கள் என்றால், ஒவ்வொரு நபரின் பாபத்திலும் நமக்கும் பங்கு

உண்டு—அவன் நம்மைச் சேர்ந்தவனாயினும் சரி, அல்லது வேறு இனத்தைச் சேர்ந்தவனாயினும் சரி எந்த ஒரு மனிதனின் மிருக சுபாவத்தையும் தட்டியெழுப்புவது எவ்வளவு அருவருப்பானது என்பதை நீங்கள் புரிந்து கொள்வீர்கள்.

உலகினுடன் நேசமாக இருப்பதே என்னுடைய குறிக்கோள்; அபரிமிதமான அன்பு செலுத்தும்போதே, அநீதியை ஆவேசமாக எதிர்க்கவும் என்னால் முடியும்.

நேர்மையற்றது எதையும் நான் அனுமதிக்க மாட்டேன். சத்தியாக்கிரக நியதியை, அன்பு நெறியை, சாசுவதக் கோட்பாடாகக் கொண்டவன் நான் நல்லவை எல்லாவற்றுடனும் நான் ஒத்துழைக்கிறேன். தீயவை எல்லாவற்றுடனும் ஒத்துழையாமல் இருக்க விரும்புகிறேன்.

சுயபரிசுத்தம் பெறுவதற்காக இடையறாமல் முயன்றதன் பலனாக, அந்தராத்மாவின் ''சாந்த மென் குரலை''த் துல்லியமாகவும் தெளிவாகவும் கேட்கக்கூடிய சக்தியை நான் ஓரளவு பெற்றுள்ளேன்.

கடவுள் சித்தம் எதுவும் எனக்குப் பிரத்தியேகமாக வெளியிடப்பட்டதில்லை. ஒவ்வொரு மனிதருக்கும்

அவர் தம்மைத் தினந்தோறும் வெளியிடுகிருர் என்பது என்னுடைய உறுதியான நம்பிக்கை. நாம்தான் அந்தச் "சாந்த மென்குரலைக்" கேட்காமல் காதை மூடிக் கொள்கிறோம்; நம் முன் நிற்கும் தீக்கம்பத்தைப் பார்க்காமல் கண்களை மூடிக்கொள்கிறோம். அவர் எங்கும் நிறைந்திருப்பதை நான் உணர்கிறேன்.

என்னுள்ளே இருக்கும் அந்த "சாந்த மென்குரல்" தான் இவ்வுலகில் நான் ஏற்றுக் கொள்ளும் ஒரே சர்வாதிகாரி.

கேட்க விரும்புபவர் எவரும் அந்தக் குரலைக் கேட்க முடியும். ஒவ்வொருவருள்ளும் அது இருக்கிறது. ஆனால் வேறு எக்காரியத்துக்கும் தேவைப்படுவதுபோல், இதற்கும் முன் கூட்டியே திட்டவட்டமாக நம்மை ஆயத்தம் செய்து கொள்ளவேண்டும்.

என் அந்தராத்மாவின் "சாந்த மென்குரலை" எப்போது நான் ஒடுக்குகிறேனே அந்த விநாடி முதல் நான் பயனற்றவனாகிவிடுவேன்.

என்னிடம் இருக்கக்கூடிய சக்தியெல்லாம் அந்தராத்மாவின் குரலைக் கேட்கவும் அதற்குக் கீழ்ப்படியவும் எனக்கு உள்ள திறனிலிருந்து கிடைத்ததுதான்; நாட்டுக்கு நான் சிறிதளவாவது தொண்டாற்ற அது

தான் ஆற்றலளித்திருக்கிறது. இந்தப் பாதையிலிருந்து மாறி, அந்தராத்மாவின் குரலைத் தவிர வேறு குரலுக்கு நான் செவிசாய்க்க வேண்டும் என்று என் வாழ்க்கையின் இந்தக் கட்டத்தில் நீங்கள் எதிர்பார்க்க முடியாது.

நம்முடைய மிகச் சிறந்த நண்பர்களின் ஒத்துழைப்பு கிடைக்காத நிலையில்கூட நாமே செயலில் இறங்கவேண்டிய சமயங்கள் நம் வாழ்க்கையில் எழுகின்றன. கடமை சம்பந்தமாக முரண்பாடு எழும்போது, நம் அந்தராத்மாவின் "சாந்த மென்குரலே" தீர்ப்புக் கூறவேண்டும்.

சில விஷயங்கள் பற்றி வெளிச்சான்றுகள் எதுவும் நமக்குத் தேவைப்படாத சந்தர்ப்பங்கள் நம் வாழ்க்கையில் ஏற்படுவதுண்டு. "நீ சரியான பாதையிலேயே செல்கிறாய், இடமோ வலமோ பிறழாதே; நேரான, குறுகலான அதே பாதையில் செல்" என்று நம்முள்ளிருந்து ஒரு மென்குரல் நமக்குச் சொல்கிறது.

பிறப்பும் இறப்பும் பெரிய மர்மங்கள். சாவு என்பது இன்னொரு வாழ்வுக்குப் பீடிகை அல்ல என்றால், இடையில் ஒரு காலகட்டம் இருப்பது குரூரமான கேலிக்கூத்துக்குத்தான். எப்போது மரணம் வந்தாலும், யாருக்கு மரணம் சம்பவித்தாலும் அது குறித்துத் துக்கமே அடையாமல் இருக்கும் கலையை நாம் கற்க வேண்டும். நம்முடைய சொந்த மரணத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் இருப்பதற்கு நாம் உண்மை

யாகவே கற்றுக்கொண்டால்தான் அவ்வாறு செய்ய முடியும் என்று நினைக்கிறேன். நமக்கு விதிக்கப்பட்டுள்ள பணியைச் செய்துவிட்டோம் என்று ஒவ்வொரு விநாடியும் நாம் உணர்ந்தால்தான் நம்முடைய மரணம் பற்றித் துச்சமாக இருக்கமுடியும்.

ஒருவர் தம்முடைய சிந்தனைகளை பிரகடனப் படுத்தவோ அவற்றை வெளிப்படையாகச் செயலில் காட்டவோ அவசியப்படாத ஒரு நிலை வாழ்க்கையில் ஏற்படுவதுண்டு. சிந்தனைகளே செயல் புரியும். அந்த ஆற்றலை அவை பெற்றுவிடுகின்றன. இப்பேர்ப்பட்ட நிலையை அடைந்தவர் சும்மாயிருப்பதாகத் தோன்றினாலும் அவர் செயல் புரிவதாகவே சொல்லலாம். அந்த நிலையை எட்டுவதற்கு நான் பாடுபட்டுக்கொண்டிருக்கிறேன்.

தீரனின் அஹிம்ஸை என்னிடம் இருக்கிறதா ? என் மரணம்தான் அதைக் காட்டமுடியும். என்னை யாராவது கொலை செய்தால், அந்தக் கொலைஞன் சார்பில் என்னுடைய வாய் பிரார்த்தனை புரிய, கடவுள் நினைவுடனும், அவர் என் இதயச் சரணாலயத்தில் உயிர்த்துடிப்புடன் உறைவதை உணரும் நிலையிலும், நான் இறக்க வேண்டும், அப்போதுதான் தீரனுக்குரிய அஹிம்ஸை என்னிடம் இருந்ததாகச் சொல்லமுடியும்.

என் பொறிகள் எல்லாம் மெல்ல மெல்ல ஒடுங்க, தோற்றுப்போன மனிதனாக இறப்பதற்கு நான் விரும்ப

வில்லை. ஒரு கொலைக்காரனின் தோட்டா என் உயிரை முடிக்கக்கூடும். அதை நான் வரவேற்பேன். ஆனால், கடைசி மூச்சுள்ளவரை என் கடமையைச் செய்து கொண்டே மங்கி மறைவதைத்தான், வேறு எத்தகைய முடிவையும்விட நான் பெரிதும் விரும்புவேன்.

நீடித்த நோயினால், அல்லது ஒரு சிரங்கு, பரு காரணமாகக்கூட, நான் இறந்தால், நான் உரிமை கொண்டாடியதைப்போல நான் ஒரு கடவுள் பக்த னல்ல என்று உலகுக்குப் பறைசாற்றுவது உங்கள் கடமை ; இதற்காக உங்களை ஜனங்கள் கோபிப்பார்கள் என்பதையும் பொருட்படுத்த வேண்டாம். நீங்கள் அவ்வாறு செய்தால் என்னுடைய ஆன்மா சாந்தி பெறும். இதையும் குறித்துக்கொள்ளுங்கள் ; அன்று யாரோ ஒருவர் குண்டை வீசியதுபோல, எவராவது ஒரு தோட்டாவை என் உடம்பில் பாய்ச்சி என் உயிரை முடிக்க நேர்ந்தால், முனகலின்றி அந்தத் தோட்டாவை நான் ஏற்று, ஆண்டவனின் நாமத்தைச் சொல்லிக் கொண்டு இறக்கவேண்டும் ; அப்போதுதான் நான் கொண்டாடிய உரிமைக்குப் பாத்திரமாவேன். (1948 ஜனவரி 29-ந் தேதி இரவில் காந்திஜி இவ்வாறு கூறினார் ; அதிலிருந்து 20 மணி நேரத்துக்குள் அவர் சுட்டுக்கொல்லப்பட்டார்.)

நான் போன பின்னர் எந்த ஒரு தனி மனிதரும் என்னுடைய முழுப் பிரதியாக இருக்க இயலாது. ஆனால் உங்களில் பலரிடம் சிறிதாவது என்னுடைய அம்சம் உறைந்துவரும். ஒவ்வொருவரும் இலட்சியத்தை முதன்மையானதாகவும், தம்மைக் கடைசியாகவும்

கருதினுல் காலியிடத்தைப் பெரும்பாலும் நிரப்பி விடலாம்.

நான் ஆதரிக்கும் வேலைக்கிரமத்தை என்னுடைய நண்பர்கள் அமுல் நடத்த வேண்டும்; அல்லது, அதில் தங்களுக்கு நம்பிக்கை இல்லாவிடில் முழு மூச்சுடன் என்னை எதிர்க்க வேண்டும். எனக்கு அவர்கள் தரக்கூடிய மிக உயர்ந்த கௌரவம் இதுதான். செயலே முக்கிய மாக இருக்கும் இந்தச் சகாப்தத்திலே, கண்மூடித் தனமான வழிபாட்டினுல் ஒரு பயனும் இல்லை. அது பெரும்பாலும் தர்மசங்கடத்தையும் வேதனையையுமே எனக்கு ஏற்படுத்துகிறது.

நான் மறு பிறவி எடுக்க விரும்பவில்லை. அப்படியே நான் மீண்டும் பிறந்தாலும் ஒரு ஹரிஜனுகப் பிறக்க வேண்டும். அப்போதுதான் அவர்களுடைய துன்ப துயரங்களையும், அவர்கள்மீது சுமத்தப்படும் இழிவு களையும் நான் பகிர்ந்து கொள்ள முடியும்; அதன் வாயிலாகவே அவர்களையும் என்னையும் அவல நிலையி லிருந்து விடுவிக்க நான் முயற்சி செய்யமுடியும். ஆகவே, நான் மறு ஜன்மம் எடுத்தால், ஒரு பிராமண ஞகவோ, க்ஷத்திரியனுகவோ, வைசியனுகவோ, சூத்திர ஞகவோ பிறக்காமல் ஒரு ஆதி சூத்திரனுகப் பிறக்க வேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

* * * *

# IV. பல்வேறு மதங்களின் ஆன்மா ஒன்றே

நம்பிக்கை என்பது இல்லாவிடில் இந்த உலகம் ஒரே விணடியில் நிர்மூலமாகிவிடும். பிரார்த்தனை, தவம் ஆகியவற்றால் தங்கள் வாழ்க்கையைப் பரிசுத்தப்படுத்திக் கொண்டவர்கள் என நாம் நம்புகின்ற மனிதர்கள் தர்க்க வாதத்தின் மூலம் பெற்ற அனுபவத்தை நமதாக்கிக் கொள்வதுதான் உண்மையான நம்பிக்கை என்பது. ஆகவே புராதன காலங்களில் வாழ்ந்த தீர்க்க தரிசிகளிடமும் அவதார புருஷர்களிடமும் நம்பிக்கை கொள்வது வீணான மூடநம்பிக்கை அல்ல ; உள்ளத்தின் ஆழத்தில் எழுகின்ற ஆன்மிகத் தேவையை அதுதான் திருப்தி செய்விக்கிறது.

சில விஷயங்களில் பகுத்தறிவு நமக்கு அதிகமான பலன் தராது, அவற்றை நாம் நம்பித்தான் ஏற்றுக் கொள்ள வேண்டும். இந்நிலைமையில், பகுத்தறிவை நம்பிக்கை மறுக்கவில்லை, அதைக் கடந்துதான் நிற்கிறது. நம்பிக்கை ஒருவித ஆறாவது உணர்வாகும். பகுத்தறிவுக்கு அண்டுபடாத விஷயங்களை அது உணர்த்துகிறது.

சில விஷயங்களில் பகுத்தறிவு நமக்கு அதிகமான பலன் தராது. பகுத்தறிவை ஒடுக்க வேண்டும் என்று நான் வாதாடவில்லை, பகுத்தறிவையே பரிசுத்தமாக்கிக் கொண்டு நம்முள் இருக்கும் அந்த சக்திக்கு உரிய மதிப்புக் கொடுக்க வேண்டும் என்றுதான் கோருகிறேன்.

சிறிய புயல் அடித்தாலும் வாடிவதங்கக் கூடிய மென்மலர் அல்ல நம்பிக்கை. அசைக்க முடியாத இமய மலை போன்றது நம்பிக்கை. எத்தகைய புயலும் இமய மலையை மூட்டோடு பிடுங்கி எறிந்துவிடமுடியாது...அப் பேர்ப்பட்ட நம்பிக்கையைக் கடவுளிடமும் மதத்தின் பாலும் உங்களுள் ஒவ்வொருவரும் வளர்த்துக்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்.

மதம் என்றால், அதிகாரபூர்வமான அல்லது சம்பிரதாயபூர்வமான மதத்தை நான் குறிப்பிடவில்லை. எல்லா மதங்களுக்கும் அடிப்படையான, நம் சிருஷ்டி கர்த்தாவை நாம் நேருக்கு நேர் காணச் செய்வதுமான அந்த மதத்தையே குறிப்பிடுகிறேன்.

உண்மையில் நம்முடைய செயல் ஒவ்வொன்றிலும் மதம் இடம்பெற வேண்டும். இங்கு, மதம் என்பது பிரிவு மனப்பான்மையைக் குறிக்கவில்லை. பிரபஞ்சம் முழுவதற்குமான முறையான தார்மிக அரசில் நம் பிக்கை கொள்வதையே அது குறிக்கிறது. இது கண்ணுக்குப் புலனாகாததால் உண்மையற்றது அல்ல. ஹிந்து மதம், இஸ்லாம், கிறிஸ்தவம் முதலியவற்றை யெல்லாம் கடந்து நிற்கும் மதம் இது. அம்மதங்களை இது ஒழிக்கவில்லை. அவைகளை இது இசைத்து, அவற் றுக்கு எதார்த்த உருவம் கொடுக்கிறது.

ஒரே இலக்கில் வந்து சேர்கின்ற பல்வேறு சாலை கள்தாம் மதங்கள். ஒரே குறியிடத்தை அடைவோம்

என்றால் வெவ்வேறு வழிகளில் நாம் செல்வது பிரமாத விஷயமா?

சகிப்புத் தன்மை என்ற பதம் எனக்குப் பிடிக்கவில்லை, ஆனால் அதைவிடச் சிறந்த வார்த்தை எதுவும் எனக்குத் தோன்றவில்லை. தம்முடைய மதத்தைவிடப் பிற மதங்கள் தாழ்வானவை என்று ஒருவர் உள்ளூற நினைப்பதை 'சகிப்புத் தன்மை' என்பது குறிப்பிடுவதாகத் தோன்றலாம். ஆனால் அஹிம்ஸையோ, நம் மதத்துக்கு ஈடான மரியாதையை வேற்று மதங்களுக்கும் நாம் அளிக்க வேண்டும் என்றும், நம் மதத்தில் இருக்கக் கூடிய குறைபாட்டை இதன் மூலம் ஒப்புக்கொள்ள வேண்டும் என்றும் நமக்குப் போதிக்கிறது. அன்பு நெறியைப் பின்பற்றும் சத்திய வேட்பாளன் இவ்வாறு தயக்கமின்றி ஒப்புக் கொள்வான். சத்தியத்தை நாம் முழுமையாகக் கண்டுவிட்டால், பின்னர் வெறும் வேட்பாளர்களாக இருக்கமாட்டோம், கடவுளுடன் ஒன்றிக் கலந்துவிடுவோம்; ஏனெனில் சத்தியமே கடவுள். ஆனால் வேட்பாளர்களாகவே நாம் இருப்பதால், அதைத் தேடுவதில் முனைகிறோம். நம்முடைய குறைபாட்டை உணரவும் செய்கிறோம். நாமே குறைபாடுள்ளவர்கள் என்றால் மதம் பற்றிய நம்முடைய கருத்தும் குறைபாடுள்ளதாகவே இருக்கும். கடவுளைப் பூரணமாக அறியாதது போலவே, மதத்தையும் நாம் பூரணமாக அறியவில்லை. நம் கருத்தின்படி உள்ள மதம் குறைபாடுள்ளதாக இருப்பதால், அது எப்போதுமே பரிணாம மாறுதலுக்கு உட்பட்டிருக்கிறது; மனிதர்களால் குறிப்பிடப்பட்ட எல்லா மதங்களும் குறைபாடு உள்ளவை என்றால், ஒன்றைவிட இன்னொன்று எவ்வளவு உயர்ந்தது என்ற பிரச்சினைக்கே இடமில்லை. எல்லா மதங்களும் சத்தியத்தின் ஒவ்வொரு வெளியீட்டைத் தம்மகத்தே கொண்டவை. ஆனால் எல்லாமுமே குறைபாடுள்ளவை,

தவறு இழைக்கக்கூடியவை. மற்ற மதங்களுக்கு நாம் மரியாதை அளிக்கும்போது அவற்றின் குறைகளை நாம் புறக்கணிக்க வேண்டும் என்பதில்லை. நம்முடைய மதத்தில் உள்ள குறைகளையும் நாம் கூர்ந்து கவனிக்க வேண்டும்; இத்துடன் நின்றுவிடாமல் அக்குறைகளைக் களையவும் முயலவேண்டும். எல்லா மதங்களையும் சம நோக்குடன் கவனித்தால், மற்ற மதங்களில் உள்ள ஏற்கத்தக்க அம்சங்களையெல்லாம் நம்முடைய மதத்தில் இணைத்துக் கொள்வதற்கு நாம் தயங்கக் கூடாது, அவ்வாறு இணைப்பதை நம் கடமையாகவும் கருத வேண்டும்.

இத்தனை பலப்பல மதங்கள் எதற்காக இருக்க வேண்டும் என்ற கேள்வி பின்னர் எழுகிறது. ஆன்மா ஒன்றே, ஆனால் அது இயக்குகின்ற தேகங்கள் எத்தனையோ. தேகங்களின் எண்ணிக்கையை நம்மால் மாற்றமுடியாது; ஆனால் ஆன்மாவின் ஒருமைப்பாட்டை நாம் ஒப்புக்கொள்கிறோம். ஒரே தண்டைக் கொண்ட மரத்தில் பல கிளைகளும் இலைகளும் இருப்பது போலவே, சத்தியமான, பூரணமான மதம் ஒன்றுதான் என்றாலும், மனிதர்களின் வாயிலாக வெளிவரும்போது அது பலவாகிவிடுகிறது. சொல்லுக்கு அடங்காதது அந்த ஒரு மதம். முழுமையற்ற மனிதர்கள் தங்களுக்குத் தெரிந்த அளவில் மொழி வடிவில் அதை வெளியிடு கின்றனர்; அதே போன்ற முழுமையற்ற வேறு மனிதர் கள் அவர்களின் சொற்களுக்கு வியாக்கியானம் கூறு கின்றனர். எந்த வியாக்கியானத்தைச் சரியானது என்று கொள்வது ? ஒவ்வொருவரும் தம் கருத்தின்படி சரி யாகவே சொல்கிறார். ஆனால் ஒவ்வொருவர் சொல்வதும் தவறாக இருப்பதும் அசாத்தியமல்ல. அதனால்தான் சகிப்புத்தன்மை அவசியமாகிறது; தம்முடைய சொந் தச் சமயத்தை ஒருவர் உல்லங்கனம் செய்ய வேண்டும் என்று இதற்கு அர்த்தம் இல்லை; அதிக அறிவுடனும் பரிசுத்தத்துடனும் அதை நேசிக்க வேண்டும் என்பது தான் இதன் பொருள். சகிப்புத்தன்மை நமக்கு ஆன்மிக

ஞானத்தைத் தருகிறது; ஆன்மிக ஞானமும் மத வெறியும் வட துருவமும் தென் துருவமும்போல் முற்றிலும் வேறானவை. மதங்களுக்கு இடையே உள்ள மதில்களை மதம் பற்றிய உண்மையான அறிவு தகர்த்துவிடும்.

பிற மதங்களின்பால் சகிப்புத் தன்மையை வளர்த்துக் கொள்வது, நம்முடைய சொந்த மதத்தினை இன்னும் சரியாகப் புரிந்துகொள்வதற்கு உதவும்.

சரி-தப்பு, நல்லது-கெட்டது என்ற வித்தியாசத்தைச் சகிப்புத் தன்மை கவனிப்பதில்லை என்பது வெளிப்படை. உலகின் முக்கிய சமயங்களே இங்கு பிரஸ்தாபிக்கப்படுகின்றன. அவை எல்லாமுமே பொதுவான ஜீவாதாரக் கோட்பாடுகளை ஆதாரமாகக் கொண்டவை. அவை எல்லாமுமே மகத்தான மஹான்களைத் தோற்றுவித்துள்ளன.

உலகின் மகத்தான மதங்கள் எல்லாவற்றிலும் உள்ள ஜீவாதார உண்மையில் எனக்கு நம்பிக்கை உண்டு. அவை எல்லாமுமே கடவுளால் வழங்கப் பெற்றவை என்று நம்புகிறேன்; எந்த மக்கள் கூட்டங்களுக்கு அவை வெளியிடப்பட்டனவோ அவர்களுக்கு அவை தேவைப்பட்டன என்று நம்புகிறேன். பல்வேறு மதங்களின் சாத்திரங்களை அந்தந்த மதத்தினரின் நிலையிலிருந்து நாம் படித்தால், அவையெல்லாம் அடிப்படையில் ஒரே மாதிரியானவை என்பதையும், அவை ஒன்றுக்கொன்று சகாயமானவை என்பதையும் நாம் கண்டு கொள்வோம்.

கடவுளிடம் நம்பிக்கை என்பதுதான் எல்லா மதங்களுக்கும் கடைக்கால். ஆனால், உலகில் நடைமுறையில் ஒரே ஒரு மதம் இருக்கக்கூடிய காலம் வரும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஒரே ஒரு கடவுள்தான் இருப்பதால், ஒரே ஒரு மதம்தான் இருக்க முடியும் என்று சித்தாந்த ரீதியாகக் கூறலாம். ஆனால் நடைமுறையில், எனக்குத் தெரிந்தவரை, இரண்டு மனிதர்கள்கூடக் கடவுளைப் பற்றி ஒரேவிதமான கருத்தைக் கொண்டிருப்பதில்லை. ஆகவே வெவ்வேறு மனோபாவங்களுக்கும், தட்பவெப்ப நிலைகளுக்கும், ஏற்ப வெவ்வேறு சமயங்கள் எப்போதும் இருந்து வரக்கூடும்.

ஒரு மனிதனை இன்னொருவனிடமிருந்து பிரிப்பதற்காக மதங்கள் ஏற்படவில்லை. மனிதர்களைச் சேர்த்து வைப்பதுதான் அவற்றின் நோக்கம்.

இந்தியாவில் மாத்திரம் அன்றி உலகெங்கிலும் உள்ள பல்வேறு மதத்தினரும் ஒருவரோடு ஒருவர் தொடர்பு கொள்வதன் பலனாக இப்போதைவிடச் சிறந்த மனிதர்கள் ஆகவேண்டும் என்று நான் பெரிதும் விரும்புகிறேன். அவ்வாறு நடந்தால் உலகம் இப்போது இருப்பதைவிட மிகச் சிறந்த உறைவிடமாகிவிடும்; மிகப் பரந்த சகிப்புத் தன்மை ஏற்படவேண்டும் என்று வேண்டுகிறேன், அந்த நோக்கத்துடன் பாடுபட்டு வருகிறேன். ஒவ்வொரு மதத்தையும் அந்தந்த மதத்தினரின் நிலையிலிருந்தே ஆராய வேண்டும் என்று மக்களைக் கேட்டுக்கொள்கிறேன். நான் கனவு காணும் இந்தியா ஒரே ஒரு மதத்தைப் பேணவேண்டும் என்று—அதாவது முற்றிலும் ஹிந்து நாடாகவோ, முற்றிலும்

கிறிஸ்தவ நாடாகவோ, முற்றிலும் முஸ்லிம் நாடாகவோ, அது இருக்க வேண்டும் என்று—நான் விரும்பவில்லை. அதற்கு மாறாக, முற்றிலும் சகிப்புத் தன்மை வாய்ந்ததாக, தன்னுடைய மதங்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று அனுசரணையாகப் பணிபுரியும் விதத்தில், அது இருக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

ஒரு மதம்தான் இருக்க வேண்டும் என்பது இப்போதைய தேவை அல்ல; பல்வேறு மதத்தினரும் பரஸ்பர மரியாதையுடனும் சகிப்புத்தன்மையுடன் இருக்கவேண்டும் என்பதுதான் தேவைப்படுகிறது. முழு ஒருமை நிலையை ஏற்படுத்த நாம் விரும்பவில்லை, வேற்றுமைகள் இடையே ஒற்றுமை காணவே விழைகிறோம். வளமுறைகள் பாரம்பரிய விளைவுகள், தட்ப வெப்ப விளைவுகள், சூழ்நிலை விளைவுகள் ஆகியவற்றை வேரறுப்பதற்கான முயற்சி எதுவும் தோற்பது திண்ணம் என்பதுடன், பாதகச் செயலுமாகும். மதங்களின் ஆன்மா ஒன்றே; ஆனால் அது பலப்பல உருவங்களை எடுத்திருக்கிறது. காலாந்தம் வரை இவ்வுருவங்கள் நீடித்திருக்கும். விவேகிகள் வெளிக்கூட்டைப் புறக் கணித்துவிட்டு, பல்வேறு கூடுகளுக்குள்ளும் ஒரே ஆன்மா உறைவதைக் காண்பார்கள். தங்கள் கற்பனைப்படி உள்ள இஸ்லாம்தான் உலகம் முழுவதையும் ஆளவேண்டும் என்று முஸல்மான்கள் நினைத்தால் அது வீண் கனவுதான்; அதைப் போலவே இந்தியாவிலிருந்து இஸ்லாம், கிறிஸ்தவ அல்லது ஜொராஸ்திரிய மதத்தை விரட்டி விடலாம் என்று ஹிந்துக்கள் நினைத்தால் அதுவும் வீண் கனவே. கடவுள் ஒருவரே என்றும், அவருடைய தீர்க்க தரிசிகள் சங்கிலித் தொடர்போல் வந்துகொண்டே இருப்பார்கள் என்றும் நம்புவது இஸ்லாமிய அனுஷ் டானத்துக்குப் போதுமானது என்றால், பின்னர் நாம் எல்லாருமே முஸல்மான்கள்தாம்; ஆனால் அதே

சமயத்தில் நாம் எல்லோருமே ஹிந்துக்களாகவும், கிறிஸ்தவர்களாகவும் இருப்போம். சத்தியம் என்பது எந்த ஒரு மத நூலுக்கும் ஏகபோகமான உடைமை அல்ல.

நம்மைக் கிறிஸ்தவர்கள் என்றோ, ஹிந்துக்கள் என்றோ, முகம்மதியர்கள் என்றோ நாம் அழைத்துக் கொள்ளலாம். நாம் எச்சமயத்தினராக இருந்தாலும், இந்த வேறுபாடுகளின் அடியில் தெட்டத் தெளிவான ஒருமைப்பாடு இருக்கிறது; பல்வேறு மதங்களுக்கு அடியில் ஒரு பொது மதமும் இருக்கிறது. முகம்மதியர்கள், கிறிஸ்தவர்கள், அல்லது ஹிந்துக்களாக இருக்கும் நம்மிடையே ஒற்றுமை அம்சங்கள் மிகப் பலவாகவும், வேற்றுமை அம்சங்கள் மிக சிலவாகவும் இருப்பதை எப்போதாவது நாம் கண்டுகொள்வோம் என்பது என் அனுபவம் காட்டும் உண்மை.

என்னுடைய சொந்த ஹிந்து மதத்தைப் போலவே வேறு ஒவ்வொரு மதமும் எனக்கு அருமையானது...... மதம் மாற்றுதல் என்ற சிந்தனையையே என்னல் அனுமதிக்க முடியாது. ஒரு ஹிந்து இன்னும் சிறந்த ஹிந்துவாகவும், ஒரு முஸல்மான் இன்னும் சிறந்த முஸல்மானகவும், ஒரு கிறிஸ்தவர் இன்னும் சிறந்த கிறிஸ்தவராகவும் உயர்வதற்கு நாம் உதவி செய்ய வேண்டும்.......நம்முடைய மதத்தில் அதிக உண்மை இருப்பதாகவும், இன்னொருவர் மதத்தில் குறைவான உண்மை இருப்பதாகவும் கருதுகின்ற இரகசியக் கர்வத்தை நம்மிடையேயிருந்து அடியோடு ஒழிக்க வேண்டும். மற்ற மதங்கள் பற்றிய நம்முடைய கொள்கை தெட்டத் தெளிவாகவும், முற்றிலும்

அந்தரங்க சுத்தியானதுமாகவும் இருக்கவேண்டும். "ஹே, கடவுளே, எனக்கு நீங்கள் தந்துள்ள வெளிச்சத்தை அவனுக்கும் கொடுங்கள்," என்பது மற்றவர்களுக்காக நாம் புரியும் பிரார்த்தனையாக இருக்கக் கூடாது. "அவன் மகோன்னதச் சித்தி பெறுவதற்குத் தேவையான வெளிச்சத்தையும் சத்தியத்தையும் அவனுக்கு முழு அளவில் வழங்குங்கள்" என்றே பிரார்த்திக்க வேண்டும்......தங்கள் மத விலாசத்தை மாற்றிக் கொள்ள (தாங்கள் மதம் மாறுவதற்கு) சிலர் விரும்பினால், அவர்களுடைய செயல் சுதந்திரத்தை நான் தடுக்க முடியாது; ஆனால் அவர்கள் அவ்வாறு செய்வதைக் கண்டு வருந்துவேன்.

ஹிந்து மதம் தனித்து ஒதுங்கிய சமயம் அல்ல, உலகின் எல்லாத் தீர்க்கதரிசிகளையும் வணங்குவதற்கு அதில் இடம் இருக்கிறது. மற்றவர்களைத் தன்பால் இழுத்துக் கொள்ள முயலும் மதம் அல்ல அது. எத்தனையோ பழங்குடிகளை அது தன்னுடன் சேர்த்துக் கொண்டுள்ளது என்பது உண்மைதான்; ஆனால் பரிணாம ரீதியில் கட்புலனாகாத முறையில்தான் அது இவ்வாறு கிரகித்துக்கொண்டது. ஒவ்வொருவரும் தம்முடைய மதம் அல்லது தர்மத்தின்படி கடவுளை வணங்குமாறு ஹிந்து மதம் கூறுகிறது; இவ்விதம், அது மற்ற எல்லா மதங்களுடனும் சமாதானமாக வாழ்கிறது.

மதப் பிரிவு மனப்பான்மையுடன் என்னை ஒரு கிறிஸ்தவன் என்று கூறிக்கொள்ள முடியாது, ஆயினும், அஹிம்ஸையில் எனக்கு இருக்கும் அழியாத நம்பிக்கையின் ஒரு அம்சமாக ஏசுநாதர் அனுபவித்த துன்

பத்தின் உதாரணம் இடம் பெற்றுள்ளது. என்னுடைய லோகாயத, மற்றும் ஆன்மிக நடவடிக்கைகளை யெல்லாம் இந்த அஹிம்ஸையே நெறிப்படுத்துகிறது.

தெய்வ ஆதரிசனம் பெற்ற மதங்களுள் ஒன்று இஸ்லாம் என்று நிச்சயமாகக் கருதுகிறேன். ஆகவே புனித குர்ரானை ஆதரிசம் பெற்ற ஒரு நூலாகவும், முகம்மதுவை தீர்க்கதரிசிகளுள் ஒருவராகவும் மதிக்கிறேன்.

(வேதங்கள் மாத்திரமே தெய்வீகமானவை என்று நான் நம்பவில்லை. வேதங்களைப் போலவே, பைபிள், குர்ரான், ஜெண்ட் அவஸ்தா ஆகியவையும் தெய்வீக ஆதரிசம் பெற்றவை என்று நம்புகிறேன்.) ஹிந்து சாத்திரங்களில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது என்றால், அவற்றில் உள்ள ஒவ்வொரு பாசுரமும், ஒவ்வொரு வார்த்தையும் தெய்வீக ஆதரிசம் பெற்றது என்று நான் ஒப்புக்கொள்ள வேண்டியதில்லை..............பகுத்தறிவுக்கும் தார்மிக உணர்வுக்கும் முரணான வியாக்கியானம் எதற்கும் நான் கட்டுப்பட முடியாது. அந்த வியாக்கியானம் எவ்வளவு அறிவு செறிந்ததாக இருந்தாலும் சரி.

நான் சொற்களை முக்கியமானவையாகக் கருதுபவன் அல்ல. அதனால், உலகில் உள்ள பல்வேறு சாத்திரங்களின் பொருளைப் புரிந்துகொள்வதற்கே நான் முயல்கிறேன். சத்தியத்தையும் அஹிம்ஸையையும் இந்தச் சாத்திரங்களே வலியுறுத்தியிருக்கின்றன; அவற்றை விளக்குவதற்கு இந்த உரைகல்லையே நான் உபயோகிக்கிறேன். இவற்றுக்கு முரணாக உள்ளவைகளை

நிராகரிக்கிறேன். பொருத்தமானவைகளை யெல்லாம் கிரகித்துக் கொள்கிறேன்.

சத்தியம், நன்னெறி ஆகியவற்றைவிட உயர்ந்த மதம் எதுவும் இல்லை.

தன்னுடைய சொந்த மதத்தின் கருப்பொருளை ஒருவன் தெரிந்துகொண்டால், மற்ற சமயங்களின் கருப் பொருளையும் அவன் அறிந்துவிட்டதாகக் கொள்ளலாம்.

பகுத்தறிவுக்கு முரணாகவும் அறநெறிக்கு விரோத மாகவும் உள்ள மதச் சித்தாந்தம் எதையும் நான் நிராகரிக்கிறேன். அறநெறிக்கு முரணாக இல்லாவிடில் பகுத்தறிவுக்குப் பொருத்தமற்ற மத உணர்ச்சியைக் கூடச் சகித்துக் கொள்வேன்.

அறநெறி என்ற ஆதாரத்தை இழந்துவிட்டால் நாம் மத அபிமானிகளாக இருக்க முடியாது. அற நெறியைவிட மதம் உயர்ந்தது என்ற பேச்சுக்கே இடம் கிடையாது உதாரணமாக, தன்னிடம் அசத்தியம், குரூர சுபாவம், காமவெறி ஆகியவை இருந்தபோதிலும் தன் பக்கமே கடவுள் இருப்பதாக ஒருவன் உரிமை கொண்டாட முடியாது.

நல்லது, கெட்டது என்ற வித்தியாசம் பார்க்காமல், நாம் புரிந்துகொள்ளாத பழைய பழக்க வழக்கங்களை அடிமைகள் போலப் பின்பற்றினால், அந்த வினாடி முதல் நம்முடைய வளர்ச்சி நின்றுவிடும். கடந்த காலத்தில் உயர்ந்தவையாகவும் சிறந்தவையாகவும், இருந்தவற்றுக்கெல்லாம் நாம் வாரிசுகள் என்று பெருமை கொள்ளலாம். ஆனால் பழைய தவறுகளைப் பெருக்குவதன் மூலம் நம்முடைய பிதிரார்ஜிதத்தை நாம் களங்கப்படுத்தக் கூடாது.

எங்கு பயம் இருக்கிறதோ அங்கு மதம் இருக்காது.

அஞ்சாமை என்பது அகம்பாவத்தையோ தடித்தனத்தையோ குறிக்கவில்லை. இந்தக் குணங்கள் அச்சத்தின் அறிகுறிகளே. நிதானமும் மனச்சாந்தியும் இருந்தால்தான் அஞ்சாமை பிறக்கும். கடவுளிடம் உயிர்துடிப்புள்ள நம்பிக்கை இருந்தால்தான் நிதானமும் மனச்சாந்தியும் கிடைக்கும்.

நான் ஒருவிதத்தில் விக்கிரக உபாசகன்; அதே சமயத்தில் விக்கிரக விரோதியும்கூட. விக்கிரக வழிபாட்டுக்கு ஆதாரமான உணர்ச்சியை நான் போற்றுகிறேன். மனித இனத்தை உயர்த்துவதில் இந்த உணர்ச்சிக்கு முக்கிய பங்கு உண்டு. நம்முடைய நாட்டைப் பவித்திரப்படுத்துகின்ற ஆயிரக்கணக்கான புனிதக் கோவில்களை என் உயிரைக் கொடுத்துப் பாதுகாப்பதற்கான ஆற்றல் எனக்கு இருக்கவேண்டும் என்று விரும்புகிறேன்.

தன்னுடைய சொந்த வழிபாட்டு முறையைத் தவிர வேறு எந்த முறையிலும் தெய்வத்தை வழிபடுவது

சிறிதும் சரியல்ல என்று கருதுவது மதவெறியின் தன்மை; இந்த மதவெறி சூக்ஷ்மமான ஒருவித விக்கிரக உபாசனை யாகும்; இத்தகைய விக்கிரக உபாசனையை அழிப்பவன் நான். சாதாரண விக்கிரக வழிபாட்டைவிட அதிக நளினமானது, தந்திரமானது, பயங்கரமானது இந்த மதவெறி. ஒரு சிறு கல் அல்லது தங்கப் பிரதிமையில் கடவுள் இருப்பதாக எண்ணுவது கண்கூடான, ஸ்தூல மான வழிபாட்டு முறையாகும்.

கோவில்கள் இருப்பது பாபம் என்றோ, மூட நம்பிக்கை என்றோ நான் கருதவில்லை. ஏதாவது ஒரு விதப் பொது வழிபாடும், பொது வழிபாட்டுத் தலமும் இருப்பது மனிதர்களுக்கு அவசியம் என்று தோன்று கிறது.

மத ஆர்வமுள்ள ஹிந்து நண்பர் ஒருவர் என்னைச் செல்லமாகக் கண்டித்து இவ்வாறு எழுதியிருக்கிறார்; ''ஆசிரமத்தில் 'கல்மா'வுக்கு இப்போது இடம் அளித் திருக்கிறீர்கள். உங்கள் ஹிந்து மதத்தைக் கொல்வ தற்கு இன்னும் என்ன பாக்கியிருக்கிறது?'' அவருக்குப் பதிலளிக்கும் வகையில் இக்குறிப்பை எழுதுகிறேன்.

இதன் விளைவாக என்னுடைய ஹிந்து மதமும், ஆசிரமத்தில் உள்ள மற்ற ஹிந்துக்களின் ஹிந்து மதமும் வளர்ந்திருக்கின்றன என்று உறுதியாக நம்புகிறேன். எல்லா மதங்களிடமும் நமக்குச் சமமான பக்தி இருக்க வேண்டும். பாத்ஷாகான் (எல்லை காந்தி) எப்போது வந்தாலும் இங்கு நாங்கள் நடத்தும் வழிபாட்டில் மகிழ்ச்சியுடன் கலந்து கொள்கிறார். இராமாயணப் பாடலின் மெட்டு அவருக்கு மிகவும் பிடித்திருக்கிறது.

கீதையை அவர் கூர்ந்த கவனத்துடன் கேட்கிறார். இதன் விளைவாக அவருடைய இஸ்லாத்துக்குக் குறைவு ஏற்பட்டு விடவில்லை. அப்படியானால், இதயத்தில் அதே பக்தியுடனும் சிரத்தையுடனும் குர்ரானை நான் ஏன் கேட்கக் கூடாது?

இராமருக்கு ஆயிரம் நாமங்கள்தாம் உண்டு என்பதில்லை. அவருடைய நாமங்கள் எண்ணில் அடங்கா. அல்லா, குதா, ரஹீம், ரஸ்ஸாக் அல்லது படி அளப்பவர் என்று அழைத்தாலும், அல்லது உண்மையான பக்தரின் இதயத்திலிருந்து வரும் வேறு எந்தப் பெயராலும் அழைத்தாலும், அவருக்கு ஒன்றுதான்.

/ மதத்தின் ஆன்மாவும் சாரமும் பிரார்த்தனைதான் என்று நான் நம்புகிறேன்; \ஆகவே பிரார்த்தனைதான் மனித வாழ்வின் கருப்பொருளாக இருக்க வேண்டும்; ஏனெனில் மதம் இல்லாமல் எந்த மனிதனும் வாழ முடியாது| சில மனிதர்கள் தங்கள் பகுத்தறிவின் ஆணவம் காரணமாக, மதத்துக்கும் தங்களுக்கும் சம்பந்தமே கிடையாது என்று கூறுகின்றனர். ஆனால் இவ்வாறு சொல்வது, நாசி இல்லாமலே சுவாசிப்பதாக ஒருவன் கூறுவதற்கு ஒப்பானது.........

| பிரார்த்தனை புரிபவன் தன் மனத்துள் சாந்தி பெறுவதுடன் உலகம் முழுவதுடனும் சமாதானமாக இருப்பான். நெஞ்சத்தில் பிரார்த்தனை இல்லாமல் உலக விவகாரங்களில் ஈடுபடும் மனிதன், தான் அவஸ்தைப் படுவதுடன் உலகத்தையும் அவஸ்தைக்கு உள்ளாக்குவான்.| ஆகவே, மரணத்துக்குப் பின்னர் மனிதனுக்குப் பிரார்த்தனை உதவுவது மாத்திரமன்றி, இக உலக வாழ்விலும் பிரார்த்தனை அவனுக்கு அளப்பரிய நன்மையை அளிக்கிறது. பிரார்த்தனை ஒன்றுதான் நம்முடைய அன்றாட அலுவல்களுக்கு ஒழுங்கையும், சாந்தியையும், விசிராந்தியையும் கொடுக்க வல்லது.........

ஆண்டவனின் பிரசன்னத்தை இருபத்து நான்கு மணி நேரமும் உணர்வதற்கு ஒருவர் சாதகம் செய்து கொண்டால், அவருக்குத் தனியான பிரார்த்தனை நேரம் எதுவும் தேவையில்லை. ஆனால் பெரும்பாலான மனிதர்களுக்கு இது சாத்தியமல்ல. அல்பமான அன்றாட உலக வாழ்வில் அவர்கள் மூழ்கிக்கிடக்கின்றனர். தினந்தோறும், ஒருசில நிமிஷங்களாவது, புற உலகிலிருந்து தங்கள் மனத்தை உள்ளே இழுத்துக் கொள்ள அவர்கள் பழகிக் கொண்டால், அதுவே அளவற்ற பயன் அளிக்க வல்லது. அவர்கள் மௌனமாகக் கடவுளை தியானித்தால், பரபரப்புகளிடையே சலனமற்ற சாந்தியை அனுபவிக்கவும், சினத்தை அடக்கவும், பொறுமையை வளர்த்துக் கொள்ளவும் அது உதவும்.

நான் சொல்வது கட்டுக்கதை அல்ல. கற்பனைச் சித்திரம் எதையும் நான் வரையவில்லை. தங்கள் முன்னேற்றத்தில் குறுக்கிட்ட ஒவ்வொரு சங்கடத்தையும் பிரார்த்தனை மூலம் முறியடித்துள்ள மனிதர்களின் சாட்சியத்தையே நான் சுருக்கிக் கூறியிருக்கிறேன்; அத்துடன் அடியேனுடைய சாட்சியத்தையும் சேர்த்திருக்கிறேன். நம்பிக்கைக்கும் பிரார்த்தனைக்கும் நான் எவ்வளவு கடமைப்பட்டிருக்கிறேன் என்பதை என் வாழ்நாளில் நான் மேலும் மேலும் உணர்ந்து வருகிறேன்; நம்பிக்கையும் பிரார்த்தனையும் எனக்கு ஒன்றுதான். சிலமணி நேரத்திலோ, சில நாட்களிலோ, சில வாரங்களிலோ மாத்திரம் நான் பெற்ற அனுபவத்தைக் குறிப்பிடவில்லை; சுமார் 40 ஆண்டுகளாக இடையறாமல் பெற்றுவந்துள்ள அனுபவத்தையே குறிப்பிட்டிருக்கிறேன். ஏமாற்றங்கள், அடர்ந்த இருள், விரக்தி மனப்பான்மை, எச்சரிக்கை மனப்பான்மை, நளினமான கர்வ உணர்வு முதலியவை எனக்கும் ஏற்பட்டதுண்டு; ஆனால் இதுவரை இந்த

இடையூறுகளுள் ஒவ்வொன்றையும் தெய்வ நம்பிக்கை யின் மூலம் நான் இறுதியில் முறியடித்திருக்கிறேன் இன்னமும் என் நம்பிக்கை குறைவானதுதான், நான் விரும்பும் அளவுக்கு அதிகமானது இல்லைதான்; ஆயினும் அதுவே இவ்வளவு சாதித்திருக்கிறது......

நம்மைப் பூஜ்ய நிலைக்கு தணித்துக் கொண்டால் தான் நம்முள் இருக்கும் தீமையை வெல்ல முடியும். உண்மையான சுதந்திரம் பெறுவதற்கு விலையாகப் பூரண சரணாகதிக்குக் குறைவானது எதையும் நம்மிட மிருந்து கடவுள் ஏற்பதில்லை; அந்த உண்மையான சுதந்திரம்தான் நமக்கு வேண்டியது. இவ்வாறு ஒருவன் தன்னையே இழந்துவிட்டால், உடனே அவன் எல்லாச் சீவராசிகளுக்கும் தொண்டாற்றத் தொடங்கி விடுவான். அதுவே அவனுக்கு ஆனந்தமாகவும், உல்லாசப் பொழுதுபோக்காகவும் இருக்கும். அவன் ஒரு புது மனிதனாகிவிடுவான். கடவுள் படைத்த சீவராசிகளுக்குச் சேவை செய்வதற்காகத் தன்னைக் கரைத்துக் கொள்ள அவன் சளைப்பதேயில்லை.

ஒவ்வொரு நாளையும் பிரார்த்தனையுடன் தொடங் குங்கள்; ஆனால் ஆன்மபூர்வமாகப் பிரார்த்தனை புரியுங்கள், அப்போதுதான் அது மாலைவரை உங்க ளுடன் தங்கியிருக்கும். பிரார்த்தனையுடன் அன்றைய தினத்தை முடியுங்கள்; இவ்வாறு செய்தால் கனவு களும் சிம்ம சொப்பனங்களும் இல்லாமல் இரவு அமைதியாகக் கழியும். எப்படிப் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று கவலைப்பட வேண்டாம்; எந்த உருவில் வேண்டுமானாலும் அது இருக்கட்டும்; உங்களை இறைவனுடன் பிணைக்கும் விதத்தில் அது இருக்க வேண்டும், அவ்வளவுதான். ஆனால், பிரார்த்தனையின் வடிவம் எப்படியிருந்தாலும், பிரார்த்தனையை வாய்

ஓதும்போது உங்கள் ஆன்மா தரிகெட்டுத் திரியக் கூடாது.

தன்னைத்தானே கட்டுப்படுத்திக் கொள்வது நிர்ப்பந்தம் ஆகாது. கட்டுப்பாடு இல்லாத மார்க்கத்தில் செல்பவன், அதாவது அமிதமான புலனுகர்ச்சியில் ஈடுபடுபவன், உணர்ச்சியின் நிரந்தர அடிமையாக இருப்பான்; ஆனால் விதிகளுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் தன்னை உட்படுத்திக் கொள்பவன் சுதந்திரனாக இருப்பான். சூரிய சந்திரர்கள் உட்பட பிரபஞ்சத்தில் உள்ள எல்லாப் பொருட்களும் சில நியதிகளுக்குக் கட்டுப்பட்டிருக்கின்றன. இந்த நியதிகளின் கட்டுப்பாடு இல்லாவிடில், உலகம் ஒரு விநாடிகூட நிலைத்திருக்க முடியாது. ஓரளவாவது கட்டுப்பாடுகளை நீங்களாகவே விதித்துக் கொள்ளாவிட்டால் சீர்குலைந்து போவீர்கள்; பிரார்த்தனை என்பது அவசியமான ஆன்மிகக் கட்டுப்பாடு ஆகும். ஒழுங்குமுறையும் கட்டுப்பாடும்தான் நம்மை விலங்கினத்திலிருந்து வேறுபடுத்துகின்றன. நாலுகால் பிராணிகளாக நடக்காமல், மனிதர்களாக நாம் தலைநிமிர்ந்து நடக்கவேண்டும் என்றால், கட்டுப்பாடு, ஒழுங்குமுறை ஆகியவற்றைப் புத்திபூர்வமாக, தம்மிச்சையாக ஏற்றுக் கொள்ளவேண்டும்.

கேள்வி : விஞ்ஞானம், நவீன தத்துவம் ஆகியவற்றைக் கற்பதன் விளைவாக, நம்முடைய இளைஞர்களின் நம்பிக்கை தகர்ந்து, நம்பிக்கையின்மை என்ற தீ அவர்களைத் தகிக்கிறது. அவர்கள் சம்பந்தமான சங்கடம் இதுதான்.

பதில் : ஆன்மிக அனுபவமாக அல்லாமல், அறிவின் முயற்சியால் நம்பிக்கை ஏற்படவேண்டும் என்று அவர்கள் கருதுவதுதான் இதற்குக் காரணம். வாழ்க்கைப் போராட்டத்திலே ஒரு குறிப்பிட்ட எல்லை

வரை தான் அறிவு நமக்கு வழிகாட்டுகிறது; முக்கியமான சமயத்தில் அது நம்மைக் கைவிட்டுவிடுகிறது. பகுத்தறிவுக்கு அப்பாலும் நம்பிக்கை செல்கிறது. அடிவானம் பேரிருளாக இருக்கும்போதுதான், நம்பிக்கை பேரொளி வீசிக்கொண்டு நம்மைக் காப்பாற்ற வருகிறது. இத்தகைய நம்பிக்கைதான் நம்முடைய இளைஞர்களுக்குத் தேவை; அறிவின் அகந்தையை உதறிவிட்டு, இறைவனின் சித்தத்துக்கு அடியோடு சரணகதி செய்யும் போதுதான் இது தோன்றும்.

நம்மையும், சம்சயவாதிகளையும்கூட, அறிவைவிட மிகமிகப் பெரியதொரு சக்தி ஆளுகிறது. சம்சயவாதிகளின் சந்தேகமும் தத்துவமும் அவர்களுடைய வாழ்க்கையின் நெருக்கடியான கட்டங்களில் அவர்களுக்குக் கைகொடுப்பதில்லை. அவர்களைக் காப்பதற்கு இவற்றைவிடச் சிறந்த புறச் சக்தி ஒன்று தேவைப்படுகிறது. ஆகவே என்னிடம் யாராவது வினவினால் அவரிடம் நான் இவ்வாறு சொல்வேன். உம்மை ஒரு பூஜ்ய நிலைக்குத் தாழ்த்திக் கொள்ளாவிடில் கடவுள் அல்லது பிரார்த்தனையின் பொருளை நீர் புரிந்து கொள்ளவே முடியாது. நீர் எவ்வளவு உயர்ந்தவராக இருந்தாலும், எவ்வளவு பிரமாதமான அறிவாளியாக இருந்தாலும், பிரபஞ்சத்திலே நீர் ஒரு சிறு புள்ளிதான். வாழ்க்கை விஷயங்களில் வெறும் அறிவியல் நோக்கு போதுமானதல்ல. ஆன்மிக நோக்குத்தான் திருப்தி அளிக்க முடியும், ஆனால் அது அறிவுக்கு அண்டுபடாது. பணக்காரர்களின் வாழ்க்கையில் கூட நெருக்கடியான கட்டங்கள் ஏற்படுகின்றன; பணமும் பாசமும் தரக்கூடிய எல்லாப் பொருட்களும் அவர்களைச் சூழ்ந்திருந்தாலும் வாழ்க்கையின் சில சந்தர்ப்பங்களில் அவர்கள் அடியோடு புத்திமுட்டிப் போய்விடுகின்றனர். இத்தகைய சந்தர்ப்பங்களில்தான்,

நல்வாழ்வின் ஒவ்வொரு நடப்படிக்கும் வழிகாட்டுகின்ற கடவுளின் தோற்றம் நமக்குச் சற்றே தென்படுகிறது. அதுதான் பிரார்த்தனை.

அரசியல் அரங்கிலே நிராசை நேருக்கு நேர் நிற்கும் போதுகூட நான் சாந்தியை இழந்ததில்லை. சொல்லப் போனால், என்னுடைய சாந்தியைக் கண்டு பொறாமைப் பட்டவர்களும் உண்டு. பிரார்த்தனையின் வாயிலாகவே அந்தச் சாந்தி வருகிறது என்பதை உங்களுக்குத் தெரி வித்துக் கொள்கிறேன். நான் பெரிய படிப்பாளி அல்ல, ஆனால் பிரார்த்தனைப் பிரியன் என்று பணிவுடன் உரிமை கொண்டாடுகிறேன்...........

அனுபவபூர்வமான என்னுடைய சாட்சியத்தைச் சொல்லிவிட்டேன். அன்றாடம் பிரார்த்தனை செய்வதன் மூலம் தம்முடைய வாழ்க்கையில் புதிதாக ஒன்று, ஒப்பற்ற ஒன்று சேர்கிறது என்பதை ஒவ்வொருவரும் முயன்று கண்டு கொள்வாராக.

★ ★ ★ ★

# V. தரித்திர நாராயணன்

மனித அறிவினால் பெயரிடமுடியாத, அளவிட முடியாத, கடவுளுக்கு மனித வர்க்கம் சூட்டியுள்ள இலட்சக்கணக்கான நாமங்களில் 'தரித்திர நாராயணன்' என்பதுவும் ஒன்று. தரித்திரர்களின் கடவுள், ஏழை மக்களின் இதயத்தில் தோன்றுகின்ற இறைவன் என்பது இதன் பொருள்.

கோடிக்கணக்கான என் மக்களை நான் அறிவேன் என்று உரிமை கொண்டாடுகிறேன். இரவு பகல் இருபத்திநான்கு மணிநேரமும் நான் அவர்களுடனேயே இருக்கின்றேன். என்னுடைய சிரத்தையெல்லாம் அவர்களிடம்தான். ஏனெனில் வாயில்லாப் பிராணி களாக இருக்கும் கோடிக்கணக்கான ஏழைகளின் இதயத்தில் உறையும் கடவுளைத் தவிர வேறு எந்தக் கடவுளையும் நான் ஒப்புக்கொள்வதில்லை. கடவுள் தங்க ளிடம் உறைவது அவர்களுக்குத் தெரியாது. எனக்குத் தெரியும். இந்த மக்கட் கோடிகளுக்குத் தொண்டாற்று வதன் வாயிலாகவே கடவுள் என்ற சத்தியத்தை, அல்லது சத்தியம் என்ற கடவுளை நான் வழிபடு கின்றேன்.

வேலையின்றிக் கொடும் பசியால் வாடும் ஜனங்க ளிடம் வேலை, உணவாகிய ஊதியம் என்ற உருவில் வரும் கடவுளே ஏற்றுக்கொள்ளப்படுவார்; வேறு உருவில் வருவதற்குக் கடவுள்கூடத் துணியமாட்டார்.

தேக திடம் உள்ள ஒரு ஆண் அல்லது பெண்கூட வேலையோ உணவோ இல்லாமல் இருக்கும் வரை, நாம் ஒய்வெடுப்பது குறித்தும் திருப்தியாக உணவருந்துவது குறித்தும் வெட்கப்படவேண்டும்.

முப்பது கோடி மக்கள் வேலையின்றி இருப்பதும், பல கோடிப்பேர் வேலையில்லாமையால் தன்மானத்தையும் கடவுள் நம்பிக்கையையும் இழந்து நாளுக்கு நாள் இழிவடைந்து வருவதும், எவ்வளவு பிரம்மாண்டமான உற்பாதம் என்பதைக் கற்பனை செய்து பாருங்கள். ஒளியிழந்த கண்களுடன் இருக்கின்ற, உணவே கடவுள் என்று கருதுகின்ற, கோடிக்கணக்கான பட்டினிப் பட்டாளத்தினருக்குக் கடவுளின் போதனையை நான் எடுத்துச் சொல்வதும் அதோ இருக்கும் நாயினிடம் ஓதுவதும் ஒன்றுதான். புனிதமான வேலை என்ற போதனையை அவர்களுக்கு வழங்குவதன் மூலமே கடவுளின் போதனையை அவர்களுக்கு நான் வழங்க முடியும். காலையில் நேர்த்தியான சிற்றுண்டி அருந்தி விட்டு, அதைவிட நேர்த்தியான பகலுணவை எதிர் பார்த்துக் கொண்டு இங்கே உட்கார்ந்திருக்கும் நாம் கடவுளைப் பற்றிச் சம்பிரமமாகப் பேசலாம்; ஆனால், அன்றாடம் இரண்டு வேளைச் சாப்பாடு கூட இல்லாமல் கஷ்டப்படும் கோடிக்கணக்கான மக்களிடம் கடவுளைப் பற்றி நான் எவ்வாறு பேசுவது? உணவு என்ற உருவத்தில்தான் கடவுள் அவர்கள் முன் தோன்ற முடியும்.

பொருளாதாரமே ஏழைகளுக்கு ஆன்மிகமாகும், நவீன முன்னேற்றம் பற்றி அவர்களிடம் நீங்கள்

பேசலாம். ஆண்டவனைப் பற்றி வீணுகப் பேசி அவர்களை நீங்கள் அவமதிக்கலாம். கடவுளைப்பற்றி நாம் அவர் களிடம் பேசினுல் உங்களையும் என்னையும் பிசாசுகள் என்றே அவர்கள் அழைப்பர். ஏதாவது ஒரு கடவுளை அவர்கள் அறிந்திருக்கின்றனர் என்ருல், பயங்கரமான பழிவாங்குகின்ற, இரக்கமற்ற, கொடும்பாவிதான் அந்தக் கடவுள்.

பல ஆண்டுகளுக்கு முன் நான் படித்த கவிதை ஒன்று, விவசாயியை உலகின் தந்தை என்று வர்ணிக் கிறது. ஆண்டவன் அன்னதாதா என்ருல் அவருடைய கையாக இருப்பவன் விவசாயி. அவனுக்கு நாம் பட்டுள்ள கடனை எப்படித் தீர்க்கப் போகிருேம்? இது வரை அவனுடைய உழைப்பைச் சுரண்டியே நாம் வாழ்ந்து வந்திருக்கிருேம்.

கோடிக்கணக்கான ஜனங்களுக்குக் கிடைக்காத எதையும் நாம் ஏற்றுக் கொள்ளக் கூடாது என்பது பொன்போன்ற விதியாகும். இவ்வாறு நிராகரிக்கும் ஆற்றல் நமக்குத் திடீரெனச் சித்திக்காது. வெகு ஜனங் களுக்குக் கிட்டாத உடமைகளையும் வசதிகளையும் நாம் பெறக் கூடாது என்ற மனப்பான்மையை முதலில் வளர்த்துக் கொள்ள வேண்டும். அடுத்தபடியாக, அந்த மனப்பான்மைக்கு உகந்த விதத்தில் நம்முடைய வாழ்க்கையைக் கூடிய சீக்கிரம் மாற்றி அமைத்துக் கொள்ள வேண்டும்.

செல்வத்தையும், அந்தச் செல்வம் தருகின்ற அதிகாரத்தையும் தம்மிச்சையாகப் பொதுநலனுக்குக்

கொடுத்துப் பகிர்ந்து கொள்ளாவிடில் பலாத்கார, இரத்தக்களரிப் புரட்சி என்றுவது ஒரு நாள் ஏற்பட்டே தீரும்.

இன்று அஜகஜாந்தரமான பொருளாதார ஏற்றத் தாழ்வு காணப்படுகிறது. பொருளாதார சமத்துவமே சோஷலிஸத்தின் அடிப்படை. ஒரு சிலர் செல்வத்தில் புரள வெகு ஜனங்கள் சாப்பாட்டுக்குக் கூடத் திண்டாடுகின்ற அநியாய ஏற்றத்தாழ்வுகள் நிலவுகின்ற இப்போதைய நிலைமையில் ராமராஜ்யம் ஏற்பட முடியாது.

ஆண், பெண் ஒவ்வொருவரும் சொந்த முயற்சியால் பொருளாதார ரீதியில் உயரவேண்டும் என்பது தான் இந்தியாவின் பொருளாதார சுதந்திரம் என்பதற்கு நான் காணும் பொருள். அந்த அமைப்பிலே எல்லாருக்கும் போதிய உடை கிடைக்கும்— வெறும் கௌபீனம் அல்ல; அவசியமானவை என்று நாம் கருதும் எல்லா உடைகளும் கிடைக்கும்; இப்போது கோடிக்கணக்கான மக்களுக்குக் கிடைக்காத பால், வெண்ணெ ஆகியவை உட்படப் போதிய உணவு எல்லாருக்கும் கிடைக்கும்.

தனியொருவன் உணவோ உடையோ இல்லாமல் கஷ்டப்படாத விதத்தில் இந்தியாவின் பொருளாதார அமைப்பு—உலகத்தின் பொருளாதார அமைப்பும் கூட—இருக்க வேண்டும் என்று நான் கருதுகிறேன்.

அதாவது, தேவைக்கேற்ற வருமானம் அளிப்பதற்குப் போதுமான வேலை ஒவ்வொருவருக்கும் கிடைக்க வேண்டும். வாழ்க்கையின் அத்தியாவசியப் பொருட்களை உற்பத்தி செய்யும் சாதனங்கள் வெகுஜனங்களின் கட்டுப்பாட்டில் இருந்தால்தான் உலகெங்கிலும் இந்த இலட்சியம் கைகூட முடியும். கடவுள் தந்த காற்றையும் நீரையும்போல இவையும் எல்லா மக்களுக்கும் தாராளமாகக் கிடைக்க வேண்டும்; பிறரைச் சுரண்டுவதற்கான வியாபாரச் சாதனமாக இவை பயன்படக் கூடாது. இவைகளை எந்த ஒரு நாடும், சமுதாயமும் அல்லது மனிதர்களின் கோஷ்டியும் ஏகபோகமாக்கிக் கொள்வது அநீதியாகும். இவ் எளிய கோட்பாடு அலட்சியம் செய்யப்படுவதால்தான் இந்தத் துரதிருஷ்ட நாட்டிலும் உலகின் மற்றப் பகுதிகளிலும் மக்கள் துன்பப்படுகின்றனர்.

பொருளியலையும் அறநெறியையும் நான் வேறுபடுத்திப் பார்ப்பதில்லை என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஒரு தனிநபரின் அல்லது ஒரு நாட்டின் ஒழுக்க நலனைப் பாதிக்கக் கூடிய பொருளியல் எதுவும் அறநெறிக்கு விரோதமானது, பாபகரமானது. ஆகவே ஒரு நாட்டை இன்னொரு நாடு வேட்டையாடுவதை அனுமதிக்கும் பொருளியல் அறநெறிக்கு முரணானது.

"எல்லா மனிதர்களும் பிறவியில் சமமானவர்கள், சுதந்திரர்கள்" என்பது இயற்கை நியதிக்கு முற்றிலும் பொருத்தமானதல்ல. உதாரணமாக, எல்லா மனிதர்களும் சம அறிவுடன் பிறப்பதில்லை; ஆனால் அதிக அறிவுள்ளவர்கள் அந்த அறிவை மற்றவர்

களுக்குப் பாதகமாகவும் சுயநலத்துக்காகவும் உபயோகிக்காமல், அறிவு குறைந்தவர்களுக்குத் தொண்டு புரிவதில் அதைப் பயன்படுத்தினால் சமத்துவ சித்தாந்தத்தை மெய்ப்பிக்க முடியும்.

பணம் திரட்டும் கலையுடன் கூடவே, அந்தச் செல்வத்தைப் பயனுள்ள முறையில் செலவிடுகின்ற கலையும் சேர்ந்திருக்க வேண்டும்; இல்லாவிடில் பணம் திரட்டுவது ஒரு இழிவான, அருவருக்கத்தக்க, கலையாகி விடுகிறது.......... இழிவு, தீக்குணம், ஊதாரித்தனம் ஆகியவற்றின் மறுபெயராகச் செல்வ உடைமை இருக்க வேண்டாம்.

"கோடி கோடியாகப் பணம் சம்பாதிக்க ஆட்சேபணை இல்லை. ஆனால் உங்கள் சொத்து உங்களுடையது அல்ல, மக்களுக்குச் சொந்தமானது என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். உங்களுடைய நியாயமான தேவைகளுக்கு வேண்டிய பணத்தை எடுத்துக் கொள்ளுங்கள்; பாக்கியைச் சமூகத்துக்குப் பயன்படுத்துங்கள்."—இந்த உண்மை இதுவரை நடைமுறையில் கையாளப்படவில்லை ஆனால் நெருக்கடியான இச்சமயத்தில்கூட பணக்கார வர்க்கத்தினர் இதை அனுஷ்டிக்கவில்லை என்றால், அவர்கள் தங்கள் பணத்துக்கும், புலன் வெறிகளுக்கும், இறுதியில் அவர்களை முறியடிப்போருக்கும் அடிமைகளாக இருக்கவேண்டியிருக்கும்.

விடுமுதலும் உழைப்பும் ஒன்றுக்கு ஒன்று உதவியாக, அனுசரணையாக இருக்க வேண்டும் என்பதே என்

இலட்சியம் என்று எப்போதுமே சொல்லிவந்திருக்
கிறேன். முதலாளிகளும் தொழிலாளர்களும் ஒற்றுமை
யுடனும் இணக்கமாகவும் ஒரு பெரிய குடும்பமாக
வாழவேண்டும்; தொழிலாளர்களின் லோகாயத நலனை
மாத்திரமன்றி ஆன்மிக நலனையும் முதலாளிகள்
கவனித்துக் கொள்ளவேண்டும்; தங்கள் கீழுள்ள
பாட்டாளி வர்க்கத்தின் நலனைப் பேணவேண்டிய தர்ம
கர்த்தாக்களே முதலாளிகள்.

ஒரு சில கோடீசுவரர்களை வதைப்பதன் மூலம்
ஏழைகள் சுரண்டப்படுவதை ஒழிக்க முடியாது; ஏழை
களின் அறியாமையைப் போக்குவதன் மூலமும்,
சுரண்டல்காரர்களுடன் ஒத்துழையாமல் இருக்கும்படி
அவர்களுக்குப் போதிப்பதன் மூலமுமே அதை ஒழிக்க
முடியும். இதன் வாயிலாகச் சுரண்டல்காரர்களின்
மனத்தையும் மாற்ற முடியும். இரு சாராரும் சம
பங்காளிகளாக இருப்பதற்கு அது இறுதியில் வழி
செய்யும் என்றுகூட நான் சொல்லியிருக்கிறேன்.
விடுமுதல் என்பது தன்னளவில் தீயது அல்ல; தவறான
முறையில் உபயோகித்தால்தான் அது தீயதாகிறது.
ஏதாவது ஒரு உருவில் எப்போதுமே விடுமுதல்
தேவைப்படும்.

அந்தஸ்தில் சமத்துவம் ஏற்படுத்த வேண்டும்
என்று நான் விரும்புகிறேன். இத்தனை நூற்றாண்டு
களாகப் பாட்டாளி வர்க்கத்தினர் தாழ்வான அந்தஸ்
துடன் ஒதுக்கிவைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் 'சூத்தி
ரர்களாக'க் கருதப்படுகின்றனர்; கீழான அந்தஸ்து
உள்ளவர்கள் என்று இந்த வார்த்தைக்கு விளக்கம்

கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒரு நெசவாளி, ஒரு விவசாயி, ஒரு உபாத்தியாயர் ஆகியோரின் பிள்ளைகள் இடையே எவ்விதமான வேற்றுமை பாராட்டுவதையும் நான் அனுமதிக்கமாட்டேன்.

உழைப்பும் விடுமுதல்தான் என்பதைத் தொழிலாளி உணரவேண்டும். தொழிலாளர்கள் நன்ருகப் படித்து, சரியான ஸ்தாபனம் அமைத்துக் கொண்டு, தங்கள் வலிமையையும் உணர்ந்து கொண்டால் எவ்வளவு மிகுதியான விடுமுதலும் அவர்களை ஒடுக்க முடியாது. விழிப்புப் பெற்ற, ஸ்தாபன ரீதியாக அமைந்த தொழிலாளர்கள் தாங்கள் கோரியதைப் பெறமுடியும். நாம் பலவீனமாக இருக்கும்போது எதிர்த்தரப்பாருக்கு எதிராகச் சூளுரைப்பதில் பலன் இல்லை. நாம் வலிமை பெறவேண்டும். வலிமை வாய்ந்த இதயங்களும், அறிவுபெற்ற மனங்களும், உறுதிவாய்ந்த கரங்களும் எத்தகைய எதிர்ப்புகளையும் சமாளித்து எல்லாத் தடைகளையும் ஒதுக்கித்தள்ள முடியும்.

விடுமுதலுக்கும் உழைப்புக்கும் இடையே போராட்டம் எதுவும் அவசியம் என்று நான் நினைக்கவில்லை. அவை ஒன்றையொன்று சார்ந்து இருப்பவையே. தொழிலாளியை முதலாளி அடக்கி ஆளக்கூடாது என்பதுதான் இப்போது முக்கியமானது. பங்குதாரர்களைப் போலவே ஆலைத் தொழிலாளர்களும் தங்கள் ஆலைகளின் அதிபர்கள்தாம் என்பது என் அபிப்பிராயம்; தங்களைப் போலவே தொழிலாளர்களும் ஆலைகளின் உடமஸ்தர்கள் என்பதை ஆலையதிபர்கள் உணர்ந்தால் பின்னர் அவர்களுக்கிடையே சண்டை எதுவும் இருக்காது.

அஹிம்ஸை முறையில் முதலாளியை ஒழிக்க நாம் முயலவில்லை, முதலாளித்துவத்தை ஒழிக்கவே முயல்கிறோம். எவர்களுடைய உழைப்பினால் தம்முடைய விடுமுதலை உருவாக்கி, வசப்படுத்தி, பெருக்குகிறாரோ அவர்களுடைய தர்மகர்த்தாவாக முதலாளி தம்மைக் கருதவேண்டும் என்று நாம் கூறுகிறோம். அவருடைய மனம் மாறும்வரை தொழிலாளி காத்திருக்க வேண்டியதில்லை. விடுமுதலுக்குச் சக்தி உண்டு என்றால் உழைப்புக்கும் சக்தி இருக்கிறது. இந்த இரண்டு சக்திகளையும் ஆக்கத்துக்கோ அழிவுக்கோ பயன்படுத்த முடியும். இரண்டும் ஒன்றையொன்று சார்ந்து இருப்பவை. தொழிலாளி தம்முடைய வலிமையை உணர்ந்து கொண்டால், அந்த வினாடி முதல் அவர் முதலாளியின் அடிமையாக இருப்பதற்குப் பதில் பங்காளியாகி விடலாம். தாம் மாத்திரமே உடமஸ்தராக வேண்டும் என்று தொழிலாளி நினைத்தால் பொன் முட்டையிடும் கோழியைக் கொன்ற நிலைமைதான் ஏற்படக்கூடும்.

இயந்திரத்துக்கு உரிய முக்கியத்துவம் உண்டு, அது நிலைபெற்றுவிட்டது. ஆனால் அவசியமான மனித உழைப்பை அது விரட்டுவதை அனுமதிக்கக்கூடாது.

தொழில்கள் இல்லாமல் மனிதன் வாழ முடியாது. மிதமான அறிவு உள்ளவன் என்ற முறையில் நான் இதை அறிவேன். ஆகவே தொழில்களை வளர்ப்பதை நான் ஆட்சேபிக்க முடியாது. ஆனால் இயந்திரத் தொழில்களைப் புகுத்துவது சம்பந்தமாக எனக்கு மிகுந்த கவலை இருக்கிறது. இயந்திரம் அதிவேகத்தில் உற்பத்தி செய்கிறது; என்னால் புரிந்துகொள்ள முடியாத ஒரு

பொருளாதார முறையை அது உருவாக்குகிறது. நன்மைகளை விடத் தீமைகளை அதிகமாக விளைவிக்கின்ற ஒரு சாதனத்தை ஏற்றுக்கொள்ள நான் விரும்பவில்லை, வாயில்லா ஜீவன்களாக இருக்கும் கோடிக்கணக்கான நம் நாட்டு மக்கள் ஆரோக்கியமாகவும் மகிழ்ச்சியுடன் வாழவேண்டும் என்று, ஆன்மிக ரீதியில் வளர வேண்டும் என்று விரும்புகிறேன். இதற்காக இயந்திரம் இன்னமும் நமக்குத் தேவையில்லை. மிகப் பெரு வாரியான மக்கள் வேலையின்றி இருக்கின்றனர். ஆனால் நம்முடைய அறிவு விருத்தியாகி, தேவையும் ஏற்படும் போது, நிச்சயமாக இயந்திரங்களை ஏற்றுக்கொள் வோம். நமக்குத் தொழில்கள் தேவை ; ஆனால் வேலை செய்யும் சுறுசுறுப்பு முதலில் ஏற்படவேண்டும். நாம் தற்சார்புள்ளவர்களாக வேண்டும் ; பின்னர் மற்றவர் களை அதிகமாகப் பின்பற்ற மாட்டோம். இயந்திரங்கள் தேவைப்படும்போது அவைகளை நாம் கையாளலாம். அஹிம்சை முறையில் நம் வாழ்வை உருவாக்கிக் கொண்டால், இயந்திரங்களை எவ்வாறு கட்டுப் படுத்துவது என்பதைத் தெரிந்துகொள்ளலாம்.

மனிதவர்க்கத்தின் தேவைகள் அனைத்தையும் இயந்திரங்கள் தரமுடியும் என்று, ஒரு பேச்சுக்கு ஒப்புக்கொள்வோம். அப்படியானாலும் குறிப்பிட்ட சில பகுதிகளில்தான் அவை பொருளுற்பத்தியைக் குவியச் செய்யும். சுற்றிவளைத்து அப்பண்டங்களை வினியோகிக்க வேண்டியிருக்கும். ஆனால் அந்தப் பிரதேசங்களிலேயே தேவையான பண்டங்களை உற்பத்தி செய்து வினியோ கித்தால், தானாகவே ஒரு ஒழுங்குமுறை ஏற்பட்டு விடுகிறது. பின்னர் மோசடிகளுக்கு வாய்ப்புக் குறையும்; சூதாட்டபேரத்துக்கு இடமே இருக்காது.........உற் பத்தியும் உபயோகமும் உள்ளூரிலேயே நடந்தால், எத்தகைய விளைவையும் பொருட்படுத்தாமல் உற் பத்தியை விரைவாகவும் நிரந்தரமாகவும் அதிகரிக்கும் ஆசை மறைந்துவிடும். நம்முடைய இன்றையப் பொரு ளாதார முறை ஏற்படுத்தியுள்ள முடிவற்ற கஷ்டங்

களும் பிரச்சினைகளும்கூடச் சீக்கிரம் மறைந்துவிடும்... பெருவாரியாக உற்பத்தி செய்வதுபற்றி ஆட்சேபணை இல்லை; ஆனால் தனியாட்களை ஆதாரமாகக்கொண்டு, மக்களின் வீடுகளில் பெருவாரி உற்பத்தி நடக்கட்டும். தனியாட்களின் உற்பத்தியை இலட்சக்கணக்கான மடங்கு பெருக்கும்போது பிரம்மாண்டமான அளவில் உற்பத்தி பெருகாதா? பெருவாரி உற்பத்தி என்று நீங்கள் குறிப்பிடுவது, மிகச் சிக்கலான இயந்திரங் களின் உதவியால் மிகமிகச் சொற்பமான ஆட்கள் செய்யும் உற்பத்தியாகும்...இலட்சக்கணக்கான வீடு களில் நான் புகுத்தக் கூடியதாக, மிக எளிமையான தாக என்னுடைய இயந்திரம் இருக்கவேண்டும்.

"ஆகவே உற்பத்தியையும் வினியோகத்தையும் ஒருசிலர் கையில் குவிக்கும்போது, அவ்வாறு குவிப்பது காரணமாகவே, இயந்திரங்களை நீங்கள் எதிர்க் கிறீர்களா ?"

நீங்கள் சொல்வது சரியே. விசேஷ உரிமையையும் ஏகபோக்கியத்தையும் நான் வெறுக்கிறேன். வெகு ஜனங்களுடன் பகிர்ந்துகொள்ள முடியாத பொருள் எதுவும் எனக்கு விலக்கு ஆகும். அவ்வளவுதான்.

இந்தியாவைத் தொழில்மயமாக்குவதை நீங்கள் விரும்பவில்லையா?

அந்தப் பதத்துக்கு நான் கூறும் விளக்கப்படி அதை (தொழில்மயமாக்குவதை) ஆதரிப்பேன். ஆனால் கிராமங் களை வேறு வழியில் நான் தொழில்மயமாக்கிக் கொண் டிருக்கிறேன்.

எல்லோருக்கும் நன்மையளிக்கக்கூடிய ஒவ்வொரு விஞ்ஞானக் கண்டுபிடிப்பையும் நான் போற்றிக் கொண்டாடுவேன்.

தனி ஒவ்வொருவருக்கும் உதவி செய்யக்கூடிய ஒவ்வொரு இயந்திரத்துக்கும் இடம் கொடுக்கலாம்... பண்பாடு உள்ள மனிதக் குடும்பத்திலே உழைப்புக்கு ஒப்பற்ற ஸ்தானம் உண்டு.

எளிமையான கருவிகள், சாதனங்கள், மற்றும் கோடிக்கணக்கான குடிசைத் தொழிலாளர்களின் உழைப்பையும், வேலைப்பளுவையும் குறைக்கக்கூடிய இயந்திரங்கள் ஆகியவற்றை நான் வரவேற்கிறேன்.

இயந்திரங்களை நான் எதிர்க்கவில்லை, இயந்திர மோகத்தைத்தான் ஆட்சேபிக்கிறேன். 'உழைப்பை மிச்சப்படுத்த இயந்திரங்கள்' என்று சொல்லிக் கொண்டு அவைமீது மோகம் கொள்கிறார்கள். ஆயிரக் கணக்கான ஜனங்கள் வேலையை இழந்து, நடுத்தெருவில் பட்டினி கிடந்து சாகும் அளவுக்கு அவர்கள் உழைப்பை மிச்சப்படுத்திக்கொண்டேயிருக்கிறார்கள். மனித வர்க் கத்தின் ஒரு சொற்பப் பகுதிக்கு மாத்திரமன்றி எல் லோருக்கும் காலத்தையும் உழைப்பையும் மிச்சப்படுத்த நான் விரும்புகிறேன்; ஒரு சிலரிடம் மாத்திரமன்றி எல்லோரிடமும் செல்வம் குவியவேண்டும் என்று விரும்புகிறேன். கோடிக்கணக்கானவர்கள்மீது ஒருசிலர் குதிரை ஏறுவதற்கே இன்று இயந்திரங்கள் பயன் படுகின்றன. உழைப்பை மிச்சப்படுத்த வேண்டும் என்ற பரோபகார புத்தி இதையெல்லாம் தூண்ட வில்லை. பேராசைதான் தூண்டுகிறது. எத்தகைய அமைப்புக்காக நான் முழு வலுவுடன் போராடிக் கொண்டிருக்கிறேனோ அதற்கு முரணானது இது.

மனிதனுக்குத்தான் முதன்மை அளிக்க வேண்டும். இயந்திரங்கள் மனிதனின் அவயவங்களை உபயோக

மின்றிச் சூம்பவைக்கக்கூடாது. மற்றப்படி புத்திசாலித் தனமான விதிவிலக்குகளை நான் அனுமதிப்பேன். உதாரணமாக ஸிங்கர் தையல் இயந்திரத்தைச் சொல்லலாம்.

''அப்படியானால் நீங்கள் இயந்திரத்தை அடியோடு எதிர்க்கவில்லை; இன்று பெரிதும் காணப்படும் அதன் தீய உபயோகங்களைத்தான் எதிர்க்கிறீர்கள்; அல்லவா ?''

இதற்கு ''ஆம்'' என்று நான் பதில் சொல்வேன். அதோடு, விஞ்ஞான உண்மைகளும் கண்டுபிடிப்புகளும் பேராசையின் கருவிகளாக இருக்கும் நிலை முதலில் மாற வேண்டும். பின்னர், தொழிலாளர்கள் சக்திக்கு மீறி உழைக்க வேண்டியிருக்காது; இயந்திரங்கள் இடையூறாக இல்லாமல் உதவிகரமாக இருக்கும். இயந்திரங்களை ஒழிப்பது என் நோக்கமல்ல, அவற்றை ஒரு வரம்புக்குள் கட்டுப்படுத்துவதுதான் நோக்கம்.

தர்க்க ரீதியாக விவாதித்தால், சிக்கலான, விசை யால் இயக்கப்படும் இயந்திரங்கள் எல்லாம் ஒழிய வேண்டும் என்பது இக்கருத்தில் அடங்கியிருப்பதாகத் தோன்றலாம்.

அவை ஒழியவேண்டியிருக்கலாம்; ஆனால் ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். பயனுள்ள ஒருசில கண்டுபிடிப்புகளுள் ஒன்று தையல் இயந்திரம். அந்தச் சாதனத்தில் ஒரு இனிய அனுபவமும் அடங்கி யிருக்கிறது. தம்முடைய மனைவி தன் கைகளினால் நீண்ட நேரம் துணிகளைத் தைத்துக் கஷ்டப்படுவதை ஸிங்கர் பார்த்தார். அவள் மீதுள்ள அன்பு காரணமாக அனாவசியமான அவளுடைய உழைப்பைக் குறைப்பதற் காக, தையல் இயந்திரத்தை அவர் உருவாக்கினார். ஆயினும் இதன் வாயிலாக, அவளுடைய உழைப்பை மாத்திரமன்றி, அந்தத் தையல் இயந்திரத்தை வாங்கக் கூடிய எல்லோருடைய உழைப்பையும் அவர் மிச்சப் படுத்தினார்.

"அப்படியானால், இந்த ஸிங்கர் இயந்திரங்களைத் தயாரிக்கத் தொழிற்சாலை வேண்டியிருக்கும்; விசையால் இயங்கும் சாதாரண இயந்திரங்களை அங்கு நிறுவ வேண்டியிருக்கும்."

ஆம், ஆனால், இத்தகைய தொழிற்சாலைகள் தேசியமயமாக்கப்படவேண்டும், அரசாங்க உடைமையில் இருக்கவேண்டும் என்று கூறும் அளவுக்கு நான் ஒரு சோஷலிஸ்டுத்தான். மிகக் கவர்ச்சிகரமான, இலட்சிய ரீதியான சூழ்நிலையுடன் அவை இருக்க வேண்டும், இலாபத்துக்காக அன்றி மனித குலத்தின் நலனுக்காக, பேராசைக்குப் பதில் அன்பை ஆதாரமாகக் கொண்டு, அவை வேலை செய்ய வேண்டும்.

தொழிலாளர்களின் நிலை மாறவேண்டும் என்று விரும்புகிறேன். பணம் தேடும் வெறி மறையவேண்டும். தொழிலாளர்களுக்கு வாழ்க்கைக்குப் போதுமான ஊதியம் கிடைப்பதுடன், அன்றாட வேலை அட்டுப் பிடித்தாற்போல் இருக்கக்கூடாது; அரசாங்கத்துக்கோ தன்னுடைய உடமஸ்தருக்கோ உதவியாக இருப்பது போலவே, தன்னைக் கொண்டு வேலை செய்பவருக்கும் இயந்திரம் உபயோககரமாக இருக்கவேண்டும். பணம் தேடுகின்ற இப்போதைய வெறி அப்போது இருக்காது; மேலே சொன்னதுபோல் கவர்ச்சிகரமான, இலட்சிய ரீதியான சூழ்நிலையில் தொழிலாளி வேலை செய்வார். நான் மனத்தில் கொண்டுள்ள விதிவிலக்குகளுள் ஒன்று தான் இது (தையல் இயந்திரம்). தையல் இயந்திரத்தின் பின்னணியில் அன்பு இருக்கிறது. தனி நபருக்குத் தான் முதல் முக்கியத்துவம் அளிக்கவேண்டும். தனி நபரின் வேலைப் பளுவைக் குறைப்பதுதான் குறிக்கோளாக இருக்கவேண்டும்; பேராசைக்குப் பதில் நேர்மையான மனிதாபிமானமே ஆதாரமாக இருக்க வேண்டும். பேராசையின் இடத்தில் அன்பை நிலை நிறுத்துங்கள், பிறகு எல்லாம் சரியாகிவிடும்.

ஒரு சிலருடைய உழைப்பைச் சுரண்டி விடுமுதல் தன்னைத்தானே பெருக்கிக் கொள்கிறது. ஆனால் கோடிக்கணக்கான மனிதர்களின் உழைப்பை விவேகத்துடன் பயன்படுத்தினால் அந்தக் கோடிக்கணக்கானவர்களின் செல்வமும் தானாகவே பெருகும்.

தேவையான வேலையைப் பூர்த்தி செய்வதற்குப் போதுமான ஆட்கள் இல்லாதபோது இயந்திரங்களை உபயோகிப்பது நல்லது. இந்தியாவில் உள்ளதுபோல, வேலையை நிறைவேற்றத் தேவைக்கு அதிகமான ஆட்கள் இருக்கும்போது, அவற்றை உபயோகிப்பது தீயது.........நம்முடைய கிராமங்களில் செறிந்து கிடக்கும் கோடிக்கணக்கான மக்களுக்கு எவ்வாறு ஓய்வு கிடைக்கச் செய்வது என்பதல்ல நம்முடைய பிரச்சினை. வருஷத்தில் சுமார் ஆறுமாத காலம் சோம்பிக் கிடக்கும் அவர்களுடைய நேரத்தை எவ்வாறு பயன்படுத்துவது என்பதுதான் பிரச்சினை.

நல்லதாயினும்சரி, கெட்டதாயினும்சரி, மேற்கத்திப் பாணியில் இந்தியா எதற்காகத் தொழில்மயமாக வேண்டும்? மேற்கத்தி நாகரிகம் நகரத்தை ஆதாரமாகக் கொண்டது. இங்கிலாந்து அல்லது இத்தாலியைப் போன்ற சிறிய நாடுகள் நகர வாழ்க்கை முறையை மேற்கொள்வது சாத்தியமாக இருக்கலாம். மிகக் குறைவான மக்கட்தொகையைக் கொண்ட அமெரிக்கா போன்ற ஒரு பெரிய நாடு நகரவாழ்வைத் தவிர்க்க முடியாமல் இருக்கலாம். ஆனால் ஜனத்தொகை மிகுந்ததும், உருவில் பெரியதும், இதுவரை பயனுள்ளதாக இருந்து வந்திருக்கும் புராதனக் கிராமாந்தர முறையை

கொண்டதுமான ஒரு நாடு மேற்கத்தி உதாரணத்தைக் காப்பியடிப்பது அவசியமும் அல்ல, காப்பியடிக்கவும் கூடாது. ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் உள்ள நாட்டுக்கு நல்லதாக இருப்பது, வேறு சூழ்நிலையில் உள்ள நாட்டுக்கும் நல்லதுதான் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஒருவருக்கு உணவாக இருப்பது இன்னொருவருக்கு நஞ்சாக இருக்கலாம். ஒரு நாட்டின் கலாசாரத்தை நிர்ணயிப்பதில் அதன் இயற்கை அமைப்புக்குத் தலையாய பங்கு உண்டு. துருவப் பிரதேசத்தில் வசிப்பவருக்கு ஃபர் உரோம மேலங்கி அவசியமாக இருக்கலாம்; ஆனால் பூமத்திய ரேகையை ஒட்டிய பிரதேசங்களில் வசிப்பவர்கள் அதை அணிந்து கொண்டால் மூச்சுத் திணற வேண்டியிருக்கும்.

மேற்கத்திப் பாணியில் இந்தியா தொழில் மயமாகாதபடி ஆண்டவன் காப்பாற்றுவாராக. ஒரு சின்னஞ்சிறு தீவின் (இங்கிலாந்தின்) பொருளாதார ஏகாதிபத்தியம் இன்று உலகையே அடிமைப்படுத்தியிருக்கிறது. முப்பது கோடி மக்களைக் கொண்ட ஒரு நாடு முழுவதும் இத்தகைய சுரண்டலில் இறங்கினால் வெட்டுக் கிளிகள் விழுந்த நிலத்தைப் போல உலகம் பாழ்வெளியாகிவிடும்.

இந்தியாவில் ஏழு லட்சம் கிராமங்கள் உள்ளன; மொத்த ஜனத்தொகையில் 90 சதவிகிதத்தினர் அவற்றில் வசிக்கின்றனர்...தேசத்துக்குத் திட்டமிடுவது சம்பந்தமாக இப்போது நிலவும் கருத்துக்களுக்கு மாறுபட்டது என்னுடைய கருத்து. தொழில் மயமாக்கும் விதத்தில் திட்டமிடுவதை நான் விரும்பவில்லை.

தொழில்மயமாதல் என்ற தொற்றுநோய் நம்முடைய கிராமங்களைப் பீடிக்காதபடி தடுக்க வேண்டும்.

நாட்டைத் தொழில்மயமாக்கவேண்டும் என்று பண்டித நேரு விரும்புகிறார். தொழில்களைச் சமூக உடைமையாக்கிவிட்டால் முதலாளித்துவத்தின் தீமைகள் வரமாட்டா என்று அவர் கருதுகிறார். ஆனால், தொழில்மயமாவதில் இயற்கையாகவே இத்தீமைகள் உள்ளன என்றும், எவ்வளவுதான் சமூக உடைமையாக்கினாலும் அவற்றை ஒழிக்க முடியாது என்றும் நான் கருதுகிறேன்.

எந்த நாட்டையுமே தொழில் மயமாக்குவது அவசியம் என்று நான் நினைக்கவில்லை. அதிலும் இந்தியாவுக்கு அது அவசியமேயில்லை. எளிமையும் மேன்மையும் வாய்ந்த வாழ்க்கைமுறையைச் சுதந்திர இந்தியா மேற்கொண்டு, தன்னுடைய ஆயிரக்கணக்கான குடிசைகளை அபிவிருத்தி செய்து, உலகத்துடன் சமாதான உறவு கொண்டு வாழ்வதன் மூலமே, துயருறும் உலகத்துக்குத் தன் கடமையை ஆற்ற முடியும் என்று நம்புகிறேன். குபேர வழிபாடு, வேகமான வாழ்க்கையை நம் மீது சுமத்தியிருக்கிறது. சிக்கல் நிறைந்த லோகாயத வாழ்க்கைக்கு இந்த வேகமே ஆதாரமாக இருக்கிறது; இந்த வாழ்க்கைக்கும் உயரிய சிந்தனைக்கும் ஒத்துவராது. உன்னதமான முறையில் வாழ்கின்ற கலையை நாம் கற்றுக் கொண்டால்தான் வாழ்வின் சிறப்புகளையெல்லாம் பெறமுடியும்.

அதே சமயத்தில், சில ஆதாரத் தொழில்கள் அவசியமானவை என்றும் நம்புகிறேன். திண்ணை வேதாந்த சோஷலிஸத்திலோ ஆயுதபாணிச் சோஷலிஸத்திலோ எனக்கு நம்பிக்கை இல்லை. என்னுடைய நம்பிக்கையின் பிரகாரம் செயல்புரிவதில்தான் எனக்கு

நம்பிக்கையுண்டு; எல்லோரும் மாறும் வரை நான் காத்திருக்க முடியாது. அந்த ஆதாரத் தொழில்கள் எவை என்று நான் இங்கு விவரிக்கவில்லை; ஆனால் ஏராளமான மனிதர்கள் சேர்ந்து வேலை செய்யும் தொழில் எதுவும் அரசாங்க உடைமையில் இருக்க வேண்டும் என்று கருதுகிறேன். தேர்ச்சிபெற்ற தொழிலாளர்களாயினும் சரி, தேர்ச்சி பெறாதவர்களாயினும் சரி, அவர்களுடைய உழைப்பினால் உற்பத்தியாகும் பண்டங்களின் உடைமையானது அவர்களின் வாயிலாக அரசாங்கத்தினிடம் இருக்கவேண்டும். ஆனால், அஹிம்சையே இத்தகைய அமைப்புக்கு ஆதாரமாக இருக்க வேண்டும் என்று நான் நம்புவதால், பணக்காரர்களின் உடைமைகளைப் பலாத்காரமாக நான் பறிக்க மாட்டேன். அரசாங்க உடைமைக்கு மாற்றுவதற்கு அவர்களுடைய ஒத்துழைப்பையே நாடுவேன். கோடீசுவரர்களாயினும் சரி, பரம ஏழைகளாயினும் சரி, சமூகத்தில் யாரையும் பறையர்களாகக் கருதக்கூடாது. இந்த இரு சாரார்களும் ஒரே நோயினால் ஏற்பட்ட இரு புண்களே, எல்லாரும் மனிதர்களே.

சோஷலிஸம் என்பது அழகான ஒரு சொல்; சோஷலிஸத்தில் சமூகத்தின் எல்லா உறுப்பினர்களும் சமமானவர்கள்; உயர்ந்தவர் அல்லது தாழ்ந்தவர் என்று எவரும் இல்லை. நம்முடைய உடம்பின் உச்சியில் இருப்பதால் தலை உயர்ந்ததாகிவிடாது; உள்ளங்கால்கள் தரையைத் தொடுவதால் அவை தாழ்ந்தவையாகி விடமாட்டா. உடம்பின் எல்லா உறுப்புகளும் சமமாக இருப்பது போலவே, சமூகத்தின் எல்லா உறுப்பினர்களும் சமமானவர்கள். இதுதான் சோஷலிஸம்.

அரசனும் குடியானவனும், பணக்காரனும் ஏழையும், முதலாளியும் தொழிலாளியும், எல்லோரும் அதில் (சோஷலிஸத்தில்) சம அந்தஸ்துடன் இருப்பர். மத

ரீதியாகப் பார்த்தால் சோஷலிஸத்தில் இருமைப்பாடு இல்லை, ஒருமைப்பாடே காணப்படும். உலகெங்கிலும் இப்போது உள்ள சமூகத்தைப் பார்க்கும்போது இருமை நிலையோ பன்மை நிலையோ காணப்படு கின்றன: ஒற்றுமையே புலப்படுவதில்லை......ஒருமைப் பாடு பற்றிய என்னுடைய கருத்தின்படி, பன்மைத் தோற்றங்களின் உள்ளே பரிபூரண ஒருமைப்பாட்டைக் காண்கிறேன்.

இந்த நிலையை அடைவதற்காக எல்லோரும் சோஷலிஸத்துக்கு மாறும்வரை நாம் எதுவும் செய்ய வேண்டியதில்லை என்று தத்துவ நோக்குடன் நாம் நினைக்கக் கூடாது. நம்முடைய வாழ்க்கையை மாற்றிக் கொள்ளாமல், நாம் சொற்பொழிவுகள் ஆற்றலாம், கட்சிகளை அமைக்கலாம்; வல்லூறு சிறு பறவையைப் பிடிப்பது போல எதிர்ப்பட்டதைச் சுருட்டலாம். ஆனால், இது சோஷலிஸம் அல்ல. பிடிக்கத்தக்க வேட்டைப் பொருள் அது என்று நாம் நினைக்க நினைக்க அது மேலும் மேலும் நம்மிடமிருந்து விலகிப் போய் விடுகிறது.

முதலில் யார் சோஷலிஸத்துக்கு மாறுகிறாரோ அவரிடமிருந்தே சோஷலிஸம் ஆரம்பமாகிறது. இத் தகையவர் ஒருவர் இருந்தால், அந்த ஒன்றுக்குப் பின் பூஜ்யங்களைச் சேர்த்துக் கொண்டே போகலாம்; முதல் பூஜ்யத்துடன் பத்து என்ற எண் கிடைக்கும்; அதற்கு மேல் உள்ள ஒவ்வொரு பூஜ்யத்துக்கும் முந்திய எண்ணைப்போல் பத்து மடங்கு மதிப்பு உண்டு. ஆனால் முதல் ஆளே பூஜ்யமாக இருந்தால், அதாவது யாருமே ஆரம்ப முயற்சி செய்யவில்லை என்றால், எத்தனை பூஜ்யங் களை மேற்கொண்டு சேர்த்தாலும் பூஜ்ய மதிப்புத்தான் கிடைக்கும். வெறும் பூஜ்யங்களை எழுதுவதில் செல விடும் நேரமும் காகிதமும் விரயம்தான்.

ஸ்படிகம் போல் தூய்மையானது இந்தச் சோஷ லிஸம். ஆகவே அதை அடைவதற்கான வழிமுறையும் ஸ்படிகம் போல் இருக்க வேண்டும். தூய்மையற்ற

மார்க்கம் தூய்மையற்ற பலனைத்தான் கொடுக்கும். ஆகவே அரசனின் தலையைச் சீவுவதன் மூலம் அவனையும் குடியானவனையும் சமப்படுத்த முடியாது ; அதேபோல், முதலாளியையும் தொழிலாளியையும் சமத்துவமாக்குவதற்கும் தலையைச் சீவும் முறை பயன்படாது. சத்தியத்தை அசத்தியத்தின் மூலம் அடைய முடியாது. சத்திய நெறியின் மூலமே சத்தியத்தை அடைய முடியும். அஹிம்ஸையும் சத்தியமும் இரட்டைப் பிறவிகள் அல்லவா? இல்லவே இல்லை. சத்தியத்தில் அஹிம்ஸை பொதிந்திருக்கிறது ; அஹிம்ஸையில் சத்தியம் பொதிந்திருக்கிறது. அதனால்தான், அவற்றை ஒரே நாணயத்தின் இருபுறங்கள் என்று கூறுகிறோம். அவற்றுள் ஒன்றை இன்னொன்றிலிருந்து பிரிக்க முடியாது. நாணயத்தில் உள்ள வாசகத்தை நேராகவோ எதிராகவோ படியுங்கள், எழுத்து வரிசை மாறுமே தவிர நாணயத்தின் மதிப்பு மாறாது. முழுத் தூய்மை இல்லாமல் இந்தப் புனித நிலையை எட்டிப் பிடிக்க முடியாது. உங்கள் உடம்பிலோ உள்ளத்திலோ களங்கம் இருந்தால் உங்களிடம் அசத்தியமும் வன்முறையும் இருப்பதாகத்தான் அர்த்தம்.

ஆகவே, சத்தியமும், அஹிம்ஸையும், தூய உள்ளமும் கொண்ட சோஷலிஸ்டுகள்தாம் இந்தியாவிலோ உலகத்திலோ சோஷலிஸ சமுதாயத்தை ஏற்படுத்த முடியும்.

ஒவ்வொரு மனிதனுக்கும் அவனுடைய இயற்கைத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு வேண்டிய பொருட்கள் கிடைக்கவேண்டும் ; அதற்கு அதிகமாகக் கிடைக்கக் கூடாது. சம வினியோகம் என்பதன் உண்மையான உட்பொருள் இதுதான். உதாரணமாக, ஜீரணக் குறைவு உள்ள ஒருவருக்குச் சப்பாத்தி தயாரித்துக் கொள்ளக் கால் ராத்தல் மாவுதான் தேவை என்றும், இன்னொருவருக்கு ஒரு ராத்தல் மாவு தேவை

என்றும் வைத்துக் கொள்வோம்; அவர்கள் இருவரும் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும் வசதியைப் பெற்றிருக்க வேண்டும். இந்த இலட்சியத்தை நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும் என்றால் சமூகம் முழுமையும் மாற்றி அமைத்தாக வேண்டும். அஹிம்ஸையை ஆதாரமாகக் கொண்ட சமூகம் இந்த இலட்சியத்தைத் தவிர வேறு எதையும் கைக்கொள்ள முடியாது. இந்தக் குறிக்கோளை நாம் அடைவது அசாத்தியமாக இருக்கலாம்; ஆனால் அதை நினைவில் இருத்திக் கொண்டு, அதை அணுகுவதற்காக இடையறாமல் பாடுபடவேண்டும். நம்முடைய குறிக் கோளை நோக்கி நாம் எவ்வளவு முன்னேறுகிறோமோ அந்த அளவுக்கு நமக்கு திருப்தியும் மகிழ்ச்சியும் ஏற்படும்; அஹிம்ஸைச் சமுதாயத்தை உருவாக்க அந்த அளவுக்கு நாம் உதவி செய்ததாகவும் ஆகும்.

அஹிம்ஸை முறையில் சமத்துவ வினியோகத்துக்கு எவ்வாறு வழி செய்யலாம் என்பதை இப்போது பார்ப்போம். இந்த இலட்சியத்தைத் தன் வாழ்க்கையின் ஒரு அம்சமாக ஏற்றுக் கொண்டவர், அதற்கேற்பத் தம்முடைய வாழ்க்கையை மாற்றி அமைத்துக் கொள்ளவேண்டும்; இதுதான் முதல் நடவடிக்கை. இந்தியாவில் நிலவும் ஏழ்மையை நினைவில் கொண்டு அவர் தம்முடைய தேவைகளைப் பெரிதும் குறைத்துக் கொள்ள வேண்டும். நேர்மையான முறையில்தான் அவர் வருமானம் தேடவேண்டும். சூதாட்ட பேரத்தில் உள்ள ஆசையை அவர் துறக்க வேண்டும். புதிய வாழ்க்கை முறைக்கு ஏற்ப அவருடைய ஜாகை அமைந் திருக்க வேண்டும். வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் அவர் சுயமான கட்டுப்பாட்டை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். சொந்த வாழ்க்கையில் சாத்தியமான மாறுதல்களை யெல்லாம் செய்துகொண்ட பின்னரே தமது இலட்சியத்தைத் தம்முடைய சகாக்களுக்கும் அண்டை அயலாருக்கும் போதிக்கக் கூடிய தகுதியை அவர் பெறுவார்.

பணக்காரர்கள் தங்களிடம் உள்ள அதிகப்படியான செல்வத்துக்குத் தர்மகர்த்தாக்கள்தாம் என்பது சமத்துவ வினியோகம் என்ற இந்தச் சித்தாந்தத்தின் ஆணிவேராகும். ஏனெனில், இந்தச் சித்தாந்தத்தின் படி, அவர் தங்களுடைய அண்டை வீட்டுக்காரரை விட அதிகமாக ஒரு ரூபாய் கூட வைத்திருக்கக்கூடாது. இந்த நிலைமையை எவ்வாறு ஏற்படுத்துவது? அஹிம்ஸையின் வாயிலாகவா? அல்லது, பணக்காரர்களின் உடைமைகளைப் பறிமுதல் செய்யவேண்டுமா? இவ்வாறு செய்வதற்கு நாம் பலாத்காரத்தைப் பிரயோகிக்கத் தான் வேண்டியிருக்கும் இந்த பலாத்கார நடவடிக்கையால் சமூகத்துக்கு நன்மை ஏற்படாது அதன் விளைவாகச் சமூகத்துக்கு நஷ்டம்தான் ஏற்படும், ஏனெனில் எவ்வாறு செல்வம் திரட்டுவது என்பதை அறிந்த ஒரு மனிதரின் திறமைகளைச் சமூகம் இழந்துவிடும். ஆகவே, அஹிம்ஸை முறைதான் சிறந்தது என்பது தெளிவு. இதன்படி, பணக்காரரின் செல்வம் அவரிடமே இருக்கும்; தம்முடைய நியாயமான சொந்தத் தேவைகளுக்கு வேண்டிய அளவுக்கு அதிலிருந்து அவர் உபயோகித்துக் கொள்வார்; எஞ்சியதற்கு அவர் தர்மகர்த்தாவாக இருந்து அதைச் சமூகத்துக்குப் பயன்படுத்துவார். தர்மகர்த்தாவிடம் நேர்மை இருக்கும் என்ற ஊகத்துடன் இந்த வாதம் கூறப்படுகிறது.

ஆனால், எவ்வளவோ முயன்றுபார்த்தும், பணக்காரர்கள் உண்மையாகவே ஏழைகளின் கார்டியன்களாக மாறாமல், ஏழைகள் மேலும் மேலும் நசுக்கப்பட்டு பட்டினி கிடந்து சாக நேரிட்டால் என்ன செய்வது? இந்தப் புதிருக்கு விடை தேட முயலும் போது நான் ஒரு மார்க்கத்தை அறிந்துகொள்ள நேர்ந்தது. அஹிம்ஸாபூர்வமான ஒத்துழையாமையும் சட்ட மறுப்பும்தான் சரியான, தோற்க முடியாத அந்த மார்க்கமாகும். சமூகத்தில் உள்ள ஏழைகளின் ஒத்துழைப்பு இல்லாமல் பணக்காரர்களால் செல்வம் திரட்ட முடியாது. இந்த அறிவு ஏழைகளிடையே

புகுந்து பரவினல் அவர்கள் வலிமைபெறுவர்; தங்களைப் பட்டினி நிலைக்கு கொண்டுவந்துள்ள கொடிய ஏற்றத் தாழ்வுகளிலிருந்து அஹிம்ஸை முறையில் எவ்வாறு விடுவித்துக்கொள்ளலாம் என்பதைத் தெரிந்து கொள்வர்.

மேற்கு நாடுகளில் காணப்படும் சோஷலிஸமும் கம்யூனிஸமும் நம்முடைய கருத்துக்களுக்கு முற்றிலும் மாருன சில கருத்துக்களை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. சுயநலம் மனித சுபாவத்தின் அடிப்படை அம்சம் என்ற அவர்களுடைய நம்பிக்கை இந்தக் கருத்துக்களுள் ஒன்று. இந்தக் கருத்தை நான் ஆதரிக்கவில்லை. ஏனெனில், மிருகத்தைப் போலன்றி, மனிதன் தன்னுள் இருக்கும் ஆன்மாவின் குரலுக்குச் செவி சாய்க்க முடியும்; தனக்கும் மிருகத்துக்கும் பொதுவாக இருக்கும் இச்சைகளை அடக்கிக்கொள்ள மனிதனல் முடியும்; ஆகவே, சுயநலத்தையும் பலாத்காரத்தையும் கூட அவனல் அடக்கிக்கொள்ள முடியும்; இவை இரண்டும் மிருக இயல்பைச் சேர்ந்தவையே தவிர மனிதனின் அழியா ஆன்மாவைச் சேர்ந்தவை அல்ல. மனிதனுக்கும் மிருகத்துக்கும் இடையே இந்த அடிப்படை வித்தியாசம் இருப்பதாக நான் அறிவேன். ஹிந்து மதத்தின் ஆதாரக் கருத்து இது; பலப்பல ஆண்டுகள் தவமிருந்து நோன்புகளை அனுஷ்டித்துக் கண்டுபிடிக்கப்பட்ட உண்மை இது. அதனல்தான், ஆன்மாவின் இரகசியங்களைக் கண்டுபிடிப்பதற்காக தங்கள் உடல்களை வருத்தி உயிர்களைப் பலியிட்ட மஹான்கள்தாம் நம் நாட்டில் இருந்திருக்கிருர்கள்; உலகத்தின் துருவப் பிரதேசங்களையும் மிக உயரமான இலக்குகளையும் கண்டுபிடிப்பதற்காகத் தங்கள் உயிர்களைக் கொடுத்தவர்கள் மேற்கு நாடுகளில் இருந்தது போல் நம் நாட்டில் இருக்கவில்லை, ஆகவே, நம்முடைய சோஷலிஸமோ கம்யூனிஸமோ அஹிம்ஸையை ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டும்; தொழிலாளியும் முதலாளியும், நிலச்சுவானும் சாகுபடியாளரும், இணக்

கமாக ஒத்துழைப்பதை ஆதாரமாகக்கொண்டிருக்க வேண்டும்.

ஏழைகளுக்குப் பெரிதும் தேவைப்படும் வேலையைக் கொடுக்காமல், அவர்களுக்குத் தேவையற்ற ஆடைகளைக் கொடுத்து அம்மணமாக நிற்கும் அவர்களை அவமானப்படுத்துவதற்கு நான் இணங்கக்கூடாது. அவர்களுக்குப் போஷகனாக இருக்கும் பாபத்தை நான் செய்யமாட்டேன்; ஆனால், அவர்களை ஏழ்மைப்படுத்தியதில் எனக்கும் பொறுப்பு உண்டு என்பதை உணர்ந்து, மிச்ச உணவையோ பழைய ஆடையையோ அவர்களுக்குக் கொடுக்காமல், என்னிடமுள்ள மிகச் சிறந்த உணவையும் உடைகளையும் அவர்களுக்குக் கொடுத்து, வேலை செய்வதில் அவர்களுடன் நானும் சேர்ந்து கொள்வேன்.

உழைத்து உண்ண வேண்டும் என்பதற்காக மனிதனைக் கடவுள் படைத்தார்; உழைக்காமல் உண்பவர்கள் திருடர்கள் என்று கூறியிருக்கிறார்.

உழைத்து உண்பது சம்பந்தமாக டால்ஸ்டாய் எழுதியதை நான் படித்த பின்னர், மனிதன் உயிர் வாழ்வதற்காக உழைப்பது அவசியம் என்ற நியதியை முதன் முதலாகத் தெரிந்துகொண்டேன். ஆனால், அதற்கு முன்பேயேகூட, ரஸ்கின் எழுதிய 'கடையனுக்கும் கடைத்தேற்றம்' (அண் டு தி லாஸ்ட்) என்ற நூலைப் படித்ததும், அந்த நியதியைப் போற்றத் தொடங்கியிருந்தேன். மனிதன் தன் சொந்தக் கரங்களால் உழைத்துத் தன் உணவைத் தேடிக் கொள்ள வேண்டும் என்ற தெய்வீக நியதியை எம். டி. பாண்டாரெஃப்

என்ற ரஷிய எழுத்தாளர் முதன் முதலாக வலியுறுத்தினுர். டால்ஸ்டாய் அதை விளம்பரப்படுத்தி, விரிவாகப் பரப்பினுர். கீதையின் மூன்ருவது அத்தியாயத்தில் இதே கோட்பாடு காணப்படுவதாக நான் நம்புகிறேன்—யக்ஞம் செய்யாமல் உண்பவன் திருடிய உணவை உண்பவனுவான் என்று அங்கு சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு யக்ஞம் என்பது உணவுக்காக உழைப்பதைத்தான் குறிக்க முடியும்.

பகுத்தறிவின் வாயிலாகவும் நாம் இதே முடிவுக்குத்தான் வருவோம். உடலால் உழைக்காத மனிதன் ஒருவனுக்கு உண்ணும் உரிமை ஏது? ‘நெற்றி வியர்க்க உழைத்து உன் உணவைத் தேடி நீ உண்ண வேண்டும்’ என்று பைபிள் கூறுகிறது. கோடீசுவரர் ஒருவர் நாள் முழுவதும் படுக்கையில் புரண்டுகொண்டிருந்து, சாப்பாட்டைக்கூட பிறர் ஊட்டும்படியாக இருந்தால் அந்நிலைமை அதிக காலம் நீடிக்க முடியாது. அவருக்கே வாழ்க்கை சடுதியில் சலித்துவிடும். ஆகவே, அவர் தேகாப்பியாசம் செய்து பசியைத் தூண்டிவிட்டுக் கொண்டு தம் உணவைத் தாமாகவே சாப்பிட முற்படுகிருர். பணக்காரன், ஏழை என்ற பேதமின்றி, எல்லோரும் ஏதாவது ஒரு உருவில் தேகாப்பியாசம் செய்வது அவசியம் என்ருல், அது ஆக்கமான தேகப் பயிற்சியாக, உணவுக்கான உழைப்பாக, ஏன் இருக்கக் கூடாது?

சுவாசப்பயிற்சியோ தசைப்பயிற்சியோ செய்யுமாறு விவசாயியிடம் எவரும் சொல்வதில்லை. மனிதகுலத்தில் பத்துக்கு ஒன்பதுபேர் உழுதுண்டு வாழ்கிருர்கள். எஞ்சிய பத்தில் ஒரு பங்கினரும் தங்கள் உணவுக்கு வேண்டிய அளவாவது உழைப்பதன் மூலம், மிகப் பெரும்பாலானவர்களைப் பின்பற்றினுல், உலகில் மகிழ்ச்சியும் ஆரோக்கியமும் சாந்தியும் எவ்வளவு பெருகும்! இவர்களும் விவசாயத்தில் கைகொடுத்து உதவினுல் விவசாயத்துடன் சம்பந்தப்பட்ட கஷ்டங்களையெல்லாம் இலகுவாக நீக்க முடியும். மற்றும், உணவுக்காக உழைப்பதை

ஒருவர் பாக்கியில்லாமல் எல்லோரும் ஏற்றுக்கொண்டால், அந்தஸ்து பற்றிய அநியாயமான ஏற்றத் தாழ்வுகளும் ஒழிந்துபோய்விடும் இந்த உழைப்பு எல்லா வருணத்தாருக்கும் பொதுவானது. உலகெங்கிலும் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையே பூசல் காணப்படுகிறது ; பணக்காரர்களைப் பார்த்து ஏழைகள் பொருமைப்படுகின்றனர். எல்லோரும் தங்கள் உணவுக்காக உழைத்தால் அந்தஸ்து பற்றிய ஏற்றத்தாழ்வுகள் நீங்கிவிடும் ; அப்போதும் பணக்காரர்கள் இருக்கத்தான் செய்வார்கள், ஆனுல் அவர்கள் தங்கள் செல்வத்தின் தர்மகர்த்தாக்களே தாங்கள் என்பதை உணர்ந்து, பொது நன்மைக்காகவே அதை முக்கியமாகப் பயன்படுத்துவர்.

அஹிம்ஸையைக் கடைப்பிடிக்கின்ற, சத்தியத்தை வழிபடுகின்ற, இயல்பாகப் பிரம்மச்சாரியத்தை அனுஷ்டிக்கின்ற ஒருவருக்கு 'உணவுக்காக உழைப்பது' என்பது ஒரு பாக்கியமாகும். உண்மையில் விவசாயத்துடன் சம்பந்தப்பட்டதாகவே அந்த உழைப்பு இருக்க முடியும். ஆனுல், தற்போது எல்லோரும் அதில் ஈடுபடும் நிலையில் இல்லை. அதனுல், உழவில் ஈடுபடாவிடினும், விவசாயத்தையே இலட்சியமாகச் சதா நினைவில் கொண்டு, நூற்பதிலோ, நெய்வதிலோ, தச்சுவேலையிலோ, கருமார் வேலையிலோ ஒருவர் ஈடுபடலாம். ஒவ்வொருவரும் தமக்குத்தாமே தோட்டியாக இருக்க வேண்டும். உண்பதைப்போலவே கழிவுப் பொருளை வெளியேற்றுவதும் அவசியமானது ; ஒவ்வொருவரும் தம்முடைய கழிவுப் பொருளைத்தாமே அப்புறப்படுத்துவதுதான் மிகச் சிறந்த ஏற்பாடாகும். இது சாத்தியப்படாவிடில் ஒவ்வொரு குடும்பமுமாவது தன்னுடைய தோட்டி வேலையைத் தானே செய்துகொள்ளவேண்டும். தோட்டி வேலையை ஒரு தனி வகுப்பின் பொறுப்பாக்கியிருக்கின்ற சமூகத்தில் ஏதோ பெரிய கோளாறு இருக்க வேண்டும் என்று பல ஆண்டுகளாக நான் கருதி வந்திருக்கிறேன். அத்தியாவசியமான இந்தத் துப்புரவுத்

தொண்டுக்குக்கடைப்பட்ட அந்தஸ்தை முதன் முதலாகக் கொடுத்த மனிதன் யார் என்பதற்குச் சரித்திர பூர்வமான ஆதாரம் நம்மிடம் இல்லை. யாராயிருந்தாலும் அவன் நமக்கு நன்மை செய்தவன் அல்லன் ; நாம் எல்லோருமே தோட்டிகள் என்பதைக் குழந்தைப் பருவ முதலே நம் மனத்தில் பதித்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொருவரும் தம் உணவைச் சம்பாதிப்பதற்காகத் தோட்டி வேலை செய்யத் தொடங்குவதுதான் இதற்கு மிகச் சுலபமான வழியாகும். இவ்வாறு புத்திபூர்வமாகத் தோட்டி வேலை செய்தால், மனித சமத்துவத்தை உண்மையாக உணர்வதற்கு உதவியாக இருக்கும்.

அஹிம்ஸா பூர்வமான சுதந்திரத்துக்குச் சரியான திறவுகோல் பொருளாதார சமத்துவம்தான். பொருளாதார சமத்துவத்துக்காகப் பாடுபடுவது என்பது, விடுமுதலுக்கும் உழைப்புக்கும் இடையே உள்ள நிரந்தரப் பூசலை ஒழிப்பதாகும். அதாவது, நாட்டின் பெரும் பகுதியைத் தம்வசம் வைத்திருக்கும் ஒருசில பணக்காரர்களின் நிலையைத் தாழ்த்தும் காரியம் ஒருபுறத்திலும், அரைப் பட்டினியுடன் நிர்வாணமாக நிற்கும் கோடிக்கணக்கான மக்களின் நிலையை உயர்த்தும் காரியம் மற்றொரு புறத்திலும் நடக்க வேண்டும். பணக்காரர்களுக்கும் கோடிக்கணக்கான பஞ்சைகளுக்கும் இடையே பெருத்த ஏற்றத்தாழ்வு நீடித்திருக்கும் வரை அஹிம்ஸா பூர்வமான ஆட்சிமுறை ஏற்படுவது சாத்தியமல்ல என்பது தெளிவு. இப்போது புதுடில்லியில் ஒருபுறம் மாடமாளிகைகளும் அவற்றின் அருகாமையில் ஏழைகளின் அத்துவானக் குடிசைகளும் காணப்படுகின்ற நிலைமை சுதந்திர இந்தியாவில் ஒரு நாள்கூட நீடித்திருக்கமுடியாது, ஏனெனில் நாட்டின் பெரும் பணக்காரர்களுக்குச் சமமான அதிகாரத்தை ஏழைகளும் அப்போது வகிப்பர்.

"உங்களுக்கு ஒரு சூத்திரம் தருகிறேன். உங்களுக்குச் சந்தேகம் ஏற்படும் சமயங்களில், அல்லது உங்களைப் பற்றிய நினைவு மேலோங்கி நிற்கும்போது, பின்கண்டவாறு சோதித்துப் பாருங்கள். நீங்கள் பார்த்திருக்கக்கூடிய பரம ஏழையின் அல்லது மிகவும் நலிந்துபோன மனிதனின் முகத்தை நினைவுபடுத்திக் கொண்டு நீங்கள் உத்தேசித்துள்ள நடவடிக்கை அவனுக்கு ஏதாவது பலன் தருமா என்று உங்களையே கேட்டுக் கொள்ளுங்கள். தன்னுடைய வாழ்வையும் கதிமோட்சத்தையும் தானே நிர்ணயித்துக் கொள்ளும் அதிகாரத்தை அது (அந்நடவடிக்கை) அவனுக்கு அளிக்குமா? இதையே வேறு விதமாகச் சொன்னால், உணவுப் பசியாலும் ஆன்மிகப் பசியாலும் வாடும் கோடிக்கணக்கான மக்களுக்கு அது விடுதலை அளிக்குமா? பின்னர் (இவ்வாறு சோதித்த பின்னர்), உங்கள் சந்தேகங்களும், உங்களைப் பற்றிய நினைவும் கரைந்து மறைவதைக் காண்பீர்கள்."

* * * *

# VI. நாடு நலம் பெற

## 1. நமது பாரத புண்ணிய பூமி

உலகிலேயே இந்தியாதான் எனக்கு மிகவும் அருமையான நாடு. அது என்னுடைய நாடு என்பது இதற்குக் காரணம் அல்ல; மகோன்னதமான நற்குணம் அதனிடம் இருப்பதை நான் கண்டுகொண்டதுதான் காரணம்.

இந்தியாவில் உள்ள ஒவ்வொரு விஷயமும் என்னைக் கவர்கிறது மிக உன்னதமான அபிலாஷைகளைக் கொண்ட ஒரு மனிதர் விரும்பக் கூடியவை எல்லாம் அதனிடம் உள்ளன.

இந்தியா பிரதானமாக ஒரு கர்ம பூமி; அதாவது போகபூமிக்கு நேர்மாறானது.

பிறரைக் கொல்லாமல் நாம் சாவது என்ற போதனையை நாம் கற்றுக்கொண்டால், புராணங்களிலும் வரலாற்றிலும் கர்மபூமி என்று போற்றப்படும் இந்தியாவானது ஒரு ஈடன் தோட்டமாகிவிடும்—அதாவது, மண்ணுலகில் சுவர்க்க சாம்ராஜ்யத்தின் பிரதிபிம்பமாகிவிடும்.

இந்தியா பலாத்காரத்தைத் தன்னுடைய கோட்பாடாகக் கொண்டால், அதன் பிறகும் நான் உயிருடன் இருந்தால், இந்தியாவில் வசிக்க நான் விரும்ப மாட்டேன். பின்னர் இந்நாடு குறித்து நான் பெருமிதம் கொள்ள மாட்டேன். என்னுடைய மதத்துக்குக் கீழ்ப்பட்டதே என்னுடைய தேசாபிமானம். இந்தியா எனக்கு ஆன்மிகப் பாலூட்டுகிறது என்பதால்தான் தாயின் மார்பகத்தில் ஒட்டிக்கொள்ளும் குழந்தையைப் போல இந்நாட்டுடன் நான் ஒட்டிக் கொள்கிறேன். என்னுடைய மகோன்னதமான அபிலாஷைகளுக்கு உகந்த சூழ்நிலையை இந்தியா கொண்டிருக்கிறது. இந்த நம்பிக்கை நீங்கிவிட்டால், பராமரிப்பாளர் ஒருவர் கிடைப்பார் என்ற நம்பிக்கையே இல்லாத அனாதை போல நான் ஆகிவிடுவேன்.

பரிசுத்தமான ஒழுக்கத்தினாலன்றி வேறு எவ் வழியிலும் துன்ப மயமான இந்த நாட்டில் மகிழ்ச்சியை ஏற்படுத்த முடியாது என்ற என்னுடைய உறுதியான நம்பிக்கை நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. சத்தியம், அஹிம்ஸை என்பவைதாம் பரிசுத்தமான ஒழுக்கத்தின் பொருள்.

சத்தியம், அஹிம்ஸை ஆகியவற்றின் வாயிலாக இந்தியா தன்னுடைய கதிமோட்சத்தைத் தேடிக் கொள்வது உலக சமாதானத்துக்கு இந்நாடு பெருந் தொண்டு ஆற்றுவதாகும் என்பதைத் துணிவுடனும் பணிவுடனும் சொல்ல முற்படுகிறேன். உலகில் உள்ள எல்லா நாடுகளும் சமாதான வேட்கையால் தவித்துக் கொண்டிருக்கின்றன. மற்றும், உலக நாடுகள் தனக்கு

அளித்து வரும் தாராள உதவிக்குச் சிறு கைம்மாருகவும் இந்தியா இதைச் செய்யலாம்.

இரத்தக் களரிகளைக் கண்டு சலித்துச் சாகும் நிலைமையில் உலகம் இருக்கிறது என்பதை என்னுடைய இதயத்தின் ஆழத்தில் உணர்கிறேன். உய்யும் வழியை உலகம் தேடிக் கொண்டிருக்கிறது. தவித்துக் கொண்டிருக்கும் உலகத்துக்கு உய்யும் வழியைக் காட்டும் தனிப்பெருமை இந்தியாவுக்குக் கிடைக்கக்கூடும் என்று நான் நம்புகிறேன்—இது தற்புகழ்ச்சியாகத் தோன்றலாம்.

இந்தியா உருவாக்கியுள்ள நாகரிகத்தை விஞ்சக் கூடியது எதுவும் இந்த உலகில் இல்லை. நம்முடைய முன்னோர்கள் ஊன்றிய வித்துக்களுக்கு ஈடானவை வேறு இல்லை.

மேற்கு நாடுகள் இரத்தமயமான தங்கள் மார்க்கத்தில் சலிப்படைந்திருப்பதற்கு அறிகுறிகள் காணப்படுகின்றன. இந்த மார்க்கத்தில் இந்தியாவுக்குக் கதிமோட்சம் கிடைக்காது ; எளிமையும் தெய்வ பக்தியும் வாய்ந்த, இரத்த வாடையற்ற சாந்தி வழியில்தான் கதிமோட்சம் கிடைக்கும். இந்தியா தன்னுடைய ஆன்மாவை இழக்கக்கூடிய அபாயம் இருக்கிறது. ஆன்மாவை இழந்துவிட்டு, 'மேற்கு உலகின் பிரவேசத்தை என்னல் தடுக்க முடியவில்லை' என்று சொல்லிக் கொண்டு இந்நாடு உயிர்வாழ முடியாது.

தன்னுடைய நலனுக்காகவும் உலகத்தின் நலனுக்காகவும் அதை இந்தியா வலிமையுடன் எதிர்த்து நிற்க வேண்டும்.

மேற்கு உலகினிடமிருந்து நாம் கிரகித்துக் கொள்ளக் கூடிய நல்ல விஷயங்கள் பல இருக்கின்றன என்பதை நான் பணிவுடன் ஒப்புக் கொள்கிறேன். விவேகம் என்பது எந்த ஒரு கண்டத்துக்கோ இனத்துக்கோ ஏகபோக்கியமானது அல்ல.

ஐரோப்பிய நாகரிகம் ஐரோப்பியர்களுக்குப் பொருத்தமானது என்பதில் ஐயமில்லை. ஆனால் அதைக் 'காப்பி' அடிக்க நாம் முயன்றால் இந்தியாவுக்கு அழிவுதான் ஏற்படும். ஆனால், நல்லவையாகவும் கிரகிக்கக்கூடியவையாகவும் அதில் உள்ள அம்சங்களை நாம் நமக்கு ஏற்ப மாற்றி அமைத்துக் கிரகித்துக் கொள்ளக்கூடாது என்று நான் சொல்லவில்லை. தங்கள் நாகரிகத்தில் புகுந்திருக்கக்கூடிய தீமைகளை ஐரோப்பியர்கள் களைய வேண்டியதில்லை என்றும் நான் கூற வில்லை. இடையறாமல் லோகாயத வசதிகளைத் தேடுவதும் அவற்றைப் பெருக்கிக் கொண்டு போவதும் இத்தகைய தீமைகளுள் ஒன்று. தங்களை அடிமையாக்கியுள்ள சுகசௌகரியங்களின் பளுவினால் நசுங்கி ஐரோப்பியர் அழியாமல் இருக்க வேண்டுமானால், தங்களுடைய வாழ்க்கை முறையை அவர்கள் மாற்றிக் கொள்வது அவசியம் என்று துணிந்து சொல்வேன். என்னுடைய கணிப்பு தவறாக இருக்கலாம்; ஆனால் அந்த மாயமானின் பின்னால் இந்தியா ஓடினால் நிச்சயமாக அது இறக்க நேரிடும். 'எளிய வாழ்க்கை, எடுப்பான

சிந்தனை' என்று மேற்கத்தித் தத்துவ ஞானி ஒருவர் தந்துள்ள சூத்திரத்தை நம்முடைய இதயங்களில் பொறித்துக் கொள்ளுவோமாக. இன்று கோடிக் கணக்கான மக்களால் எடுப்பான வாழ்க்கையைப் பெறுவது சாத்தியமல்ல என்பது தெளிவு. வெகு ஜனங்களின் சார்பில் சிந்திப்பதாக நடிக்கும் நம் போன்ற ஒருசிலர், எடுப்பான வாழ்க்கையை வீணாகத் தேடுவதன் மூலம் எடுப்பான சிந்தனையை இழக்கக் கூடிய அபாயத்துக்கு உள்ளாவோம்.

மேற்கு உலகிலிருந்து வரக்கூடிய வெளிச்சத்தை நான் பயன்படுத்திக் கொள்வதை எதுவும் தடுக்கவில்லை. ஆனால் மேற்கு உலகின் பகட்டொளியில் நான் என்னை இழந்துவிடக் கூடாது. பகட்டு ஒளியை உண்மை ஒளி என்று நான் தவறாக நினைக்கக் கூடாது.

என்னுடைய வீட்டைச் சுற்றிலும் சுவர்களை எழுப்பி, சன்னல்களை இறுக்க மூடிவைப்பதை நான் விரும்பவில்லை. எல்லா நாடுகளுடைய கலாசாரங் களின் காற்றும் என் வீட்டைச் சுற்றிலும் மிகத் தாராளமாக வீசவேண்டும் என்று விரும்புகிறேன். ஆனால், அவற்றுள் எதுவும் என்னைத் தூக்கியெறிந்து விடக் கூடாது. மற்றவர்களின் வீடுகளில் அழையா விருந்தாளியாகவோ, யாசகனாகவோ, அடிமை யாகவோ வசிப்பதற்கு நான் சம்மதிக்கமாட்டேன்.

தவறான உபமானங்களில் நாம் சிக்கிக் கொள்ளக் கூடாது. அனுபவமும் சரியான தகவலும் இல்லாமை

ஐரோப்பிய எழுத்தாளர்களின் குறைபாடு ஆகும். இந்திய நிலைமைக்கு முற்றிலும் பொருத்தமற்ற ஐரோப்பிய உதாரணங்களைக் கொண்டு அவர்கள் பொது விதிகளை வகுத்தால், அவை நமக்கு ஓரளவுக்கு மேல் வழிகாட்ட முடியாது. ஏனெனில் இந்தியாவில் உள்ளவை போன்ற நிலவரங்கள் ஐரோப்பாவில் சிறிதேனும் இல்லை. ரஷியாவை நீக்கிவிட்டுப் பார்த்தால் கூட இல்லை.

ஆகவே ஐரோப்பாவுக்குப் பொருத்தமானது எதுவும் இந்தியாவுக்கும் பொருந்தும் என்பதில்லை. தவிர, ஒவ்வொரு நாட்டுக்கும் சொந்தப் பண்புகளும், தனி சொரூபமும் உண்டு என்பதையும் நாம் அறிவோம். இந்தியாவுக்குச் சொந்தமான பண்புகள் உண்டு. அதன் பல்வேறு கோளாறுகளுக்கு நாம் உண்மையான பரிகாரம் தேடுவது என்றால், இந்நாட்டினுடைய உடலமைப்பின் விசித்திரங்களை யெல்லாம் கருத்தில் கொண்டுதான் பரிகாரத்தை நிர்ணயிக்க வேண்டும். ஐரோப்பாவைப் போலவே இந்தியாவைத் தொழில் மயமாக்க முற்படுவது எட்டாக் கனிக்குக் கொட்டாவி விடுவதாகும். இந்தியாவும் எத்தனையோ புயல்களுக்கு ஈடு கொடுத்திருக்கிறது. ஒவ்வொரு புயலும் அதன் மீது அழியாத அடையாளங்களை ஏற்படுத்தியிருக்கிறது என்பது உண்மைதான்; ஆனால் அது தன்னுடைய தனித் தன்மையை இதுவரை தீரத்துடன் காப்பாற்றி வந்திருக்கிறது. எத்தனையோ நாகரிகங்கள் சரிந்ததைப் பார்த்துக் கொண்டு, தான் மாத்திரம் வகுப்படாமல் இந்தியா இருந்து வந்திருக்கிறது. உலகில் இத்தகைய நாடுகள் ஒருசிலதான் உண்டு. தங்கள் புராதன ஸ்தாபனங்களின் மேல் மூட நம்பிக்கைகளும் தவறுகளும் படிந்தபோதிலும், அந்த ஸ்தாபனங்களை விடாப்பிடியாகப் பாதுகாத்து வந்திருக்கும் ஒரு சில உலக நாடுகளுள் ஒன்று இந்தியா. அதோடு தவற்றையும் மூட நம்பிக்கையையும் களைகின்ற இயல்பான ஆற்றலையும் இந்தியா இதுவரை வெளிப்படுத்தி வந்திருக்கிறது.

தன்னுடைய கோடிக்கணக்கான மக்களின் பொருளா தாரப் பிரச்சினையைத் தீர்க்கும் திறன் இந்தியாவுக்கு உண்டு என்ற என்னுடைய நம்பிக்கை வேறு எப்போ தையும் விட இப்போது அதிகப் பிரகாசமாக இருக்கிறது.

தீமையையும் இருளையும் நவீன நாகரிகம் பிரதி பலிக்கிறது என்பதையும், புராதன, அதாவது இந்தியக் கலாசாரம் பிரதானமாகத் தெய்வீக சக்தியைப் பிரதி பலிக்கிறது என்பதையும் இப்போது ஐரோப்பாவில் நிகழ்ந்துவரும் பேய்க் கூத்து எடுத்துக் காட்டுகிறது. நவீன நாகரிகம் பிரதானமாக லோகாயதமானது; நம்முடைய நாகரிகம் பிரதானமாக ஆன்மிகமய மானது. ஜடப்பொருளின் நியதிகளை ஆராய்வதில் தான் நவீன நாகரிகம் முனைந்திருக்கிறது. உற்பத்திச் சாதனங்களையும் நாசகார ஆயுதங்களையும் கண்டுபிடிப் பதில் மனித அறிவை அது ஈடுபடுத்துகிறது; நம் முடைய நாகரிகமோ ஆன்மிக நியதிகளைக் கண்டறி வதில்தான் பிரதானமாக முனைந்திருக்கிறது.

சத்தியத்தையும் கற்பு நெறியையும் சரியானபடி கடைப்பிடிப்பது, எல்லாச் சீவராசிகளுக்கும் வழுவாத மரியாதை செலுத்துவது, மற்றவர்களின் உடைமை களுக்கு ஆசைப்படாமல் இருப்பது, அன்றாடத் தேவை களுக்கு அவசியமானதற்கு மேல் எதையும் சேமித்து வைத்துக் கொள்ளாமை என்ற நெறிகள் சரியான வாழ்வுக்கு இன்றியமையாதவை என்றும், இத்தகைய வாழ்வு இல்லாமல் தெய்வீக சக்தியை அறிவது அசாத்தி யம் என்றும் நம்முடைய சாத்திரங்கள் தெட்டத் தெளிவாக விதித்துள்ளன. சரியான முறையில் அஹிம்சைக் குணத்தைப் பூரணமாக வளர்த்துக் கொண்டால், உலகத்தையே நம் காலில் விழச் செய்ய முடியும் என்று நம்முடைய நாகரிகம் திரத்துடன் நமக்கு

எடுத்துச் சொல்கிறது; மிகத்தூய்மையான அன்பும் கருணையும்தான் இந்த அஹிம்ஸையின் ஆக்கமான உருவம். இந்த உண்மையைக் கண்டுபிடித்தவர், அதற்கு ஆதாரமாகப் பெருவாரியான, நம்பத் தகுந்த, உதாரணங்களைக் கொடுத்திருக்கிறார்...... அஹிம்ஸையைக் கடைப்பிடிக்கும்போது மற்றவர்களிடமிருந்து பிரதிபலன் கிடைக்க வேண்டிய அவசியமில்லை என்பதை நினைவில் கொள்ளவேண்டும்; ஆனால் இறுதிக் கட்டங்களில் பிரதிபலனைப் பெறுகின்ற சக்தி அதற்கு உண்டு. நம்முடைய நாகரிகத்தின் வாயிலாக உலகத்துக்கு நாம் அளிக்கக் கூடிய போதனை ஒன்று உள்ளது என்று நம்முள் பலர் நம்புகின்றனர். அவர்களுள் நானும் ஒருவன்.

* * * *

## 2. இந்தியா ஒரே தேசிய சமுதாயம்

முன்பு நாம் ஒரே தேசிய சமுதாயமாக இருந்ததால் நம்மிடையே வேற்றுமைகளே இருக்கவில்லை என்று நான் கூறவரவில்லை. ஆனால் அக்காலத்தில் நம்நாட்டுப் பெரியார்கள் கால் நடையாகவோ மாட்டு வண்டிகளிலோ இந்தியா முழுதிலும் பிரயாணம் செய்தார்கள் என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். ஒருவருடைய பாஷையை மற்றவர்கள் கற்றுக் கொண்டார்கள்; அவர்கள் ஒட்டி உறவாடாமல் ஒதுங்கி இருக்கவில்லை. தூரதிருஷ்டி வாய்ந்த நம்முடைய முன்னோர்களை தெற்கே சேதுவையும் (இராமேசுவரம்) கிழக்கே பூரியை

யும், வடக்கே ஹரித்துவாரத்தையும் யாத்திரைத் தலங்களாக நிர்ணயித்ததன் நோக்கம் எதுவாக இருந் திருக்கும் என்று நினைக்கிறீர்கள்? அவர்கள் முட்டாள் கள் அல்ல என்பதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்கள். வீட்டில் இருந்து கொண்டே ஆண்டவனை வழிபடலாம் என்பது அவர்களுக்குத் தெரிந்த விஷயம்தான். நன்னெறியின் ஒளிவீசும் இதயங்களைக் கொண்டவர் களின் வீடுகளில் கங்கை இருப்பதாக நமக்குப் போதித்த வர்கள் தாம் அவர்கள். ஆனால், இந்தியா இயற்கை யாகவே, பிரிக்கமுடியாத ஒரே நாடு என்பதை அவர்கள் உணர்ந்தனர். ஆகவே அது ஒரே தேசிய சமுதாயமாக வும் இருக்கவேண்டும் என்று தர்க்கரீதியாக அவர்கள் தீர்மானித்தனர். இந்தத் தர்க்க வாதத்தின் பலனாக, நாட்டின் பல்வேறு பாகங்களில் புண்ணிய க்ஷேத்திரங் களை அவர்கள் நிறுவினர். இரண்டு ஆங்கிலேயர்களை ஒரே தேசிய சமுதாயத்தினர் என்று சொல்ல முடியாது; ஆனால் இந்தியர்களாகிய நாம் ஒரே தேசிய சமுதாயத் தினர். நாகரிகம் வாய்ந்த உயர்ந்த மனிதர்கள் என்று நினைத்துக் கொள்ளும் உங்களையும் என்னையும் போன்ற வர்கள் தாம், நாம் பல தேசிய சமுதாயங்களைச் சேர்ந்த வர்கள் என்று கற்பனை செய்து கொள்கிறோம்.

பல்வேறு மதங்களைச் சேர்ந்தவர்கள் இந்தியாவில் வசிப்பது காரணமாக அது ஒரே தேசிய சமுதாயமல்ல என்று கூறமுடியாது. அந்நியர்கள் புகுவதால் ஒரு சமுதாயம் அழிந்துவிடுவதில்லை. அவர்களும் அதனுடன் ஒன்றிக் கலந்துவிடுகின்றனர். ஒரு நாட்டில் இத்தகைய நிலைமை காணப்பட்டால்தான் அது ஒரே சமுதாயம் என்று கருதப்படும். அந்நியரைக் கிரகித்துக் கொள்ளும் சக்தி அந்த நாட்டுக்கு இருக்கவேண்டும். இத்தகைய நாடாக இந்தியா எப்போதுமே இருந்து வந்திருக்கிறது. உண்மையில், எத்தனை ஆட்கள் இருக்கிறார்களோ

அத்தனை மதங்களும் இருக்கின்றன; ஆனால் ஒரே தேசிய சமுதாய உணர்வு உள்ளவர்கள் பிறருடைய மதங்களில் தலையிடுவதில்லை. இந்தியாவில் ஹிந்துக்கள்தாம் வாழ வேண்டும் என்று ஹிந்துக்கள் நினைத்தால் அவர்கள் கனவு உலகில் வசிப்பவர்கள் என்றே கருதவேண்டும். இந்தியாவைத் தங்கள் நாடாகக் கொண்டுள்ள ஹிந்துக் கள், முகம்மதியர், பார்ஸிகள், கிறிஸ்தவர்கள் ஆகிய எல்லோரும் ஒரே நாட்டினர்தாம், தங்கள் சொந்த நலனை உத்தேசித்தாவது அவர்கள் ஒற்றுமையுடன் வாழ்வது அவசியம். தேசிய சமுதாயமும் மதமும் ஒன்று தான் என்ற நிலைமை உலகின் எந்தப் பகுதியிலும் காணப்படவில்லை; இந்தியாவிலும் அது எச்சமயத்திலும் காணப்பட்டதில்லை.

ஹிந்துக்கள், முஸ்லிம்கள் என்ற இருசாராரும் இந்தியாவின் புதல்வர்கள்தாம். நம்மைப் பெற்றடுத்த மானிடத் தாயை மதிக்கவும் துதிக்கவும் நாம் கடமைப் பட்டிருக்கிறோம்; இவ்வாறு வழிபடுவது நம் ஆன்மாவைத் தூய்மைப்படுத்துகிறது. அப்படியானால் நம் தாய் நாட்டினிடம் நாம் எவ்வளவு அதிகமான விசுவாசமும் மரியாதையும் செலுத்த வேண்டும்? தாய் நாடு அழிவற்ற தாயாகும்; அவள் மார்பகம்தான் நம்மைத் தாங்குகிறது, அதன் மீதுதான் நாம் இறக்கப் போகிறோம். இந்நாட்டில் பிறந்து, இதைத் தங்கள் தாய் நாடாகப் பாத்தியதை கொண்டாடுவோர் அனைவரும்—அவர்கள் ஹிந்துக்களாயினும், முஸ்லிம் களாயினும், பார்ஸிகளாயினும், கிறிஸ்தவர்களாயினும், ஜைனர்களாயினும், சீக்கியர்களாயினும் அவளுடைய குழந்தைகள்தாம். ஆகவே அவர்கள் அனைவரும் இரத்த பாசத்தையும் விட வலுவான ஒரு பாசத்தால் பிணைக்கப் பட்ட சோதரர்கள் ஆவர்.

இங்கு பிறந்து வளர்ந்தவர்கள் அனைவருக்கும், வேறு நாட்டைப் புகலிடமாகக் கொள்ளமுடியாதவர்கள் அனைவருக்கும் ஹிந்துஸ்தானம் சொந்தமானதாகும். ஆகவே ஹிந்துக்களைப் போலவே, பார்ஸிகள், யூதர்கள், இந்தியக் கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள், ஹிந்துக்களல்லாத மற்றவர்கள் ஆகியோருக்கும் அது சொந்தமானது. சுதந்திர இந்தியா ஹிந்து ராஜ்யமாக இருக்காது; அது இந்திய ராஜ்யமாகவே இருக்கும். எந்தப் பெரும்பான்மை மதப்பிரிவு அல்லது வகுப்பையும் அது ஆதாரமாகக் கொண்டிருக்காது; மத வேறுபாடின்றி எல்லா மக்களின் பிரதிநிதிகளையும் அது ஆதாரமாகக் கொண்டிருக்கும். ஹிந்துக்களைச் சிறுபான்மையினராக்கி, மற்ற எல்லோரையும் கூட்டுப் பெரும்பான்மையினராக்கலாம் என்ற கருத்துக்கு இடமில்லை. சேவை, தகுதிகள் என்ற அடிப்படையில்தான் அந்தப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுவர். மதம் என்பது தனியார் விஷயம், அரசியலில் அதற்கு இடம் கொடுக்கக்கூடாது.

மாகாணங்களை மொழிவாரியாகத் திருத்தி அமைப்பது இந்தியாவின் இயற்கையான ஐக்கியத்துக்கு முரணாக இருக்கக்கூடாது. மாகாண சுயேச்சை என்பது ஐக்கியத்துக்கு விரோதமானது அல்ல, ஐக்கியத்தை அது சீர்குலைக்கவும் கூடாது; மற்ற மாகாணங்களிலிருந்தோ மத்திய அரசாங்கத்திலிருந்தோ விலகி எந்த மாகாணமும் இனிமேல் இஷ்டம்போல் நடக்கலாம் என்றும் இதற்கு அர்த்தம் இல்லை. ஒவ்வொரு மாகாணமும் தன்னை ஒரு தனியான, சுதந்திர அமைப்பாக நினைத்துக் கொண்டால், இந்திய சுதந்திரம் பொருளற்றதாகிவிடும். பின்னர் பல்வேறு உறுப்புகளின் சுதந்திரமும் மறைந்துவிடும்......

வெளி உலகம் நம்மைக் குஜராத்திகள், மகாராஷ்டிரர், தமிழர் என்று இனம் கண்டுகொள்வதில்லை, இந்தியர்கள் என்றே இனம் கண்டு கொள்கிறது.

ஆரோக்கியமான மாகாணப்பற்று எப்போதுமே இருந்து வருகிறது, இனியும் இருந்து வரும். மாகாணங்களிடையே ஆரோக்கியமான வித்தியாசங்கள் இல்லாவிடில் தனித்தனி மாகாணங்கள் இருப்பதற்கு அர்த்தமே இல்லை. ஆனால் நம்முடைய மாகாண அபிமானம் குறுகியதாகவோ, தனிப்பட்டதாகவோ இருக்கக்கூடாது. நாடு முழுவதன் நலனுக்கும் உகந்ததாக அது இருக்க வேண்டும்; ஒரே நாட்டின் பல்வேறு உறுப்புகளே மாகாணங்கள். ஒரு பெரிய நதியின் உபநதிகளுடன் அவற்றை ஒப்பிடலாம். பிரதான ஆற்றுக்கு அவைதாம் பேருருவம் தருகின்றன. ஆற்றின் வலிமையையும் தூய்மையையும் அதன் கம்பீரமான நீரோட்டம் பிரதிபலிக்கும். மாகாணங்களும் இவ்வாறே செய்யவேண்டும். மாகாணங்கள் செய்யும் ஒவ்வொரு காரியமும் நாடு முழுவதற்கும் பெருமை தரவேண்டும். ரவீந்திரநாதரின் மகத்தான படைப்புகள் வங்காளத்துக்குப் பெருமை தருவது போலவே அகில இந்தியாவுக்கும் பெருமை தருகின்றன. அவருடைய செல்வாக்கு நாடு முழுதிலும் பரவியிருக்கவில்லையா? தாதாபாய் பார்ஸிகளுக்காகவோ, பம்பாய்க்காகவோ மாத்திரம் வாழவில்லை, இந்தியா முழுவதற்குமாகவே வாழ்ந்தார். ஒரு மாகாணத்திலிருந்து இன்னொரு மாகாணம் பிரிந்து வாழவோ ஒன்றன் மீது இன்னொன்று பொறாமைப்படுவதற்கோ இடமில்லை. இந்தியா பல பகை நாடுகளாகப் பிரிந்து. ஒவ்வொன்றும் தனக்காகவே, முடிந்தால் மற்றவைகளுக்குத் தீங்கு செய்துகொண்டு, வாழவேண்டும் என்றால்தான் இதற்கு மாறாக நடக்கலாம். இத்தகைய உற்பாதம் இந்தியாவுக்கு ஏற்பட்டால் காங்கிரஸ் இதுவரை ஜீவித்து வந்திருப்பது வீண்தான். இந்தியாவைத் தனித்தனி அமைப்புகளாகப் பிரிப்பதற்கு மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு முயற்சியையும் எதிர்க்க வேண்டும். வலிமை வாய்ந்த சுதந்திர தேசமாகி, உலகின் முன்னேற்றத்துக்காகத் தன்னுடைய ஒப்பற்ற பணியை ஆற்றுவதுதான் இந்தியாவின் கதிமோட்ச

மாகும். எந்தக் கட்டத்திலும் நம்முடைய தேசபக்தி யானது தந்நலம் வாய்ந்ததாக இருந்ததில்லை. உலகின் மற்ற நாடுகளுக்கு நஷ்டம் ஏற்படும் விதத்தில் நாம் சுபிட்சம் பெற விரும்பவில்லை. ''நாங்கள் இந்தியப் பிரஜைகளாக இருப்பது போலவே உலகப் பிரஜை களாகவும் இருக்கிறோம்'' என்று நாம் சொல்லக்கூடிய காலம் வர வேண்டும். சுதந்திர இந்தியாவின் பிரஜை களாக இருக்கும் கலையை நாம் தெரிந்து கொள்ளாவிடில் அந்தக்காலம் வரவே செய்யாது. விஷத்தன்மை வாய்ந்த மாகாணப் பித்துக்களை நாம் வளர்த்து வந்தால் அந்தக் கலையை நாம் கற்றுக்கொள்ளவே முடியாது. முதலில் ஒவ்வொரு நபரும் சரியாக வாழ்ந்தால்தான் சரியான தேசீய வாழ்வு உருவாக முடியும். நான் வலிமையுடனும் சுதந்திரத்துடனும் வாழ விரும்புகிறேன் என்றால் அது எனக்காக மாத்திரம் அல்ல; எனது வலிமையும் சுதந் திரமும் என்னுடைய அண்டை அயலாருக்கும் நன்மை அளிக்க வேண்டும். தனி நபர்கள் என்ற முறையிலும், பல்வேறு மாகாணத்தினர் என்ற முறையிலும், நம்முடைய மிகச் சிறந்த படைப்புகளைத் தாய் நாட்டின் சந்நிதியில் சமர்ப்பிக்க வேண்டும்.

இந்தியாவில் உள்ள முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள், மற்ற மதத்தினர் ஆகியோரையும் தொற்றிக் கொண்டிருக்கும் அளவுக்கு ஜாதி வேறுபாடுகள் நம்மிடையே ஆழமாக வேரூன்றியுள்ளன. உலகின் மற்றப் பாகங்களிலும் ஏறத்தாழ இவைபோன்ற வர்க்கப் பிரிவினை மதில்கள் உள்ளன என்பது உண்மைதான். ஆகவே இது மனித வர்க்கத்துக்குப் பொதுவான ஒரு பிணி என்று தெரிகிறது. உண்மையான மதக் கோட் பாடுகளைப் புகட்டுவதன் மூலமே இதை நீக்க முடியும். இத்தகைய பிரிவினைச் சுவர்களுக்கும் ஏற்றத் தாழ்வு களுக்கும் எந்த மதத்தின் சாத்திரங்களிலும் ஆதாரம் இருப்பதாக எனக்குப் புலப்படவில்லை.

மதத்தின் முன்னிலையில் எல்லா மனிதர்களும் சமமானவர்களே. கல்வி, அறிவு அல்லது செல்வம் உள்ள ஒருவர், இவைகளைப் பெற்றிராத மற்றவர்களை விடத் தாம் உயர்ந்தவர் என்று உரிமை கொண்டாட முடியாது. உண்மையான மதச் சாராம்சத்தின் பரிசுத்தப்படுத்தும் தன்மையிலும் கட்டுப்பாட்டிலும் ஒருவர் ஊறித் திளைத்து, புனிதம் பெற்றுவிட்டால், பிறகு அவர் தம்மை விடக் குறைந்த வசதிகளைப் பெற்றவர்களுடன் தம் வசதிகளைப் பகிர்ந்து கொள்வது தம்முடைய கடமை என்பதை உணர்கிறார்.

ஜாதி, மாகாணம் என்ற இரட்டைச் சுவர்களைப் பிளக்க வேண்டும். இந்தியா ஒரே நாடு என்றால், பிரிக்க முடியாத நாடு என்றால், சமபந்தி போஜனத்தையும் கலப்பு மணத்தையும் ஏற்றுக் கொள்ளாத எண்ணற்ற சிறிய கோஷ்டிகளைச் சிருஷ்டிக்கும் செயற்கைப் பிரிவினைகள் இருக்கக்கூடாது. இந்தக் கொடிய சம்பிரதாயத்துக்கும் மதத்துக்கும் சம்பந்தம் இல்லை. இதை மாற்றும் முயற்சியைத் தனி நபர்கள் தொடங்க முடியாது என்றும், மாறுவதற்கு உரிய பக்குவத்தைச் சமூகம் முழுவதும் பெறும்வரை அவர்கள் காத்திருக்க வேண்டும் என்று வாதாடுவதில் பலனில்லை. கொடிய சம்பிரதாயங்களையும் வளமுறைகளையும் தனிப்பட்ட தீரர்கள் உடைத்தெறிவது தவிர வேறு வழியில் சீர்திருத்தம் எதுவும் எச்சமயத்திலும் நிறைவேற்றப் பட்டதில்லை.

ஒற்றுமை எதில் அடங்கியிருக்கிறது? அதை வளர்ப்பதற்கான மிகச் சிறந்த வழி எது? பொதுவான

ஒரு காரியம், பொதுவான ஒரு குறிக்கோள், பொது வான துயரங்கள் ஆகியவற்றில்தான் ஒற்றுமை அடங்கி யிருக்கிறது. மற்றவர்களின் துயரங்களைப் பகிர்ந்து கொள்வதன் மூலமும், பரஸ்பரச் சகிப்புத் தன்மையின் மூலமும், அந்தப் பொதுக் குறிக்கோளை அடைவதற்கு ஒத்துழைப்பதுதான் ஒற்றுமையை வளர்க்க மிகச் சிறந்த வழியாகும்.

இரத்தம் சிந்தாமல் இந்தியா சுதந்திரம் அடைந் திருப்பதை உலகம் முழுவதும் பாராட்டுகிறது. நம்முடைய சரியான நடத்தையின் வாயிலாக அந்தச் சுதந்திரத்துக்கு நாம் பாத்திரர்களாக வேண்டும்.

நான் கனவு காணும் புதிய இந்தியாவானது, தன்னுடைய இயற்கைச் சூழ்நிலைகளுக்கு ஏற்ற புதிய தோர் வாழ்வுக்கு அஸ்திவாரம் போடவேண்டும் என்று விரும்புகிறேன்...........மிகச் சிறந்த சமூகத்தை உருவாக்க வேண்டும் என்ற குறிக்கோளுக்குப் புதிய இந்தியா தன்னை அர்ப்பணித்துக் கொள்ளவேண்டும்.

இந்தியா இப்போது சுதந்திரமடைந்து விட்டது; எதார்த்த நிலைமை இப்போது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. அடிமைச் சுமை நீங்கிவிட்டதால், நல்ல சக்திகளையெல்லாம் ஒன்று திரட்டி, நாட்டை நிருமாணிக்கும் பிரம்மாண்டமான பணியில் ஈடுபடுத்த வேண்டும்; மனிதர்களிடையே உள்ள பூசல்களைத் தீர்ப்பதற்குப் பலாத்காரத்தை உபயோகிக்கும் வழக் கத்தை இந்நாடு கைவிடவேண்டும். இத்தகைய பூசல் கள் இரு அரசுகளுக்கு (இந்தியா, பாகிஸ்தான்) இடையே ஏற்பட்டாலும் சரி, அல்லது ஒரு நாட்டு

மக்களின் இரு பிரிவினரிடையே ஏற்பட்டாலும் சரி, அவற்றைத் தீர்க்கப் பலாத்காரத்தைப் பிரயோகிக்கக் கூடாது. இந்தியா தகுந்த முறையில் நடந்து கொள்ளும் என்றும், இரு புதிய அரசுகள் ஏற்பட்டிருப்பதால் மனித வர்க்கத்துக்கு நன்மையே தவிர ஆபத்து அல்ல என்பதை இந்நாடு உலகத்துக்கு நிரூபித்துக் காட்டும் என்றும், நான் இன்னமும் நம்புகிறேன்.

நான் கடைப்பிடிக்கும் மதம் காரணமாகச் சிறுபான்மை வகுப்பு என்று கருதப்படும் ஒரு வகுப்பு, அதற்காகச் சிறுமைப்படுத்தப்பட்டால், அத்தகைய இந்தியா நான் கனவு கண்ட இந்தியாவல்ல என்று மாத்திரம் குறிப்பிட விரும்புகிறேன். எந்த இந்தியாவை உருவாக்குவதற்காக நான் ஆயுள் முழுதும் பாடுபட்டேனே அந்த இந்தியாவில், ஒவ்வொருவரும், அவருடைய மதம் எதுவாக இருந்தாலும், சம அந்தஸ்தை அனுபவிப்பார். அரசு முற்றிலும் மதச் சார்பற்றதாகத்தான் இருக்க வேண்டும். மதவாரியான கல்வி நிலையம் எதற்கும் அரசாங்கம் போஷணை அளிக்கக்கூடாது என்றுகூட நான் சொல்லுவேன்.

கடவுளிடம் பயபக்தி கொண்டுள்ள மனிதர்களுக்கு எல்லா மதங்களும் நல்லவையே, சமமானவையே; வெவ்வேறு மதத்தினர் என்று தங்களைக் கருதிக் கொள்பவர்கள்தாம் ஒருவரோடொருவர் பூசலிட்டுக் கொண்டு, அதன் வாயிலாகத் தங்கள் சொந்த மதங்களையே மறுத்துக் கொண்டு நிற்பர். இந்திய யூனியனில் உள்ளவர்கள் தங்கள் மதங்களின் பெருமைக்கு ஏற்ற முறையில் நடந்து கொள்வர் என்றும், தங்களை ஒரே பூமியின் புதல்வர்—புதல்வியர்கள் என்று பெருமையுடன் குறிப்பிட்டுக் கொள்வர் என்றும், சட்டத்தின் முன்னிலையில் பூரண சமத்துவத்தை அனுபவிப்பர் என்றும் நம்புகிறேன். மதம் என்பது மனிதனுக்கும்

கடவுளுக்கும் இடையே உள்ள தனிப்பட்ட விஷய மாகும்; ஒருவருடைய தேசிய இனத்துக்கு அது உரைகல் அல்ல. தேசிய இனம் சம்பந்தப்பட்டவரை, நம்முடைய மதம் எதுவாக இருந்தாலும், நாம் முழுக்க முழுக்க இந்தியர்களே.

* * * *

## 3. நான் கனவில் காணும் இந்தியா

பின்கண்ட இந்தியா உருவாவதற்காக நான் உழைக்க விரும்புகிறேன்: இது தங்கள் நாடு என்றும், இதை உருவாக்குவதில் தங்களுக்குச் சரியான பங்குரிமை இருக்கிறது என்றும் பரம ஏழைகள் கூட உணரும் விதத்தில் அந்த இந்தியா இருக்கவேண்டும். அந்த இந்தியாவில் உயர்ந்த பிரிவினர், தாழ்ந்த பிரிவினர் என்ற வேற்றுமை இருக்கக்கூடாது. அந்த இந்தியாவில் எல்லா வகுப்புகளும் முழு இணக்கத்துடன் வாழவேண்டும். தீண்டாமை என்னும் சாபத்தீட்டுக்கோ, மதுபானங்கள், லாகிரி வஸ்துக்கள் என்ற சாபத்தீட்டுக்கோ இடமேயிருக்கக்கூடாது. ஆண்களுக்குச் சமமான உரிமைகளைப் பெண்களும் அனுபவிக்க வேண்டும். உலகின் மற்ற எல்லாப் பகுதிகளுடனும் நாம் சமாதான உறவு கொண்டிருப்போம் என்பதாலும், நாம் பிறரைச் சுரண்டவோ, பிறரால் சுரண்டப்படவோ போவதில்லை என்பதாலும், கூடுமானவரை மிகச் சிறிய ராணுவத்தையே நாம் கொண்டிருக்கவேண்டும்.

வாயில்லாப் பூச்சிகளாக உள்ள கோடிக்கணக்கான மக்களின் நலசிரத்தைகளுக்கு முரணில்லாதிருக்கும் உள் நாட்டு நலசிரத்தைகளுக்கும் அந்நிய நலசிரத்தைகளுக்கும் தகுந்த மரியாதை அளிக்கவேண்டும். உள்நாடு, வெளிநாடு என்ற வேற்றுமையை, சொந்த ஹோதாவில் நான் வெறுக்கிறேன்—நான் கனவில் காணும் இந்தியா இதுதான். இதற்குக் குறைவான எதுவும் எனக்குத் திருப்தி அளிக்காது.

நம்முடைய நாகரிகத்தின் தன்மையை அப்படியே பாதுகாத்துக் கொள்வதுதான் என்னுடைய சுயராஜ்யமாகும். புதிய விஷயங்கள் பலவற்றையும் எழுதிக் கொள்ள நான் விரும்புகிறேன். ஆனால் இந்தியச் சிலேட்டில்தான் அவைகளை எழுதவேண்டும். மேற்கு நாடுகளிடமிருந்து நான் கடன் வாங்கக்கூடியதைச் சரியான வட்டியுடன் சேர்த்துத் திருப்பிக் கொடுக்க முடியும் என்றால், மகிழ்ச்சியுடன் அவ்வாறு கடன் வாங்குவேன்.

நான் கனவு காணும் சுயராஜ்யம் ஏழையின் சுயராஜ்யமாகும். மன்னர்களும் பணக்காரர்களும் பெறுகின்ற அவசிய வாழ்க்கைப் பண்டங்களை யெல்லாம் ஏழைகளாகிய நீங்கள் பெறவேண்டும். ஆனால் அவர்களைப்போல நீங்களும் அரண்மனையில் வாழவேண்டும் என்று இதற்கு அர்த்தமில்லை. அரண்மனைகளில் நீங்களும் நானும் திக்குத் தெரியாமல் திண்டாடுவோம். சாதாரண வாழ்க்கை வசதிகளை யெல்லாம் பணக்காரர்களைப் போலவே நீங்களும் பெறவேண்டும். இந்த வசதிகளை உங்களுக்கு உத்தரவாதம் செய்யாத சுயராஜ்யம் பூரண சுயராஜ்யம் அல்ல.

"இந்தியா பூரண சுதந்திரம் பெற்றுவிட்டதாக எப்போது கருதலாம்?"

தங்கள் சொந்த முயற்சியால் தங்கள் நிலையை உயர்த்திக் கொள்ள முடியும் என்றும், தங்கள் விருப்பப்படி தங்கள் கதிமோட்சத்தை உருவாக்கிக் கொள்ளமுடியும் என்றும், வெகுஜனங்கள் எப்போது உணர்கிறார்களோ அப்போதுதான் அவ்வாறு கருதலாம்.

இந்தியாவை அதன் ஒருசில நகரங்களில் காண முடியாது என்றும், அதன் ஏழு லட்சம் கிராமங்களில் தான் காண முடியும் என்றும் நான் கொண்டுள்ள நம்பிக்கையை எத்தனையோ முறை வெளியிட்டிருக்கிறேன். இந்தியாவை நகரத்தில்தான் காண முடியும் என்றும், நம்முடைய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவே கிராமங்கள் படைக்கப்பட்டிருப்பதாகவும், நகரவாசிகளாகிய நாம் கருதி வந்திருக்கிறோம். அந்த ஏழை மக்களுக்குப் போதிய சாப்பாடு கிடைக்கிறதா, வெய்யில் மழையிலிருந்து பாதுகாத்துக்கொள்ள அவர்களுக்குப் போதிய உடை இருக்கிறதா என்று விசாரிப்பதற்குக்கூட நமக்கு அவகாசம் இருப்பதில்லை.

திமிருடன் அநீதிகளை இழைக்கும் நகரங்கள், கிராமங்களின் வாழ்வுக்கும் சுயேச்சைக்கும் எப்போதுமே ஒரு ஆபத்தாக இருந்து வருகின்றன.

இந்தியாவின் கிராமவாசிகளுக்காகவே நகரங்களின் மக்கள் உயிர் வாழ்வர் என்பதை நகரங்கள் நிரூபிக்க விரும்பினால், தங்கள் நிதியில் பெரும்பகுதியை

ஏழை மக்களின் நிலைமை உயர்த்துவதற்காக அவை செலவிடப்படவேண்டும்.

கிராமங்களை நகரங்கள் சுரண்டி அவற்றின் செல்வத்தை வற்றடிக்கின்றன......கிராமங்களில் எந்தப் பண்டங்களை நன்கு தயாரிக்க முடியுமோ அவற்றை நகரங்களில் உற்பத்தி செய்ய அனுமதிக்கக்கூடாது என்பது என்னுடைய திட்டமாகும். கிராமாந்தரப் பண்டங்களின் விற்பனை நிலையங்களாக இருப்பதுதான் நகரங்களுக்கு ஏற்ற அலுவல்...கிராமங்கள் தன்னிறைவு பெறவேண்டும். அஹிம்சை முறையில் நாம் செயல் புரிவது என்றால் இதைத் தவிர வேறு பரிகாரமே இல்லை.

தங்களைக் கவனித்துக் கொள்ளும் சக்தி நகரங்களுக்கு இருக்கிறது. கிராமங்களுக்குத்தான் நாம் உதவி செய்ய வேண்டும். குரோதங்கள், மூட நம்பிக்கைகள், குறுகிய மனப்பான்மை ஆகியவற்றைக் கிராமங்கள் கைவிடுமாறு செய்யவேண்டும். கிராமங்களில் நாம் தங்கி, அவற்றின் சுகதுக்கங்களைப் பகிர்ந்துகொண்டு, கல்வியையும் அறிவுத் தகவல்களையும் பரப்புவதுதான் இதற்கான ஒரே வழி.

வளைந்த முதுகின் மேல் வெய்யில் சுள்ளென்று அடிக்கப் பாடுபடுகின்ற கிராமவாசிகளின் நிலையில் நம்மையும் வைத்துப் பார்க்க வேண்டும். கிராமவாசிகள் குளிப்பதற்கும், துணி துவைப்பதற்கும், பாத்திரங்களைக் கழுவுவதற்கும், மற்றும் கால்நடைகளைக் குளிப்

பாட்டுவதற்கும் குடிப்பதற்கும், உபயோகிக்கப்படும் குட்டையின் நீரை நம்மால் குடிக்க முடியுமா என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். அப்போதுதான் நாம் வெகுஜனங்களின் உண்மையான பிரதிநிதிகளாக இருக்க முடியும்; அப்போதுதான் அவர்களும், நான் இதை எவ்வளவு நிச்சயமாக எழுதுகிறேனே அவ்வளவு நிச்சயமாக, நம்முடைய யோசனை ஒவ்வொன்றையும் ஏற்றுக்கொள்வார்கள்.

நேரம், ஆரோக்கியம், பணம் ஆகியவற்றை எவ்வாறு சிக்கனம் செய்யலாம் என்பதை அவர்களுக்கு நாம் போதிக்கவேண்டும். நம்முடைய கிராமங்களைக் குப்பைமேடுகள் என்று லயனல் கர்ட்டிஸ் வருணித்தார். அவற்றை உதாரணக் கிராமங்களாக நாம் மாற்ற வேண்டும். சுற்றிலும் நல்ல காற்று வீசியும் நம் கிராம வாசிகளுக்கு நல்ல காற்று கிடைப்பதில்லை; அவர்களைச் சுற்றிலும் மிக நல்ல உணவுப் பண்டங்கள் இருந்தும் அவர்களுக்கு நல்ல உணவு கிடைப்பதில்லை. உணவு சம்பந்தப்பட்டவரை நான் இலட்சிய வெறியுடன் பேசுகிறேன்; ஏனென்றால் கிராமங்களை அழகின் உறைவிடங்களாக மாற்றுவது என்னுடைய இலட்சியமாகும்.

நம்முடைய அன்றாடத் தேவைப் பொருட்களைக் கிராமங்களிலிருந்து பெறவேண்டும்; சில பண்டங்கள் இவ்வாறு கிடைக்கவில்லை என்றால் நாம் சிறிது சிரமப் பட்டு, முறையான ஏற்பாடுகள் செய்து, அந்தப் பண்டங்களையும் கிராமங்களில் இலாபகரமாகத் தயாரிப்பதற்கு முயற்சிக்கவேண்டும். கிராமக் கைத்தொழில் திட்டத்தின் அடிப்படைக் கருத்து இதுதான். இதில் கிராம

வாசிகளின் இலாபத்தைக் கவனிக்கவேண்டுமே தவிர, நம்முடைய இலாபத்தைக் கணக்கிடக் கூடாது. ஆரம்ப கட்டத்தில் சாதாரண விலையைவிட நாம் சிறிது அதிக மாகக் கொடுக்க வேண்டியிருக்கலாம், பண்டமும் தரக் குறைவானதாக இருக்கலாம். நம்முடைய தேவைகளைப் பூர்த்தி செய்யும் உற்பத்தியாளரிடம் நாம் சிரத்தை எடுத்துக்கொண்டு அவருடைய செய்முறை திருந்த வேண்டும் என்பதை வலியுறுத்தி, அவ்வாறு திருந்து வதற்கு உதவியும் செய்தால், நிலைமையில் அபிவிருத்தி ஏற்படும்.

நாங்கள் உற்பத்தி செய்யும் பண்டங்கள் வெளி யில் உடனடியாக விற்பனையாகும் விதத்தில் கிராம வாசிகள் தங்கள் கைத்திறனை நன்கு வளர்த்துக்கொள்ள வேண்டும். நம் கிராமங்கள் முழு அளவுக்கு அபிவிருத்தி செய்யப்பட்டால், சிறந்த கலைத்திறனும் கைத்திறனும் வாய்ந்த ஆட்களுக்கு அப்போது பஞ்சமே இருக்காது. அப்போது கிராமங்களில் கவிஞர்களும், கலைஞர்களும், கட்டிடச் சிற்பிகளும், மொழிவல்லுனர்களும், ஆராய்ச்சி யாளர்களும் இருப்பர். சுருங்கச் சொன்னால், வாழ்க் கைக்குப் பயனுள்ளது எதுவும் கிராமங்களில் கிடைக்கா மல் இருக்காது. இன்று கிராமங்கள் குப்பை மேடுகளாக இருக்கின்றன. நாளை அவை சின்னஞ்சிறு 'ஈடன் தோட்டங்களா'க விளங்கும்; அவற்றில் வசிப்பவர்கள் அறிவில் சிறந்தவர்களாக இருப்பார்கள்; அவர்களை யாராலும் ஏமாற்றவோ சுரண்டவோ முடியாது.

கடவுள் மனிதனைப் படைத்தபோது அவன் உழைத்து உண்ணவேண்டும் என்று விதித்தார்; உழைகி

காமல் உண்பவர்கள் திருடர்கள் என்று குறிப்பிட்டார். இந்தியர்களில் எண்பது சதவிகிதத்தினர் வருஷத்தில் பாதி நாட்கள் நிர்ப்பந்தமாக இத்தகைய திருடர்களாக இருக்கவேண்டியுள்ளது. ஆகவே இந்தியா ஒரு பெரிய சிறைச்சாலையாக மாறியிருப்பதில் ஆச்சரியம் இல்லை அல்லவா? இந்தியா ஏன் சர்க்காவைக் கைக் கொள்ள வேண்டும் என்பதற்கு ஆதரவான வாதம் பட்டினிதான். சர்க்காவின் அழைப்புத்தான் மிக உன்னதமானது. ஏனெனில் அது அன்பின் அழைப்பு ஆகும். அன்புதான் சுயராஜ்யம்......செத்துக் கொண்டிருக்கும் கோடிக் கணக்கான நம் நாட்டின் ஆண் பெண்களுக்குப் புத்துயிர் அளிக்கக்கூடியது கைராட்டைதான். "உணவுக்காக உழைக்கவேண்டிய அவசியம் இல்லாத நான் ஏன் நூற்க வேண்டும்" என்று கேட்கலாம். எனக்குச் சொந்த மில்லாததை நான் உண்ணுகிறேன் என்பதுதான் இதற்கு விடையாகும். ஏனெனில் என் நாட்டினரைச் சுரண்டி நான் வாழ்ந்து வருகிறேன். உங்கள் ஜேபியில் வந்து விழும் ஒவ்வொரு பைசாவும் எங்கிருந்து வருகிறது என்பதை நீங்கள் கண்டுபிடித்தால் நான் இவ்வாறு எழுதுவதில் உண்மை இருப்பதைத் தெரிந்து கொள் வீர்கள். நிர்ப்பந்தமாகச் சோம்பியிருக்கும் நேரத்தை எவ்வாறு பயன்படுத்துவது என்பதைக் கோடானு கோடி மக்கள் தெரிந்து கொள்ளாவிடில், சுயராஜ்யம் அவர்களுக்குப் பொருளற்றதாகிவிடும்......உழைப்பின் பெருமையை உணரவேண்டும் என்று கூறுவதும் சர்க்கா வைக் கைக்கொள்ளவேண்டும் என்று கூறுவதும் ஒன்றேதான்.

காதியை (கதர்) வலியுறுத்துவதன் மூலம் எதிர்க் காற்றை மீறி நான் சுயராஜ்யக் கப்பலைச் செலுத்துவ தாகவும், அந்தக் கப்பலை நிச்சயமாக மூழ்கடித்து விடுவேன் என்றும், தேசத்தை இருண்ட காலத்துக்கு

நான் இழுத்துச் செல்வதாகவும், பலர் நினைக்கின்றனர். இந்தச் சிறிய குறிப்பில், காதியின் சார்பில் நான் வாதாடப் போவதில்லை. வேண்டிய அளவு ஏற்கனவே வாதாடியிருக்கிறேன். காதிக்கு ஊக்கம் அளிக்க ஒவ்வொரு காங்கிரஸ்காரரும், ஏன் ஒவ்வொரு இந்தியரும், என்ன செய்யலாம் என்பதை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். நாட்டின் பொருளாதார சுதந்திரத்தையும், எல்லோருக்கும் சம அந்தஸ்தையும் அது தொடங்கி வைக்கிறது. "சமையலின் நேர்த்தி சாப்பிட்டால்தான் தெரியும்". ஒவ்வொருவரும் கையாண்டு பார்க்கட்டும்; நான் சொல்வதன் உண்மையை அப்போது ஒவ்வொருவரும் தாமாகவே கண்டு கொள்வார். காதியின் உட்பொருளை அறிந்து அதை ஏற்றுக் கொள்ளவேண்டும். பூரண சுதேசி மனப்பான்மையை அது குறிக்கிறது; வாழ்க்கையின் அத்தியாவசியப் பொருட்களையெல்லாம் இந்தியாவிலேயே தயாரிக்க வேண்டும், அதுவும் கிராமவாசிகளின் உழைப்பையும் அறிவையும் கொண்டு தயாரிக்கவேண்டும் என்ற உறுதியை அது குறிக்கிறது. இப்போதைய முறையை மாற்றவேண்டும் என்பது இதன் அர்த்தம். அதாவது, இந்தியாவின் ஏழு லட்சம் கிராமங்களைச் சுரண்டி இந்தியாவிலும், பிரிட்டனிலும் உள்ள அரை டஜன் நகரங்கள் வாழும் நிலைமைக்குப் பதிலாக, அந்தக் கிராமங்கள் பெரும்பாலும் சுயநிறைவு பெற்று, இரு தரப்புகளுக்கும் நன்மை அளிக்கும் விதத்தில், நகரங்களுக்கும், வெளி உலகுக்கும் கூட, அவை (கிராமங்கள்) தம்மிச்சையாகச் சேவை செய்யும் நிலைமை ஏற்பட வேண்டும்.

பெரும்பாலான மக்களின் மனப்பான்மையில் புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டால்தான் இது சாத்தியமாகும். அஹிம்ஸை முறை பல அம்சங்களில் சுலபமானதுதான் என்றாலும், வேறு சில அம்சங்களில் மிகவும் கஷ்டமானதும் ஆகும். ஒவ்வொரு இந்தியரின் வாழ்க்கையின் அடிப்படையையும் அது பாதிக்கிறது;

இதுவரை தன்னுள் மறைந்து கிடந்த ஒரு சக்தியின் ஒளியை அவர் பெறுமாறு செய்கிறது; இந்திய மனித சமுத்திரத்தின் ஒவ்வொரு துளியிலும் தாம் கலந்திருப் பதன் பெருமையை அவர் பெறுமாறு செய்கிறது. அஹிம்ஸை என்றால் கையாலாகாதத்தனம் என்று பல சகாப்தங்களாக நாம் தவறாக நினைத்து வந்திருக்கிறோம்; ஆனால் மனிதவர்க்கம் இதுவரை அறிந்துள்ள சக்தி களுள் வீரியம் மிகுந்தது அது; மனிதவர்க்கம் உயிர் வாழ்வதே அதைப் பொறுத்துத்தான் இருக்கிறது. அந்தச் சக்தியைத்தான் காங்கிரஸுக்கும் அதன் மூலம் உலகத்துக்கும் வழங்க நான் முயன்று வந்துள்ளேன். இந்திய மக்களின் ஐக்கியம், பொருளாதார சுதந்திரம், சமத்துவம் ஆகியவற்றின் சின்னமாகக் காதியை நான் கருதுகிறேன். மற்றும், ஜவாஹர்லால் நேரு கவிதைப் பாணியில் குறிப்பிட்டதுபோல "இந்தியச் சுதந்திரத் தின் சீருடை" அது.

வாழ்க்கையின் அத்தியாவசியப் பண்டங்களின் உற்பத்தியையும் வினியோகத்தையும் பரவல் முறையில் அமைக்கவேண்டும் என்பது கதர் மனப்பான்மையின் பொருளாகும். ஆகவே, இதுவரை உருவாக்கப்பட் டுள்ள திட்டத்தின்படி, ஒவ்வொரு கிராமமும் தனக்கு வேண்டிய அத்தியாவசியப் பண்டங்கள் அனைத்தையும் தானே தயாரித்து உபயோகித்துக் கொள்வதுடன், நகரங்களின் தேவைக்காக ஒரு குறிப்பிட்ட சதவிகிதப் பண்டங்களை அதிகப்படியாகவும் உற்பத்தி செய்ய வேண்டும்.

கனரகத் தொழில்கள் குவியல் முறையில், தேசிய உடைமையாகத்தான் இருக்க முடியும் என்பது தெளிவு. ஆனால், தேச வியாபகமாகக் கிராமங்கள் அனைத்திலும் பரவலாக நடைபெறும் பொருளாதார நடவடிக்கையின் ஒரு சிறிய பகுதியாகவே அவை இருக்கும்.

உங்களுக்குச் சுதேசி உணர்ச்சி இருந்தால், உங்களுடைய முக்கியமான தேவைப் பொருட்களுக்கு மேற்கு நாடுகளை எதிர்பார்க்கமாட்டீர்கள் என்பதை முன்பே உங்களுக்கு நினைவு படுத்தியிருக்கிறேன். இப்போது இருப்பது போன்ற மிகவும் தட்டுப்பாடான நிலைமையில் உணவுப்பொருட்களையும் துணியையும் இந்தியா இறக்குமதி செய்வது பற்றி எனக்கு ஆட்சேபனை இல்லை. ஆனால் இந்த இரு முக்கிய தேவைகளை இந்தியாவிலேயே பெறுவது முற்றிலும் அசாத்தியம் என்றால்தான் இவ்வாறு தருவிக்கலாம். இது இன்னும் நிரூபிக்கப்படவில்லை. தன்னுடைய எண்ணற்ற கிராமங்களில் தனக்கு வேண்டிய காதி, உணவு ஆகியவை முழுதையும் இந்தியாவால் உற்பத்தி செய்து கொள்ள முடியும் என்பதை நான் தயக்கமின்றிச் சொல்லியிருக்கிறேன்; இப்போது மறுபடியும் சொல்லுகிறேன். ஆனால், தங்கள் சக்தியையே உணர முடியாத அளவுக்கு ஜனங்களுக்குச் சோம்பல் முற்றியிருக்கிறது; இந்த இரு தேவைகளையும் வெளிநாடுகளிலிருந்து பெறவேண்டும் என்று அவர்கள் பிடிவாதம் செய்கின்றனர். இந்த இரு தேவைகளுக்கும் மேற்கு நாடுகளை எதிர்பார்ப்பதைவிட நான் பட்டினியாகவும் நிர்வாணமாகவும் இருப்பதுமேல் என்றுகூடச் சொல்வேன். கடுமையான மன உறுதி இல்லாமல் சரியான காரியத்தைச் செய்யமுடியாது.

எளிமையான கிராம வாழ்வில்தான் சத்தியத்தையும் அஹிம்சையையும் நாம் உணரமுடியும்...... இன்றைய உலகம் தவறான வழியில் சென்றால் அது குறித்து நான் அஞ்சக்கூடாது. இந்தியாவும் அந்த வழியில் செல்லக்கூடும். பழமொழியில் வரும் விட்டில் பூச்சியைப்போல அது எந்தச் சுடரைச் சுற்றி ஆவேசமாக நர்த்தனமிடுகிறதோ அந்தச் சுடரிலேயே விழுந்து

அழியக்கூடும். ஆனால் இத்தகைய நாசம் ஏற்படாதபடி, என் கடைசி மூச்சுள்ளவரை, இந்தியாவையும், இந்தியாவின் வாயிலாக உலகத்தையும் காப்பாற்று வதற்குப் பாடுபடுவது என்னுடைய கடமையாகும்.

கிராம சுயராஜ்யம் பற்றிய என்னுடைய கருத்தின் படி, கிராமம் ஒரு பரிபூரண குடியரசாக இருக்கும்; தன்னுடைய அத்தியாவசியத் தேவைகளுக்கு அண்டை அயலாரைச் சார்ந்திருக்காது; ஆனால் அவசியமான வேறுபல விஷயங்களுக்கு மற்றவர்களை அது சார்ந்திருக் கும். ஆகவே, தனக்கு வேண்டிய உணவுப்பொருட் களையும், தன்னுடைய உடைத் தேவைக்கு வேண்டிய பருத்தியையும் விளைவிப்பது ஒவ்வொரு கிராமத்துக்கும் முதல் கடமையாக இருக்கும். தன்னுடைய கால் நடைகள் மேய்வதற்கும், குழந்தைகள், பெரியவர்கள் ஆகியோர் விளையாடுவதற்கும், பொழுது போக்குவதற் கும் வேண்டிய இடத்தை அது ஒதுக்கி வைத்திருக்கும். மேற்கொண்டு நிலம் இருந்தால், பயனுள்ள ரொக்க மகசூல்களை அது விளைவிக்கும்; ஆனால் புகையிலை, அபினி போன்ற பொருட்களை இவ்வாறு பயிரிடாது. சுத்தமான குடி தண்ணீர் வினியோகத்துக்கு அது சொந்தமான வசதிகளைச் செய்துகொள்ளும். கிணறுகளையும் குளங் களையும் கண்காணிப்பில் வைத்துக் கொள்வதன் மூலம் இதற்கு ஏற்பாடு செய்யலாம். ஆதாரக் கல்வியின் இறுதிக் கட்டம்வரை கட்டாயக் கல்வி போதிக்கப் படும். கூடுமானவரை எல்லாக் காரியங்களும் கூட்டுறவு முறையில் நடத்தப்படும். பலதரப்பட்ட தீண்டாமை யுடன் இன்று காணப்படும் சாதிகள் அங்கு இருக்க மாட்டா. சத்தியாக் கிரகம், ஒத்துழையாமை என்ற செயல்முறையுடன் கூடிய அஹிம்ஸைதான் கிராம சமுதாயத்தினுடைய அதிகாரத்தின் பின்பலமாக இருக் கும். கிராமக் காவலாளர்களாக எல்லோரும் கட்டாய

மாகச் சேவை செய்ய வேண்டியிருக்கும்; கிராமப் பதிவுப் புத்தகத்தில் குறிக்கப்பட்டுள்ள நபர்கள் மாற்றி மாற்றி இப்பொறுப்பை ஏற்றுக் கொள்வர். ஐந்து நபர்களைக் கொண்ட பஞ்சாயத்து சபை கிராம ஆட்சியை நடத்தும்; குறைந்தபட்ச யோக்கியதாம்சங் களைக் கொண்ட, வயதுவந்த ஆண் பெண்கள் அனைவரும் இந்த ஐவரை ஓராண்டுக் காலத்துக்குத் தேர்ந் தெடுப்பர். பஞ்சாயத்துக்குப் போதிய அதிகாரமும் பிரதேசமும் இருக்கும். சாதாரண தண்டனை முறைகள் இருக்கமாட்டா என்பதால், இந்தப் பஞ்சாயத்தே சட்டமன்றமாகவும், நீதி மன்றமாகவும் நிர்வாகக் குழுவாகவும் ஓராண்டுக் காலத்துக்குச் செயல், புரியும்...... அண்டைக் கிராமங்களுடனும், ஏதாவது மத்திய அமைப்பு இருந்தால் அதனுடனும் இந்தக் கிராமத்தின் உறவுமுறை எப்படி இருக்கவேண்டும் என்பது பற்றி இங்கு நான் ஆராயவில்லை. கிராம ஆட்சிக்கான ஒரு திட்டத்தைப் பொதுப்படையாகக் குறிப்பிடுவதுதான் என்னுடைய நோக்கம். தனிநபர் சுதந்திரத்தை ஆதாரமாகக் கொண்ட பரிபூரண ஜனநாயகம் இதில் அடங்கியிருக்கிறது. தனிநபரே தம்முடைய அரசாங்கத்தை உருவாக்குவார். அவரை யும் அவருடைய சர்க்காரையும் அஹிம்சைச் சட்டம் ஆளுகிறது. உலகம் முழுவதன் வல்லமையையும் எதிர்த்து நிற்கும் ஆற்றல் அவருக்கும் அவருடைய சர்க் காருக்கும் உண்டு. ஏனெனில் ஒவ்வொருவரும் தம் முடைய மானத்தையும் தமது கிராமத்தின் மானத் தையும் காப்பதற்காக உயிரைவிடுவதற்குத் தயாராய் இருப்பார் என்ற நியதி ஒவ்வொரு கிராமவாசியையும் கட்டுப்படுத்துகிறது.

**எண்ணற்ற கிராமங்களைக் கொண்ட இந்த அமைப் பிலே ஒன்றன்மேல் ஒன்றான வட்டங்கள் இருக்க**

மாட்டா, ஒன்றை அடுத்து ஒன்றாக விரிந்து கொண்டே போகும் வட்டங்கள்தாம் இருக்கும். உச்சியை அடித் தளம் தாங்கும் விதத்தில் மேல்நோக்கிக் குறுகிக் கொண்டே போகும் கோபுரமாக வாழ்வு அமைந்திருக் காது. நீர்ப்பரப்பு வட்டம்போல் அது இருக்கும்; தனி நபர் அதன் மைய ஸ்தானமாக இருப்பார்; கிராமத்துக் காக உயிரை விடுவதற்கு அவர் தயாராய் இருப்பார். பல கிராமங்கள் சேர்ந்த வட்டத்துக்காகத் தன்னைப் பலியிடத் தனிப்பட்ட கிராமம் தயாராய் இருக்கும். அகம்பாவம் இல்லாதவர்களும், பணிவு உள்ளவர்களும், தங்களை உறுப்பினர்களாகக் கொண்ட பெரும் வட்டத் தின் காம்பீர்யத்தில் பங்குள்ளவர்களாகவும் இருக்கும்; தனிநபர்கள் அடங்கிய ஒரே வாழ்க்கை அமைப்பாக அது இறுதியில் விளங்கும். ஆகவே கடைசி வெளி வட்ட மானது உள்வட்டத்தை நசுக்குவதற்குத் தன்னுடைய அதிகாரத்தை உபயோகிக்காது; மாறாக, தன்னுள் அடங்கிய வட்டங்களுக்கெல்லாம் அது வலிமை அளித்து அவைகளிடமிருந்து தானும் பலம்பெறும்...... இதில், முதல்வரும் இல்லை கடையரும் இல்லை...... தன்னுடைய தேவை என்ன என்பதை ஒவ்வொரு ஆணும் பெண்ணும் அறிந்திருப்பார்; தம்மளவு உழைக்கின்ற மற்றவர் களுக்குக் கிடைக்காத எதையும் தாம் விரும்பக் கூடாது என்பதை ஒவ்வொருவரும் அறிந்திருப்பார் என்பது அதைவிடவும் முக்கியமானது.

இந்தியக் கிராமவாசியினிடம், அவருடைய முரட்டுத் தனத்தின் உள்ளே, பழம்பெரும் பண்பாடு பதுங்கி யிருக்கிறது.... முரட்டுத் தோட்டின் உள்ளே ஆழமான ஆன்மிக நீர்த்தேக்கத்தை நீங்கள் காணலாம். மேற்கு நாடுகளில் இத்தகைய அம்சத்தை நீங்கள் காண முடியாது. அவருடைய இந்த மேல் தோட்டை நீக்கி னால், அவருடைய நீண்டகால வறுமையை நீக்கினால்,

எழுத்தறிவின்மையை நீக்கினல், கலாசாரமும் பண்பும் சுயேச்சையும் வாய்ந்த பிரஜைக்கு உன்னதமான ஓர் எடுத்துக் காட்டாக அவர் விளங்குவார்.

* * * *

## 4. ஜனநாயகம்

சுதந்திரத்தின் மிக உயர்ந்த உருவிலே மிகப் பெரிய கட்டுப்பாடும் பணிவும் அடங்கியிருக்கின்றன. கட்டுப்பாடு, பணிவு ஆகியவற்றிலிருந்து விளையும் சுதந்திரத்தை யாராலும் மறுக்க முடியாது. ஆனல், கட்டுப்பாடற்ற தரிகெட்ட நடத்தையானது ஆபாசத்தின் அறிகுறியாகும்; அண்டை அயலாருக்கு மாத்திரமன்றி, அவ்வாறு நடப்பவருக்கும் அது தீங்கு விளைவிக்கும்.

பிறவியிலேயே ஜனநாயகவாதியாக இருப்பவர், பிறவியிலேயே கட்டுப்பாடுவாதியாகவும் இருப்பார். எல்லா மனித நியதிகளுக்கும் தெய்விக நியதிகளுக்கும் தம்மிச்சையாகப் பணிந்து நடக்கும் வழக்கத்தைக் கொண்டவரிடம் ஜனநாயகம் இயல்பாகவே இருக்கும். உள்ளுணர்வினலும், பயிற்சியினலும் நான் ஒரு ஜனநாயகவாதி என்று உரிமை கொண்டாடுகின்றேன். ஜனநாயகத்துக்குத் தொண்டாற்ற விரும்புபவர்கள்

முதலில் ஜனநாயகத்தின் இந்த அக்கினிப் பரீட்சையில் தேறவேண்டும். அதோடு, சுயநலமற்றவராகவும் ஜனநாயகவாதி இருக்கவேண்டும். தம் நலனேயோ கட்சி நலனேயோ அவர் சிந்திக்காமல் ஜனநாயகத்தின் நலனைப் பற்றி மாத்திரமே சிந்திக்க வேண்டும். அப்போதுதான் சட்டமறுப்புச் செய்வதற்கான உரிமையை அவர் பெறுகிருர். எவரும் தம்முடைய கோட்பாடுகளைக் கைவிடவேண்டும் என்ருே, தம்மை ஒடுக்கிக்கொள்ள வேண்டும் என்ருே நான் சொல்லவில்லை, ஆரோக்கிய மான, நேர்மையான கருத்து வேற்றுமை காரணமாக நம்முடைய இலட்சியத்துக்குத் தீங்கு நேரிடுமென்று நான் நினைக்கவில்லை. ஆனால் சந்தர்ப்பவாதம், வெளி வேஷம், ஒட்டுப்பிளாஸ்திரிச் சமரசங்கள் ஆகியவை இலட்சியத்துக்கு நிச்சயமாகத் தீங்கு இழைக்கும். கட்சியின் நலனுக்கான சந்தர்ப்பவாதக் கூச்சலாக அல்லாமல், உங்கள் இதயபூர்வமான நம்பிக்கைகளை உங்கள் அபிப்பிராயங்கள் பிரதிபலிப்பதாக உங்களுக்கு உறுதி ஏற்பட்ட பின்னர்தான் நீங்கள் இவ்வாறு மாறு பட்ட அபிப்பிராயங்களை வெளியிடலாம்.

தனிநபர் சுதந்திரத்தை நான் போற்றுகிறேன்; ஆனால் அடிப்படையில் மனிதன் ஒரு சமூக உறுப்பினன் என்பதை நீங்கள் மறக்கக்கூடாது. சமூக முன்னேற்றத் தின் தேவைகளுக்கு ஏற்பத் தம்முடைய தனித்து வத்தைக் கட்டுப்படுத்திக்கொள்ளக் கற்றுக் கொண்ட தன் மூலமே அவன் இப்போதைய நிலைக்கு உயர்ந்திருக் கிருன். தனி நபர் சுதந்திரம், சமூகக் கட்டுப்பாடு ஆகியவற்றுக்கு நடுப்பட்ட ஒரு வழியைக் காண்பதற்கு நாம் தெரிந்து கொண்டிருக்கிருேம். சமூகம் முழுவதன் நலனை உத்தேசித்து சமூகக் கட்டுப்பாட்டுக்குத் தனிநபர் தம்மிச்சையாக உட்படுவது அவரையும், அவரை ஒரு உறுப்பினராகக் கொண்ட சமூகத்தையும் வளப்படுத்து கிறது.

அபாயங்களைத் தன்னகத்தே கொண்டிராத மனித நிறுவனம் எதுவுமே இல்லை; நிறுவனம் எவ்வளவு பெரியதாக இருக்கிறதோ அந்த அளவுக்குக் கெட்டுப் போகும் வாய்ப்புகளும் அதிகமாக இருக்கும். ஜனநாயகம் ஒரு பெரிய நிறுவனம்; ஆகவே அதைப் பெரிதும் துஷ்பிரயோகம் செய்ய முடியும். ஜனநாயகத்தை விலக்குவது இதற்குப் பரிகாரம் அல்ல; துஷ்பிரயோகச் சாத்தியத்தைப் பெரிதும் குறைப்பது தான் பரிகாரம்.

பல்வேறு மக்கட் பிரிவினரின் ஸ்தூல, பொருளாதார, ஆன்மிகச் சாதனங்கள் அனைத்தையும் ஒன்றுதிரட்டி எல்லோருடைய பொது நன்மைக்கும் பயன்படுத்துவது தான் ஜனநாயக விஞ்ஞானம், ஜனநாயகக் கலை.

அரசியல் தொடர்பு இல்லாமல் சமூகத் தொண்டு கூடச் செய்ய முடியவில்லை என்பதை உணர்ந்த பிறகு நான் அரசியல் துறையில் ஈடுபட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. சமூக, தார்மிக முன்னேற்றத்துக்கு எந்த அளவுக்குப் பயன்படுகிறது என்பதைக் கொண்டே அரசியல் பணியை மதிப்பிட வேண்டும் என்பது என் கருத்து. ஜனநாயகத்திலே அரசியல் கலப்பற்ற வாழ்க்கைத் துறை எதுவுமே கிடையாது.

அசத்தியமான, பலாத்காரமான வழியில் உண்மையான ஜனநாயகம் அல்லது வெகுஜன சுதந்திரம் ஏற்பட முடியாது. ஏனெனில் இந்த வழியைக் கையாளும்போது,

அதன் இயற்கை விளைவாக, ஒடுக்குவதன் மூலமோ ஒழிப்பதன் மூலமோ மாற்றுக் கட்சியினர் அனைவரும் நீக்கப்படுவர். இது தனிநபர் சுதந்திரமாகாது. கலப்பற்ற அஹிம்ஸையின் ஆட்சியில்தான் தனிநபர் சுதந்திரம் முழு அளவுக்குச் செயல்பட முடியும்.

ஜனநாயகத்திலே, வலிமை மிகுந்தவருக்குச் சமமான வாய்ப்பு வலிமையற்றவருக்கும் கிடைக்க வேண்டும்; ஜனநாயகம் பற்றிய என்னுடைய கருத்து இதுதான். அஹிம்ஸையின் வாயிலாக அன்றி வேறு எவ்வழியிலும் இது ஏற்பட முடியாது. நலிந்தவர்களிடம் வள்ளல் மனப்பான்மை காட்டுவதற்கு மேல் வேறு எதையும் இப்போது உலகின் எந்த நாடும் செய்வதில்லை.

அதிகாரத்தில் எல்லோருக்கும் பங்கு கிடைக்கும் வரை ஜனநாயகம் ஏற்படமுடியாது; ஆனால் வெறிக் கூட்டத்தின் ஆட்சியாக ஜனநாயகம் நசித்து விடவும் கூடாது. நீங்கள் பிழைப்புத் தேடிக் கொள்வதற்கு உதவுகின்ற ஒரு 'பறையர்' கூட, தொழிலாளி கூட, சுய ஆட்சியில் தமக்குரிய பங்கைப் பெறவேண்டும். ஆனால் நீங்கள் அவர்களுடைய வாழ்வில் சிரத்தை கொள்ள வேண்டும், அவர்களுடைய வாழ்விடங்களுக்கு நீங்கள் சென்று எத்தகைய வலைகளில், மீன் கூட்டம் போல், அவர்கள் அடைந்து கிடக்கிறார்கள் என்பதைப் பார்க்க வேண்டும். மனித இனத்தின் ஒரு பாகமான இவர்களின் நலனைக் கவனிப்பது உங்கள் பொறுப்பு. அவர்களுடைய வாழ்வை உருவாக்குவதோ உருக்குலைப்பதோ உங்கள் கையில் இருக்கிறது.

இந்த மனிதக் கூட்டத்தினரின் இதயம் பொன் போன்றது, நாட்டின் நலனை நினைப்பவர்கள் இவர்கள் ; தங்களுக்கு மற்றவர்கள் போதனை அளித்து வழி காட்ட வேண்டும் என்று இவர்கள் விரும்புகின்றனர். இவர்களுக்கு நாம் பயிற்சி அளிக்கத்தான் வேண்டும். புத்தி சாலித்தனமும் அந்தரங்கசுத்தியும் வாய்ந்த ஒருசில ஊழியர்கள்தாம் இதற்குத் தேவை ; அப்போது தேசிய சமுதாயம் முழுதையும் புத்திசாலித்தனமாக நடக்கச் செய்து, வெறிக் கூட்டத்தின் நாயகத்துக்குப் பதில் ஜனநாயகத்தை உருவாக்க முடியும்.

உண்மையான ஜனநாயக உணர்வை வளர்ப்பதற்கு நாம் விரும்பினால், சகிப்பின்மைக்கு இடம் கொடுக்க முடியாது. ஒருவருக்குத் தம்முடைய இலட்சியத்தில் நம்பிக்கை இல்லை என்பதைத்தான் அவருடைய சகிப்பின்மை அம்பலப்படுத்துகிறது.

எதிர்த்தரப்பின் வாதத்தைக் கேட்க நாம் இசையாவிடில் ஜனநாயகத்தை உருவாக்க முடியாது. எதிர்ப்பாளர்களின் கருத்தைக் கேட்க நாம் மறுக்கும்போது, அல்லது கேட்டுவிட்டு ஏளனம் செய்யும்போது, பகுத்தறிவின் வாசலை நாம் மூடுகிறோம். சகிப்பின்மையே வழக்கமாகிவிட்டால், சத்தியம் நம் கையிலிருந்து நழுவிவிடக்கூடும். நம்முடைய அறிவுக்கு இயற்கை விதித்துள்ள வரம்புக்கு உட்பட்டு, நமக்குத் தெரிந்த அளவுக்கு, பயமில்லாமல் நாம் செயல்புரியவேண்டும், ஆனால் நாம் சத்தியம் என்று நினைத்தது அசத்தியமே என்று பின்னர் நிரூபிக்கப்படலாம் என்பதை ஏற்பதற்கு நாம் எப்போதும் திறந்த மனத்துடன் தயாராய் இருக்கவும் வேண்டும். இந்தத் திறந்த மனப்பான்மையானது நம்மிடம் இருக்கும் சத்தியத்தைப் பலப்

படுத்தி, அதில் கலந்திருக்கக்கூடிய அசுத்தத்தை அகற்றுகிறது.

சரியான முடிவுக்கு வரும் ஏகபோக உரிமை தனக்குத்தான் உண்டு என்று சிந்தனையாளர்களின் கோஷ்டி எதுவும் உரிமை கொண்டாட முடியாது என்பதை நான் பலமுறை சொல்லியிருக்கிறேன். நாம் எல்லோருமே தவறு செய்பவர்கள்தாம்; நம்முடைய முடிவுகளை எத்தனையோ முறை மாற்றிக்கொள்ள வேண்டியிருக்கிறது. நம்முடையது போன்ற பெரிய தொரு நாட்டிலே நேர்மையான எல்லாக் கருத்துப் பிரிவுகளுக்கும் இடம் இருக்க வேண்டும். ஆகவே எதிர்த்தரப்பினரின் கருத்தைப் புரிந்து கொள்ள நாம் முயலவேண்டும்; அதை ஏற்றுக் கொள்ள நம்மால் முடியாவிடில், நம் கருத்தை அவர் மதிக்க வேண்டும் என்று நாம் எதிர்பார்ப்பது போலவே அவருடைய கருத்தையும் நாம் மதிக்கவேண்டும்—குறைந்தபட்சம் இவ்வாறு நாம் நடந்துகொள்வது நம்மிடமும் பிறர் பாலும் நமக்குள்ள கடமையாகும்.

மத்திய சர்க்காரில் இருபது பேர் உட்கார்ந்து கொண்டு உண்மையான ஜனநாயகத்தைச் செயல் படுத்த முடியாது. கீழேயிருந்து, ஒவ்வொரு கிராமத் தின் மக்களும் அதை அமல் நடத்த வேண்டும்.

எல்லா ஜனங்களுக்கும் பிரதிநிதியாக இருப்பதன் காரணமாக மாத்திரம் ஒரு சர்க்கார் முற்றிலும்

அஹிம்ஸைச் சர்க்காராக உருவாகிவிடமுடியாது. அத்தகைய பொற்காலத்தை இன்றைய நிலைமையில் என்னால் உருவகித்துக் கொள்ள முடியவில்லை. ஆனால் பெரும்பாலும் அஹிம்ஸா பூர்வமாக உள்ள சமுதாயம் ஏற்படுவது சாத்தியமே என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அதற்காக நான் பாடுபட்டுக் கொண்டுமிருக்கிறேன்.

அரசாங்கம் என்ற சிக்கலான இயந்திரத்தைப் பெரும்பாலான ஜனங்கள் புரிந்து கொள்வதில்லை ஒவ்வொரு பிரஜையும் மௌனமாக, ஆனால் நிச்சயமாக, தம் சர்க்காருக்குத் தம்மையறியாமலே ஆக்கம் அளிக்கிறார் என்பதை ஜனங்கள் தெரிந்துகொள்வதில்லை. அரசாங்கத்தின் செய்கைகள் தாங்கக்கூடியவையாக இருக்கும்வரை இவ்வாறு ஆதரவு அளிப்பது சரியே. ஆனால் அவை பிரஜைக்கோ அவருடைய தேசத்துக்கோ துன்பம் விளைவிக்கும்போது, தம்முடைய ஆதரவை நிறுத்திவிடுவது அவருடைய கடமையாகும்.

அரசின் அதிகாரம் அதிகரிக்கும் போதெல்லாம் எனக்கு மிகுந்த அச்சம் ஏற்படுகிறது. ஏனெனில், சுரண்டலைக் குறைப்பதன் மூலம் அது நன்மை செய்வதாகத் தோன்றினாலும், தனிமனித சுதந்திரத்தை அழிப்பதன் வாயிலாக அது மனித வர்க்கத்துக்கு மிகுந்த தீமையே செய்கிறது. முன்னேற்றத்துக்கெல்லாம் ஆணிவேராக இருப்பது தனி மனித சுதந்திரம்தான்.

தனிமனிதர் எவ்வளவு தாழ்ந்த அந்தஸ்தில் இருந்தாலும் அவருக்கு நீதி வழங்குவதுதான் சர்வமுக்கியத்துவம் வாய்ந்தது என்பது என்னுடைய கருத்து. மற்றவையெல்லாம் அதற்குக் கீழ்ப்பட்டவையே.

தனி நபருக்கு முக்கியத்துவம் இல்லையென்றால், பிறகு சமூகத்தில் என்ன எஞ்சியிருக்கிறது ? தனிமனித சுதந்திரம் இருந்தால்தான் ஒருவர் சமூக சேவைக்குத் தம்மை இஷ்டபூர்வமாய் அர்ப்பணித்துக் கொள்ள முடியும். இந்த சுதந்திரத்தை அவரிடமிருந்து பறித்துக் கொண்டால் அவர் வெறும் இயந்திரமாகிவிடுகிறார், சமூகமும் நாசமாகிவிடுகிறது. தனி மனித சுதந்திர மறுப்பை ஆதாரமாகக் கொண்டு எந்த ஒரு சமுதாயத்தையும் நிருமாணிப்பது சாத்தியமல்ல.

தனி நபர்களுடைய சுயராஜ்யத்தின் மொத்தக் கூட்டெண்தான் நாட்டு மக்களின் சுயராஜ்யமாகும். பிரஜைகள் என்ற முறையில் தனி நபர்கள் தங்கள் கடமையைச் செய்வதன் வாயிலாகவே இந்தச் சுயராஜ்யம் கிடைக்கிறது. அதிலே எவரும் தம்முடைய உரிமைகளைப் பற்றி நினைப்பதில்லை. கடமையை முன்னிலும் நன்றாகச் செய்வதற்காகத்தான், தேவைப்படும்போது, உரிமைகள் வருகின்றன.

தம்முடைய கடமைகளைச் சரிவரச் செய்பவரிடம் உரிமைகள் தாமாகவே வந்து சேருகின்றன. தம்முடைய கடமைகளைச் செய்யும் உரிமைதான் ஒருவ

ருடைய மிகச் சிறந்த உரிமை ; அதற்காகவே அவர் உயிர்வாழவோ உயிரைக் கொடுக்கவோ வேண்டும். நியாயமான மற்ற எல்லா உரிமைகளும் அதில் அடங்கியிருக்கின்றன. மற்றவையெல்லாம் போலி வேடம் தரித்த சுரண்டல்தான் ; அவற்றில் ஹிம்ஸையின் வித்துக்கள் உள்ளன.

உரிமைகளின் உண்மையான ஊற்றுக்கள் கடமைதான். நாம் எல்லோரும் நம்முடைய கடமைகளை நிறைவேற்றினால் உரிமைகளைத் தேடி அலையவேண்டியதில்லை. கடமைகளை நிறைவேற்றாமல் உரிமைகளைத் துரத்திக்கொண்டு ஓடினால் அவை நம் கையில் சிக்காமல் சிட்டாய்ப் பறந்துவிடும். எவ்வளவு அதிகமாகத் துரத்துகிறோமோ அவ்வளவு அதிகமான தூரத்துக்கு அவை பறந்தோடிவிடும். "கர்மம் புரிவதுதான் உன் கடன். கர்மத்தின் பலனைப்பற்றி யோசிக்கவே செய்யாதே," என்று கிருஷ்ணர் கூறிய சிரஞ்சீவிச் சொற்களில் இதே யோசனைதான் அடங்கியிருக்கிறது. கர்மம் என்பது கடமை, பலன் என்பது உரிமை.

மேலேயிருந்து திணிக்கப்படும் அதிகாரத்துக்குப் போலீஸ், ராணுவம் ஆகியவற்றின் உதவி எப்போதுமே தேவைப்படுகிறது. உள்ளேயிருந்து தோன்றும் அதிகாரத்துக்கு இவற்றினால் அதிக உபயோகம் இல்லை, அல்லது உபயோகமே இல்லை.

அதிகாரம் இரண்டு வகைப்படும். தண்டனைப் பயத்தின் மூலம் பெறப்படுவது ஒன்று, அன்பு வழியில் பெறப்படுவது மற்றொன்று. தண்டனைப் பயத்தை

ஆதாரமாகக் கொண்ட அதிகாரத்தைவிட அன்பை ஆதாரமாகக் கொண்ட அதிகாரம் ஆயிரம் மடங்கு அதிகச் சக்தி வாய்ந்தது, நிரந்தரமானது.

நம்முடைய குழந்தைகள் மீது தந்தைக்கு அதிகாரம் இருக்கிறது; அவர்களை அவர் தண்டிக்கவும் கூடும். ஆனால், பலாத்கார முறையில் தண்டிப்பதில்லை. மிகக் குறைவான கஷ்டத்தை ஏற்படுத்துகின்ற அதிகாரப் பிரயோகம்தான் மிக அதிகமான சக்தி வாய்ந்தது. சரியான முறையில் பிரயோகிக்கப்படும் அதிகாரமானது மலர்போல மென்மையாக இருக்கவேண்டும், அதன் பளுவை யாரும் உணரும்படியாக இருக்கக் கூடாது.

'மிகப் பெரும்பாலோருக்கு மிக அதிகமான நன்மை பயப்பது' என்ற சித்தாந்தத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. இதைப் பச்சையாகச் சொல்வதென்றால், 51 சதவிகிதத்தினருக்கு நன்மை என்று தோன்றுவதைச் செய்வதற்காக, மற்ற 49 சதவிகிதத்தினரைப் பலியிடலாம், அல்லது பலியிட வேண்டும் என்று ஆகிறது. இது நெஞ்சிரக்கமற்ற சித்தாந்தம், மனித குலத்துக்கு இது தீமை இழைக்கிறது. எல்லோருக்கும் மிக அதிகமான நன்மை பயப்பது என்பதுதான் உண்மையான, கௌரவமான, மனிதப் பண்புக்கு ஏற்ற சித்தாந்தமாகும். பூரணமான தந்நலத் தியாகத்தின் வாயிலாகவே இதைச் சாதிக்க முடியும்.

மக்களின் கூட்டு முயற்சியின் மூலம் கோரிய பலன்களைப் பெறுவது ஜனநாயக யுகத்துக்கு அத்தியா

வசியமானது. மகோன்னத ஆற்றலைக் கொண்ட ஒரு தனிநபரின் முயற்சி மூலம் ஒரு குறிக்கோளைச் சாதிப்பது நல்லது என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் சமுதாயம் தன்னுடைய கூட்டு வலிமையை உணர்வதற்கு அது ஒரு காலும் வழி செய்யாது. கோடீசுவரர் ஒருவர், பட்டினி கிடக்கும் கோடிக்கணக்கான ஜனங்களுக்கு இலவச உணவு அளிப்பது போன்றதுதான் அந்தத் தனி நபரின் சாதனை......ஆகவே, நிருமாணத் திட்டத்தை நிறைவேற்றுவதில் நாம் முழுமூச்சுடன் ஈடுபடவேண்டும்.

கோடிக்கணக்கான ஜனங்கள் ஒன்று சேர்ந்து செய்யக்கூடிய எந்தக் காரியத்துக்கும் ஒரு அலாதிச் சக்தி ஏற்பட்டுவிடுகிறது.

விலைவாசிகள் வேகமாக உயர்வது என்ற பூச்சாண்டியைக் கண்டு நான் அஞ்சுவதில்லை. நம் மிடையே சுறுமீன்கள் இருந்து, அவைகளை எதிர்த்துப் போராடும் வழியும் நமக்குத் தெரியவில்லை என்றால், அவை நம்மை விழுங்குவதில் தவறில்லைதான். அவைகளை எதிர்த்துப் போராடும்போதுதான், கடும் கஷ்டத்தின் மத்தியில் நாம் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதைத் தெரிந்து கொள்வோம். உண்மையான ஜனநாயகத்தைப் புத்தகங்களிலிருந்து ஜனங்கள் அறிந்து கொள்ள முடியாது; பெயரளவிலும் உண்மையாகவும் தங்கள் ஊழியர்களாக உள்ள சர்க்காரிடமிருந்தும் அவர்கள் அதைக் கற்றுக்கொள்ள முடியாது, கஷ்டமான அனுபவம்தான் ஜனநாயகத்தில் மிகச் சிறந்த ஆசானாகும்.

ஜனநாயகத்தில் பயத்துக்கு இடமில்லை. பொது ஜனங்கள் ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் நம்பிக்கை கொண்டு, அது வேண்டும் என்று விரும்பினால், அவர் களுடைய பிரதிநிதிகள் அந்தக் கோரிக்கைக்கு உருக் கொடுத்து அதை நிறைவேற்றத்தான் வேண்டும். ஜனங்கள் ஆண்மையுடன் அளிக்கும் ஆதரவு எத்தனையோ போராட்டங்களில் வெற்றி கிடைப்ப தற்குப் பெரிதும் உதவியிருக்கிறது.

சுயராஜ்யம் கிடைத்துவிட்டதால் நாம் விசிராந்தி யாக உட்காரலாம் என்று நாம் நமக்குள் சொல்லிக் கொண்டால், தேசத்துக்கு மிகப்பெரிய தீங்கு செய்தவர் களாவோம்......இதுவரை மக்களின் சக்தியெல்லாம் பிரிட்டிஷாரை எதிர்த்துப் போராடுவதில் ஈடுபட்டி ருந்தது. நாடு வலிமையும் சுபிட்சமும் பெறுவதற்காக இப்போது அந்தச் சக்தியைப் பயன்படுத்தவேண்டும்; இல்லாவிடில் அது நம்மீதே சாடி, பிணக்கையும் சீர் குலைவையும் ஏற்படுத்தும்.

சுதந்திரத்தை அனுபவிக்க ஜனங்கள் ஆசைப் பட்டால் தாமாகவே கட்டுப்பாட்டுடன் நடக்கும் இரகசியத்தை அவர்கள் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். இல்லாவிடில் அதிகாரத்தில் உள்ளவர்கள் அவர்கள் மீது கட்டுப்பாட்டை விதிக்க வேண்டி யிருக்கும். அது சுதந்திரம் அல்ல, சுதந்திரத்துக்கு எதிரானதே. ஒவ்வொரு ஜன சமுதாயமும் தனது தகுதிக்கு ஏற்ற அரசாங்கத்தைத்தான் பெறுகிறது. ஜனங்கள் காலித்தனத்தில் ஈடுபட்டால் சட்டம்— ஒழுங்கு என்பதன் பெயரால் சர்க்காரும் அதன்

அதிகாரிகளும் அதே காலித்தனத்தில் இறங்குவர். இதன் விளைவு சுதந்திரமாகவோ விடுதலையாகவோ இருக்காது; இரு அராஜகங்கள் ஒன்றையொன்று கட்டுப்படுத்துவதாகவே இருக்கும். இஷ்டபூர்வமான கட்டுப்பாடுதான் கூட்டுச் சுதந்திரத்தின் முதல் தேவை. மக்கள் ஒழுங்காக நடந்து கொண்டால் சர்க்கார் அதிகாரிகள் அவர்களுடைய உண்மை ஊழியர்களாகப் பணிபுரிவர். இல்லையேல், அவர்கள் எவ்வித நியாயமும் இல்லாமல் மக்களின் தோள்மேல் சவாரி செய்வர்.

தலைவர்களும் தொண்டர்களும் குறித்த நேரத்தில் காரியங்களைக் கண்டிப்புடன் செய்து வந்தால் தேசிய இலட்சியத்துக்குத் திட்டவட்டமான ஆதாயம் கிடைக்கும். எந்த நபரும் உண்மையாகத் தம்மால் முடிந்ததற்கு அதிகமான காரியங்களைச் செய்யவேண்டும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. ஒரு நாளின் இறுதியில் வேலை எஞ்சியிருந்தால், அல்லது உணவையோ, தூக்க நேரத்தையோ, பொழுதுபோக்கு நடவடிக்கைகளையோ தியாகம் செய்யாமல் அவ்வேலையை முடிக்க முடியாது என்றால், எங்கோ கோளாறு இருக்கிறது என்றுதான் அர்த்தம். ஒரு திட்டத்தின்படி, குறித்த நேரத்தில் காரியங்களைச் செய்யும் பழக்கத்தை நாம் ஏற்படுத்திக் கொண்டால், தேசிய சமுதாயத்தின் செயல்திறன் உயரும்; நம்முடைய குறிக்கோளை நோக்கி நாம் அதி வேகமாக முன்னேறலாம். ஊழியர்கள் இப்போதை விட அதிக ஆரோக்கியத்துடன் நீண்டகாலம் வாழலாம்— இதுபற்றி எனக்குச் சந்தேகமே இல்லை.

நம்முடைய ஒழுக்கத் தரங்கள் தாழ்ந்துகொண்டு போகும் வேகத்தைப் பார்க்கும்போது, முன்பு நாம்

நடத்திய சத்தியாக்கிரகப் போர்களில் உண்மையான கருப்பொருள் ஏன் காணப்படவில்லை என்பதும், பலவீனர்களில் சாத்துவிக எதிர்ப்பு என்ற இழிநிலையை அவை ஏன் அடைந்தன என்பதும் இப்போது எனக்குப் புலனாகின்றன.

"நல்லவனாக இருக்கவும், எல்லாச் சந்தர்ப்பங்களிலும் நன்மை செய்யவும் ஆசைப்படுகின்ற ஒருவன் அதிகார பீடத்தில் அமரக்கூடாது."

அரசாங்கப் பணம் இந்தியாவின் ஏழைப் பொது மக்களுக்கு சொந்தமானது; அவர்களை விட வறிஞர்கள் எவரும் இந்த உலகத்தில் இல்லை. நாம் அதிக விழிப்புடனும், அதிகக் கவனத்துடனும், அதிக ஜாக்கிரதையுடனும் இருக்க வேண்டும். பொது ஜனங்களிடமிருந்து நாம் பெறுகின்ற ஒவ்வொரு தம்பிடிக்கும் கணக்குக் கொடுக்க நாம் தயாராய் இருக்கவேண்டும்.

கணக்குகளைக் கவனமாக எழுதிவைப்பது எந்த ஒரு ஸ்தாபனத்துக்கும் முதற் கடமையாகும். முறையான கணக்குகள் இல்லாமல் பரிசுத்தமான சத்தியத்தைக் கடைப்பிடிக்க முடியாது.

நாம் பெறுகின்ற ஒவ்வொரு தம்பிடிக்கும் கணக்குக் கொடுக்காவிட்டால், நிதிகளைக் கவனமாக உபயோ

கிக்காவிட்டால், பொது வாழ்விலிருந்து நாம் அடியோடு ஒழிவதுதான் சரி.

எல்லாப் பொது நிறுவனங்களுக்கும் பாங்கி போன்றவர்கள் பொது மக்களே; பொது ஜனங்கள் விரும்புகின்ற காலத்துக்குமேல் ஒருநாள் கூட அவை நீடித்திருக்கக்கூடாது. திரட்டி வைத்த மூலதனத்தின் வட்டிப் பணத்திலிருந்து நடத்தப்படும் ஒரு ஸ்தாபனம், பொதுஜன அபிப்பிராயத்தை பொருட்படுத்தாமல், எதேச்சாதிகாரத்துடனும், தான் செய்வதே சரி என்ற மனப்பான்மையுடனும் நடக்கத் தொடங்குகிறது.

எத்தனையோ பொது நிறுவனங்களை நிர்வகித்துக் கனிசமான அனுபவம் பெற்றவன் நான். நிரந்தர நிதிகளின் உதவியால் பொதுஸ்தாபனங்களை நடத்துவது நல்லதல்ல என்பது இதிலிருந்து நான் பெற்றுள்ள திடமான நம்பிக்கை. ஒரு ஸ்தாபனத்தின் தார்மிக வீழ்ச்சிக்கான வித்து நிரந்தர நிதியில் பொதிந்திருக்கிறது. பொது நிறுவனம் என்றால், பொது ஜனங்களின் அங்கீகாரத்துடன் பொதுஜன நிதிகளின் உதவியால் நடத்தப்படும் ஸ்தாபனம் என்று அர்த்தம். இத்தகைய ஒரு ஸ்தாபனத்துக்குப் பொதுஜன ஆதரவு கிடைக்காவிட்டால், ஜீவித்திருக்கும் உரிமையை அது இழந்துவிடுகிறது. நிரந்தர நிதிகளிலிருந்து பராமரிக்கப்படும் ஸ்தாபனங்கள் பொதுஜன அபிப்பிராயத்தைப் புறக்கணிப்பதை அடிக்கடி காண்கிறோம்; மற்றும், பொது ஜன அபிப்பிராயத்துக்கு முரணான காரியங்களிலும் அவை அடிக்கடி ஈடுபடுகின்றன. நம் நாட்டில் ஒவ்வொரு தப்படியிலும் இதைக் காண்கிறோம். மத டிரஸ்டுகள் என்று சொல்லப்படும் ஸ்தாபனங்களில்

சில, எந்தவிதமான கணக்கும் காட்டுவதில்லை. தர்ம கர்த்தாக்களே (டிரஸ்டிகளே) அவற்றின் உடமஸ்தர் களாகிவிட்டனர்; அவர்கள் யாருக்கும் கட்டுப்பட்டவர் கள் அல்லர். இயற்கையைப் போலவே, பொது நிறுவனங்களும் அன்றாட அடிப்படையில் உதவி பெற்று வாழ்வதுதான் இலட்சிய ஏற்பாடு என்பதில் எனக்கு ஐயமில்லை, பொதுஜன ஆதரவைப் பெறமுடியாத நிறுவனத்துக்கு நீடித்திருக்கும் உரிமை இல்லை.

*　　*　　*　　*

## 5. தீண்டாமை

உணவு, பானம் சம்பந்தமான கட்டுப்பாடுகள், உயர்வு-தாழ்வு மனப்பான்மை ஆகியவற்றுக்கு அதிக மாக மதத்தில் வேறு எதுவும் இருப்பதாக நாம் இப்போது கருதுவதில்லை; இது சோகத்துக்குரியது. இதைவிடப் பெரிய மடமை இருக்க முடியாது என்று நான் சொல்கிறேன். பிறப்பினாலும், சில சாங்கியங்களை அனுஷ்டிப்பதனாலும் ஒருவருக்கு உயர்வோ தாழ்வோ ஏற்பட முடியாது. குணம் ஒன்றுதான் இதை நிர்ண யிக்க முடியும். உயர்ந்தவர்-தாழ்ந்தவர் என்ற அடை யாளச் சின்னத்துடன் மனிதர்களைக் கடவுள் படைக்க வில்லை; பிறப்பு காரணமாக ஒரு ஆணையோ பெண்ணையோ தாழ்ந்தவர் அல்லது தீண்டத்தகாதவர் என்று குறிப்பிடும் சாத்திரம் எதற்கும் நாம் கட்டுப்பட முடியாது; இது கடவுளையே மறுப்பதாகும், கடவுளாக இருக்கும் சத்தியத்தையே மறுப்பதாகும்.

அழிக்க முடியாத களங்கம் ஒன்றை ஹிந்து மதம் இன்று தன்னகத்தே கொண்டிருக்கிறது. அனுதி காலம் தொட்டு வழிவழியாக அது நமக்கு வந்திருப்பதாக நான் நம்பியதில்லை. நாம் மிக மிகத் தாழ்ந்த நிலையில் இருந்த காலகட்டத்தில் தான் இந்தத் துக்ககரமான, கேவலமான, அடிமைத்தனமான தீண்டாமை உணர்வை நாம் கைக்கொண்டிருக்கவேண்டும் என்பது என் கருத்து. அந்தத் தீண்டாமை நம்மிடம் ஒட்டிக்கொண்டு இன்னமும் நம்முடனேயே இருந்து வருகிறது......

இப்போது ஹிந்து மதம் அனுஷ்டிக்கின்ற தீண்டாமையானது கடவுளுக்கும் மனிதனுக்கும் எதிரான பாபம் என்பது என்னுடைய அபிப்பிராயம், அது விஷம் போன்று ஹிந்து மதத்தின் ஜீவாதார உறுப்புகளை அரித்துக் கொண்டிருக்கிறது. ஹிந்து சாஸ்திரங்களை ஒட்டுமொத்தமாகக் கவனித்தால் அவற்றில் தீண்டாமைக்கு எவ்வித அங்கீகாரமும் இல்லை என்பது என்னுடைய கருத்து...தீண்டத்தகாதவர்கள், தீண்டத்தக்கவர்கள் என்ற இரு சாராரையும் அது இழிவுபடுத்தியுள்ளது. சுமார் நான்கு கோடி மனிதர்களை அது வளர்ச்சி குன்றச் செய்திருக்கிறது. வாழ்வின் சாதாரண வசதிகள்கூட அவர்களுக்கு மறுக்கப்படுகின்றன. ஆகவே அது விரைவாக ஒழிந்தால் ஹிந்து மதத்துக்கும் இந்தியாவுக்கும் நல்லது, மனித வர்க்கத்துக்கும் ஒருவேளை பொதுவான நன்மை விளையக்கூடும்.

என்னைப் பொறுத்தவரை, தீண்டாமைப் பிரச்சினையானது ஹிந்து மதத்துக்கு ஜீவ-மரணப் பிரச்சினையாகும். தீண்டாமை வாழ்ந்தால் ஹிந்து மதம் அழியும், இந்தியாகூட அழியும்; ஆனல் ஹிந்து இருதயத்திலிருந்து தீண்டாமையை வேரோடு ஒழித்தால் பின்னர் உலகத்துக்கு ஹிந்து மதம் உறுதியான போதனை ஒன்றை

வழங்க முடியும். இதை நான் திரும்பத் திரும்பச் சொல்லியிருக்கிறேன். இந்த வாக்கியத்தின் முதல் பாகத்தை நூற்றுக் கணக்கான கூட்டங்களில் கூறியிருக்கிறேன், ஆனால் பின் பாகத்தைக் கூறியதில்லை. சத்தியத்தைக் கடவுளாக ஏற்றுக்கொள்ளும் ஒரு தனிமனிதனின் வாக்குமூலம் இது. ஆகவே இதில் உயர்வு நவிற்சி எதுவும் இல்லை. ஹிந்து மதத்தின் இயல்பான அங்கமே தீண்டாமை என்றால், ஹிந்து மதம் ஒரு வெற்றுத் தோட்டா என்றுதான் அர்த்தம். ஆனால் தீண்டாமை ஒரு பயங்கரமான அசத்தியமே. தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தை நான் தொடங்கியிருப்பதன் நோக்கம் தெட்டத் தெளிவானது. தீண்டத்தகாதவர் ஒருவரை ஒவ்வொரு ஹிந்துவும் தீண்டவேண்டும் என்பது என்னுடைய நோக்கம் அல்ல; ஆனால் தீண்டத்தக்க ஒவ்வொரு ஹிந்துவும் தம்முடைய இருதயத்திலிருந்து தீண்டாமையை விரட்டவேண்டும் என்பதும், பூரணமான மனமாற்றம் பெறவேண்டும் என்பதுவும்தான் என்னுடைய நோக்கம்.

சுயநல நோக்கங்கள் காரணமாக நம்மை உயர்ந்தவர்கள் என்றும், மற்றவர்களைத் தாழ்ந்தவர்கள் என்றும் கருதுவதே மோசமான செய்கைதான். ஆனால் தீண்டாமை போன்ற ஒரு தீமையை மதத்துடன் முடிச்சுப்போடுவது அதையும்விட மோசமானது. இது இரட்டைத் தவறாகும். ஆகவே தீண்டாமை போன்ற அப்பட்டமான தீமைக்கு ஆதாரமாக, படித்துத் தேர்ந்த பண்டிதர்கள் வாதிடுவதும், சாஸ்திரங்களிலிருந்து ஆதாரம் காட்டுவதும் எனக்கு வருத்தம் தருகின்றன. ஹிந்துக்களாகிய நாம் நன்னடத்தை ஜாமீன் காலத்தைக் கழித்துக் கொண்டிருக்கிறோம் என்பதை முன்பே சொல்லியிருக்கிறேன், இப்போது மறுபடியும் சொல்லுகிறேன். நாம் விரும்பினாலும்

விரும்பாவிட்டாலும் தீண்டாமை மறைந்து கொண்டு தானிருக்கிறது. ஆனால் இந்த நன்னடத்தை ஜாமீன் காலத்தில் நாம் நம்முடைய பாபத்துக்காகப் பச்சாத் தாபப்பட்டு, நம்மைச் சீர்திருத்தித் தூய்மைப்படுத்திக் கொண்டால், இந்த ஒரு செய்கையை ஹிந்துக்களின் மகோன்னதமான சுயபரிசுத்த நடவடிக்கை என்று சரித்திரம் குறிப்பிடும். ஆனால் காலத்தின் போக்கு காரணமாக, நாம் நம்முடைய இஷ்டத்துக்கு விரோத மான காரியங்களைச் செய்யும்படியாகி, ஹரிஜனங்கள் தங்கள் நிலையைத் தாங்களே உயர்த்திக் கொண்டால் அது ஹிந்துக்களுக்கோ ஹிந்து மதத்துக்கோ பெருமை அளிக்காது. இன்னும் ஒரு படி மேலே சென்று நான் சொல்கிறேன்! இந்தப் பரீட்சையில் நாம் தோற்றால் ஹிந்து மதமும் அழியும். ஹிந்துக்களும் அழிவர்.

ஹரிஜன் என்றால் 'ஆண்டவனின் ஜனம்' என்று அர்த்தம். உலகில் உள்ள எல்லா மதங்களும் கடவுளைப் பிரதானமாகத் தீனபந்து, அனாதை இரட்சகர், தீனதயாளர் என்று வர்ணிக்கின்றன. உலகின் மற்றப் பாகங்கள் இருக்கட்டும்; 'தீண்டத்தகாதவர்கள்' என்று பிரிக்கப்பட்டுள்ள இந்தியாவின் சுமார் நான்கு கோடி ஹிந்துக்களைவிட தீனர்களாகவும், நலிந்தவர்களாகவும், அனாதைகளாகவும் இருப்பவர்கள் வேறு உண்டோ? ஆகவே எந்த மக்களையாவது ஆண்டவனின் மக்கள் என்று குறிப்பிடலாம் என்றால், அதற்குத் தகுந்தவர்கள் இந்த அனாதைகளான, தீனர்களான, இழிவுப்படுத்தப் பட்டுள்ள மக்கள்தாம். ஆகவே 'நவஜீவனில்' நான் எழுதும்போதெல்லாம் 'தீண்டத்தகாதவர்களை' ஹரிஜனங்கள் என்ற பெயராலேயே குறிப்பிடுகிறேன். பெயரை மாற்றுவதால் நிலை உயர்ந்துவிடும் என்று நான் கூறவில்லை; ஆனால் சொல்லளவிலேயே இழிவாக உள்ள ஒரு சொல்லை உபயோகிப்பதையாவது தவிர்க்கலாம்.

ஜாதி ஹிந்துக்கள் உள்ளார்ந்த நம்பிக்கையுடன் தம்மிச்சையாக இன்றையத் தீண்டாமை முறையைக் கைவிடும்போது நம் எல்லோரையும் ஹரிஜனங்கள் என்று அழைத்துக்கொள்ளலாம்; ஏனெனில் அப்போது ஜாதி ஹிந்துக்கள் கடவுளின் கிருபையைப் பெற்று விடுவர் என்பதும், அதனால் அவருடைய மக்கள் என்று அவர்களை வர்ணிப்பது பொருத்தமாக இருக்கும் என்பதும் என்னுடைய பணிவான அபிப்பிராயம்.

ஹரிஜனசேவை என்பது மதக் கடமையாகும். அதில் சூதுவாதுக்கு இடமில்லை. முழு உண்மையுடனும் அஹிம்ஸையுடன் சேவை செய்யவேண்டும். தியாகம், தவம் ஆகியவற்றின் வாயிலாகவே அதை நிறைவேற்ற முடியும். நம்மைப் பரிசுத்தப்படுத்திக் கொள்ளாமல் ஹரிஜனங்களின் நம்பிக்கையை நாம் பெற முடியாது என்று நிச்சயமாகக் கருதுகிறேன். இன்று நாம் செய்பவையெல்லாம் அவர்களுக்குச் சந்தேகத்தையும் அவநம்பிக்கையையும் ஏற்படுத்தினல் அது குறித்து நாம் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. இதுவரை நாம் அவர்களுடைய தோள்மேல் சவாரி செய்து வந்திருக் கிறோம். அவர்களிடம் நியாயமாக நடப்பது என்றால், நாம் கீழே இறங்கி, அவர்களையும் மற்ற ஹிந்துக்களுக்குச் சமமாகக் கருதவேண்டும்.

பொருளாதார, கல்வித்துறைகளில் ஹரிஜனங்களைக் கைத்தூக்கி விடுவது ஜாதி ஹிந்துக்களின் உண்மையான கழிவிரக்கத்தின் ஒரு பகுதியாகும் என்பதில் சந்தேக மில்லை. அவர்களுடைய பேச்சில் அந்தரங்க சுத்தி இருக்கிறதா என்பதற்கு இது ஒரு உரை கல். ஆனால் ஆலயங்களை ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடாவிடில் இந்த உதவி பூரணமாகாது. கோவில்களைத் திறந்து விடுவதுதான் மதரீதியில் ஹரிஜனங்களுக்குச் சம

அந்தஸ்து அளிப்பதாகும், ஹிந்து மதத்தின், 'சண்டாளர் களாக' அவர்கள் இனிமேல் இருக்கமாட்டார்கள் என்பதற்கு இதுதான் நிச்சயமான அறிகுறியாக இருக்கும்: இப்போது அவர்கள் 'சண்டாளர்' நிலேயில் தான் இருக்கிறார்கள்.

ஹரிஜனங்களுக்கு ஆலயங்களைத் திறந்து விட்டால், பின்னர் பள்ளிக்கூடங்கள், கிணறுகள், மற்ற வசதிகள் ஆகியவையெல்லாம் தாமாகவே ஹரிஜனங்களின் உபயோகத்துக்கு வந்துவிடும்.

ஹரிஜனங்களை வருத்தும் எல்லா வில்லங்கங்களையும் அடியோடு நீக்குவதற்காக ஒரு காலக்கெடு வைத்துக்கொண்டு விறுவிறுப்பான இயக்கம் ஒன்றை ஆரம்பிக்க வேண்டும். ஹரிஜனங்களின் நிலையை உயர்த்துவதைக் காலவரம்பின்றி ஒத்திவைப்பது இனிமேல் சாத்தியமில்லை. தேச விடுதலையைப் போல இப்போதே அதையும் சாதிக்க வேண்டும். சமூகத்துக்கு மிகவும் உபயோகமாக உள்ள ஒரு பிரிவினர் தங்கள் அடிப்படை உரிமைகளை அனுபவிக்க முடியாமல் தடுக்கப்படும்போது சுதந்திரம்கூட நமக்கு எட்டிக்காயாகக் கசந்துபோய் விடும்.

பொதுக்கோவில்களுக்கு மற்ற ஹிந்துக்கள் எல்லாரும் வரலாம்; 'தீண்டத்தகாதவர்கள்' மாத்திரம் வரக்கூடாது என்பது போன்ற அக்கிரமம் சுயராஜ்யத்தில் இருக்காது. வேதங்கள், மற்றச் சாத்திரங்கள் ஆகிய

வற்றின் அதிகாரத்தை யாரும் மறுக்க மாட்டார்கள்; ஆனால் அவற்றுக்கு வியாக்கியானம் கூறும் அதிகாரம் தனி நபர்களிடம் இருக்காது; பொதுஜன ஒழுக்கத்தைக் கட்டுப்படுத்துவது சம்பந்தப்பட்டவரை சட்டத்துக்கு உகந்த முறையில்தான் இந்த மதநூல்களைப் பிரயோகிக்க வேண்டியிருக்கும். மனச்சாட்சி பூர்வமான நம்பிக்கைகளுக்கு மரியாதை அளிக்கப்படும்; எனினும் பொது ஒழுக்கத்துக்கும் மற்றவர்களின் உரிமைக்கும் முரணாக அவை இருக்கக்கூடாது. ஆனால் அசாதாரணமான நம்பிக்கைகளைக் கொண்டவர்கள் அசௌகரியத்தை அனுபவிக்க வேண்டியதுதான், அந்த ஆடம்பரத்துக்கு உரிய விலையைக் கொடுக்க வேண்டியதுதான். சம்பிரதாயம் அல்லது மதத்தின் பெயரால் எந்த நபரும் அல்லது வகுப்பும் உயர்வு பாராட்டுவதைச் சட்டம் அனுமதிக்காது.

தன்மானமும் சம அந்தஸ்தும் வாய்ந்த பிரஜைகளாகக் கண்ணியத்துடன் வாழ்வது, மனிதப்பிறவிகளுக்கு உரிய நீதியைப் பெறுவது, அச்சத்திலிருந்து விடுதலை, சுத்தமான, சுகாதாரமான பழக்கவழக்கங்களைக் கைக்கொள்வது, சிக்கனம், சுறுசுறுப்பு, கல்வி ஆகியவைதான் ஹரிஜனங்களின் உண்மையான பசியாகும். இந்தப் பசியை ஆற்ற வேண்டும். இதற்காக நாம் விடாமுயற்சியுடனும், தன்னலத் தியாகத்துடனும், பொறுமையுடனும், புத்திசாலித்தனமாகவும் பாடுபட வேண்டும். ஹரிஜனங்களுக்குச் சாப்பாடு போடுவதற்காக நீங்கள் என்னிடம் பணம் கொடுத்தால் அதை நான் ஏற்றுக் கொள்ளமாட்டேன். ஏனெனில் அவர்களைப் பிச்சைக்காரர்களாகவும் சோம்பேறிகளாகவும் மாற்றுவதற்கு நான் விரும்பவில்லை.

தீண்டாமையை வேரோடு ஒழித்தால், அதன் மூலம் ஹிந்து மதத்தின் பயங்கரக் களங்கம் நீங்குவதுடன் உலக வியாபகமான விளைவுகளும் ஏற்படலாம். மனித குலத்தின் தூய்மையற்ற ஒரு அமிசத்துக்கு எதிரான போராட்டமே தீண்டாமைக்கு எதிரான என்னுடைய போராட்டம்.

ஒரு அனுபவம் என்னுடைய நினைவில் பசுமையாக இருந்து வருகிறது. தீண்டாமையை ஒழிப்பதற்காக நான் மேற்கொண்ட 21 தின உண்ணுவிரதம் சம்பந்தமானது அது. மறுநாள் காலையில் உபவாசம் மேற்கொள்ளப் போகும் எண்ணமே சிறிதுமின்றி முதல்நாள் இரவில் நான் நித்திரை செய்யத் தொடங்கினேன். இரவு சுமார் 12 மணிக்கு ஏதோ ஒன்று திடீரென என்னை எழுப்புகிறது; ஏதோ ஒரு குரல்—அது உள்ளேயிருந்தா, வெளியேயிருந்தா என்று என்னுல் சொல்லமுடியவில்லை —'நீ உபவாசம் இருக்கவேண்டும்' என்று இரகசியமாகச் சொல்லுகிறது. 'எத்தனை நாட்களுக்கு ?' என்று நான் கேட்கிறேன். 'நாளையே தொடங்கு' என்று அது கூறுகிறது. அப்படியே முடிவு செய்துவிட்டு நான் நிம்மதியாகத் தூங்குகிறேன். மறுநாள் காலைப் பிரார்த்தனை முடியும்வரை என்னுடைய சகாக்களிடம் நான் ஒன்றுமே சொல்லவில்லை. அவர்களிடம் ஒரு காகிதத் துண்டைக் கொடுத்தேன்; அதில் என் முடிவை வெளியிட்டிருந்ததுடன், இது மாற்ற முடியாத முடிவாகையால் என்னுடன் வாதாடவேண்டாம் என்றும் குறிப்பிட்டிருந்தேன். டாக்டர்களோ உண்ணுவிரதத்தில் நான் உயிர்தப்பமாட்டேன் என்று நினைத்தனர். ஆனுல் நான் பிழைத்திருப்பேன் என்றும், நான் தொடர்ந்து முன்செல்ல வேண்டும் என்றும் என்னுள்ளிருந்து ஏதோ ஒன்று சொல்லியது. அந்த நாளுக்கு முன்போ பின்போ என் வாழ்க்கையில் அத்தகைய அனுபவம் ஏற்பட்டதில்லை.

* * * *

## 6. பெண்கள்

ஆணின் சகா பெண்; ஆணுக்குச் சமமான மன ஆற்றல்கள் படைத்தவள் அவள். ஆணின் காரியங்களில் எல்லாம் மிகச் சிறிய காரியங்களில்கூட, கலந்து கொள்ளும் உரிமை அவளுக்கு உண்டு; ஆணுக்குச் சமமான சுதந்திர உரிமையும் அவளுக்கு உண்டு. ஆண் தனக்குரிய செயல்துறையில் உயர்ந்த இடம் பெற்றிருப்பது போலவே அவள் தனக்குரிய துறையில் உயர்ந்த இடம் பெறுவதற்கு அருகதையுள்ளவள். அவள் எழுதப்படிக்கத் தெரிந்து கொள்வதன் விளைவாக மாத்திரம் இந்த நிலைமை ஏற்படாமல், இயற்கையாகவே நிலவவேண்டும். ஒரு தீய சம்பிரதாயம் காரணமாகவே. அடிமுட்டாள்களும் உதவாக்கரைகளுமான ஆண்கள் கூட பெண்களை விட உயர்ந்த அந்தஸ்தை அனுபவித்து வருகிறார்கள்; இந்த உரிமைக்கு அவர்கள் அருகர்கள் அல்ல, இதை அவர்கள் அனுபவிக்கக்கூடாது.

பெண் என்பவள் அஹிம்சையின் அவதாரம், அஹிம்சை என்றால் எல்லையற்ற அன்பு என்று பொருள். கஷ்டப்படுவதற்கான அளவற்ற சக்தி என்பது அன்பின் அர்த்தம். மனிதனின் தாயான பெண்ணைத் தவிர வேறு யாரிடம் இந்தச் சக்தி மிக அதிகமான அளவில் இருக்கிறது? சிசுவைக் கர்ப்பத்தில் சுமந்து கொண்டு ஒன்பது மாதகாலம் அதற்கு உணவளிக்கும்போது, இந்தக் கஷ்டத்திலிருந்து ஆனந்தத்தைப் பெறும்போது, அவள் இந்தச் சக்தியை வெளிப்படுத்துகிறாள். பிரசவ வேதனையைவிடப் பெரிய கஷ்டமும் உண்டோ? மற்றும், தன்னுடைய சிசு நாளொரு மேனியாக வளரவேண்டும் என்பதற்காகத் தினம்தினம் கஷ்டப்படுவது யார்? அந்த அன்பை மனிதகுலம் முழுவதன்பாலும் அவள் செலுத்

தட்டும்; தான் எச்சமயத்திலாவது மனிதனின் காமக் கிழத்தியாக இருந்ததாகவோ, இருக்க முடியும் என்றோ நினைப்பதை அவள் மறக்கட்டும். அப்போதுதான் அவள் ஆணின் தாயாகவும், அவனை உருவாக்குபவளாகவும், அவனுடைய மௌனத் தலைவியாகவும், அவனருகே, அவள் பெருமிதத்துடன் வீற்றிருக்கலாம்.

தீரத்திலும் தந்நலத் தியாகத்திலும் பெண் என்றைக்குமே ஆணை விட உயர்ந்தவள் என்பதும், மிருகப் பிராயமான தீரத்தில் பெண்ணை விட ஆண் உயர்ந்தவன் என்பதும் என் கருத்து.

பெண்ணைப் பலவீன இனத்தனள் என்று கூறுவது அவதூறாகும்; பெண்ணுக்கு ஆண் இழைக்கும் அநீதி அது. பலம் என்பதன் பொருள் மிருக பலம் என்றால், ஆணை விடப் பெண் மிருகத்தனத்தினால் குறைந்தவள்தான். ஆணை விட அவளிடம் அதிகமான உள்ளுணர்வு இல்லையா, தந்நலத் தியாகம் இல்லையா, சகிப்புத்தன்மை இல்லையா, தீரம் இல்லையா? அவளில்லாமல் ஆண் ஆணாக இருக்கமுடியாது. அஹிம்ஸையே நம் வாழ்வின் நியதி என்றால், வருங்காலம் பெண்களையே சார்ந்திருக்கும்.

நான் பெண்ணாகப் பிறந்திருந்தால், தன்னுடைய விளையாட்டுப் பொருளாக இருக்கவே பெண் பிறந்திருக்கிறாள் என்று கருதும் ஆணின் இறுமாப்புக்கு எதிராகக் கலகம் செய்திருப்பேன். பெண்ணின் இதயத்தில் இடம் பெறுவதற்காக மனோபாவ ரீதியில் நானும் பெண்ணாக

மாறிக் கொண்டேன்—என் மனைவியை நடத்தி வந்த முறையை மாற்றிக்கொள்ள நான் தீர்மானிப்பதற்கு முன் என் மனைவியின் இதயத்தில் என்னால் நுழைய முடியவில்லை; அவளுடைய கணவன் என்ற முறையில் என் உரிமைகள் என்று நான் கருதியவற்றையெல்லாம் துறந்துவிட்டு அவளுக்கு உரிய உரிமைகளையெல்லாம் அவளுக்கு மறுபடி வழங்கினேன்.

மனித வர்க்கத்தின் சிறந்த செம்பாதியினரான பெண் பாலாரை—அவர்கள் பலவீன இனத்தினர் அல்ல—ஆண் துஷ்பிரயோகம் செய்ததற்கு ஈடாக, ஆண்கள் படைத்துள்ள தீமைகளினிலே வேறு எதுவும் அவ்வளவு இழிவானதோ, அதிர்ச்சி தருவதோ, மிருகத் தனமானதோ அல்ல. இருபாலார்களில் பெண்களே உயர்ந்தவர்கள்; ஏனெனில் தியாகம், மௌனமாகக் கஷ்டப்படுதல், பணிவு, நம்பிக்கை, அறிவு ஆகிய வற்றின் உருவுமாக இன்றும்கூட இருப்பவர்கள் அவர்கள்தாம்.

பெண் தன்னை ஆணின் காமக்கிழத்தி என்று கருதுவதை நிறுத்த வேண்டும். இப் பிரச்சினைக்குப் பரிகாரம் காண்பது ஆணைவிடப் பெண்ணையே அதிக மாகப் பொறுத்திருக்கிறது.

வாழ்வில் பரிசுத்தமானவையாகவும், மதரீதியான வையாகவும் உள்ளவற்றுக்கு எல்லாம் பெண்களே விசேஷக் காவலர்கள். இயல்பான பழமைப்பற்று

காரணமாக, குருட்டுப் பழக்கவழக்கங்களை அவர்கள் இலேசில் கைவிடுவதில்லை என்றால், வாழ்வில் பரிசுத்த மானவையாகவும் தூய்மையாகவும் உள்ளவைகளையும் அவர்கள் இலேசில் கைவிடுவதில்லை.

தங்கள் சுதந்திரத்தைப் போலவே பெண்ணின் சுதந்திரத்தையும் போற்றி, பெண்ணை மனித இனத்தின் தாயாகக் கருதும் ஆண்களின் மரியாதையைப் பெற முடியாத சில வாசகங்கள் ஸ்மிருதிகளில் காணப்படுவது வருந்தத்தக்கது. பெண்ணுக்கு உரித்தான அந்தஸ்தும் மிகுந்த மேன்மையும் அளிக்கின்ற வாசகங்களும் ஸ்மிருதிகளில் இருக்கத்தான் செய்கின்றன. ஸ்மிருதி களில் உள்ள மற்ற வாசகங்களுக்கு முரண்பாடாகவும், தார்மிக உணர்வுக்கு விரோதமாகவும் அதே ஸ்மிருதி களில் உள்ள சில வாசகங்களை என்ன செய்வது என்ற கேள்வி எழுகிறது. சாத்திரங்கள் என்ற பெயரால் அச்சிடப்படுபவை எல்லாவற்றையும் கடவுளின் வாசகங்கள் என்றோ, தெய்விக ஆதரிசம் பெற்ற வாச கங்கள் என்றோ கருதவேண்டியதில்லை என்று நான் பன்முறை கூறியிருக்கிறேன். ஆனால், அவற்றுள் எது நல்லது, அதிகாரபூர்வமானது என்பதையும், எது கெட்டது, இடைச்செருகல் என்பதையும் ஒவ்வொரு வரும் தாமே நிர்ணயித்துக்கொள்ள முடியாது. ஆகவே, அதிகாரபூர்வமான குழு ஒன்று ஸ்மிருதிகள் என்ற பெயரால் நடமாடுபவை எல்லாவற்றையும் ஆராய்ந்து, தார்மிக நியதிக்கும் மதம், ஒழுக்கம் ஆகிய வற்றின் அடிப்படைக் கோட்பாடுகளுக்கும் முரணான அமிசங்களை அவற்றிலிருந்து நீக்கிவிட்டு, ஹிந்துக்களுக்கு வழிகாட்டுவதற்காக ஒரு திருந்திய பதிப்பை வெளியிட வேண்டும். இத்தகைய குழுவின் அதிகாரத்தை ஹிந்து வெகு ஜனங்களும், மதத் தலைவர்கள் என்று ஏற்றுக் கொள்ளப்படும் நபர்களும், ஒப்புக்கொள்ளமாட்டார்

கள் என்ற எண்ணம் இந்தப் புனிதப் பணியில் குறுக்கிடவேண்டிய அவசியம் இல்லை. அந்தரங்க சுத்தியுடனும், சேவா மனப்பான்மையுடனும் செய்யப்படும் காரியம் எதுவும் காலப்போக்கில் எல்லோரையும் கவரும் என்பதுடன், இத்தகைய உதவி பெரிதும் தேவைப்படுகின்றவர்களுக்கு நிச்சயமாய் உதவிகரமாகவும் இருக்கும்.

கணவனிடம் மனைவி அளவுக்குமேல் அடங்கி நடக்கவேண்டும் என்றும், தனக்குத் தனித்துவம் இல்லாமல் கணவனுக்குள் அவள் ஒடுங்கிவிடவேண்டும் என்றும் ஹிந்துக் கலாசாரம் விதித்தது தவறாகும். இதன் விளைவாக, கணவன் சில சமயங்களில் அளவுக்கு மீறிய அதிகாரத்தை மேற்கொண்டு அதை மிகுந்த மிருகத்தனமாகப் பிரயோகிக்க நேர்கிறது.

பெண்களின் உரிமைகள் சம்பந்தப்பட்டவரை நான் சிறிதும் விட்டுக் கொடுக்க மாட்டேன். ஆணை வருத்தாத சட்ட ரீதியான வில்லங்கம் எதுவும் அவளை வருத்தக்கூடாது என்பது என் கருத்து. பிள்ளைகளையும் பெண்களையும் முற்றிலும் சமமாக நடத்தவேண்டும். மாதர்களின் கல்விப் பயிற்சி உயர உயர அவர்கள் தங்கள் வலிமையையும் மேலும் மேலும் உணர்வர்; அப்போது அவர்கள் தங்களை வருத்துகின்ற மாபெரும் ஏற்றத்தாழ்வுகளை எதிர்ப்பது இயற்கையே.

கணவன் ஒரு தெய்வம் என்றால், மனைவியும் ஒரு தேவதைதான். அவள் அடிமை அல்ல; சம உரிமை

களைக் கொண்ட தோழியும் துணைவியுமாவாள் அவள். அவர்கள் இருவரும் ஒருவருக்கொருவர் குருவாக இருப்பவர்கள்.

பிள்ளைக்குச் சமமான பாகம் பெண்ணுக்கும் கிடைக்கவேண்டும்.

கணவனின் வருமானம் அவனுக்கும் மனைவிக்கும் பொதுச் சொத்தாகும்; அவளை வெறும் சமையல்காரியாகக் கருதினாலும் கூட, அவளுடைய உதவியால்தான் அவன் பணம் சம்பாதிக்கிறான்.

கணவன் தன் மனைவிக்கு அநீதி இழைத்தால், பிரிந்து வாழும் உரிமை அவளுக்கு உண்டு.

குழந்தைகள் மீது அவர்கள் இருவருக்கும் சம உரிமைகள் உண்டு. குழந்தைகள் பெரியவர்களானதும் இந்த உரிமைகளை அவர்கள் இழந்துவிடுவர்; அவனோ அவளோ குழந்தைகளைக் கவனிக்கத் தகுதியின்றியிருந்தால் அதற்கு முன்பேகூட இந்த உரிமைகளை இழக்கவேண்டும்.

இயற்கையாக ஏற்பட்டவை, மனிதக் கண்களுக்குப் புலப்படுபவை ஆகியவை தவிர, மற்றப்படி ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே எந்த வேறுபாடுகளையும் நான் ஒப்புக்கொள்ளமாட்டேன்.

\ கேவலமான வரதட்சிணை வழக்கத்துக்கு எதிராக வலிமைவாய்ந்த பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்க வேண்டும்; தீய முறையில் கிடைக்கும் இந்தப் பணத்தைத் தீண்டித் தங்கள் கைகளை அசுத்தப்படுத்திக் கொள்ளும் இளைஞர்களைச் சமூகப் பிரஷ்டம் செய்ய வேண்டும்| பெண்களைப் பெற்றவர்கள் ஆங்கிலப் பட்டங்களின் ஒளியைக் கண்டு மயங்குவதை நிறுத்த

வேண்டும்; அவர்கள் தங்கள் சின்னஞ்சிறு ஜாதிகளுக்கும் மாகாணங்களுக்கும் வெளியே சென்று, உண்மையான தீரம் படைத்த வாலிபர்களைத் தங்கள் பெண்களுக்குக் கணவர்களாகப் பெறவேண்டும்.

வரதட்சிணை வழக்கம் குரூரமானது என்பதில் சந்தேகமேயில்லை. இந்தமுறை ஒழியத்தான் வேண்டும். பெற்றோர்கள் பணத்துக்காக நடத்துகின்ற பேரமாகத் திருமணம் இனி இருக்கக்கூடாது. இந்தச் சம்பிரதாயத்துக்கும் ஜாதிக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. ஒரு குறிப்பிட்ட ஜாதிக்குள் உள்ள சில நூறு இளைஞர்கள், யுவதிகள் ஆகியோரிடையே மாத்திரம் தேர்வு நடத்தும் வரை இந்த (வரதட்சிணை) முறையும் நீடிக்கவே செய்யும்; அதை எதிர்த்து என்னதான் பேசினாலும் பயனிருக்காது. பெண்களோ, பிள்ளைகளோ, அல்லது அவர்களுடைய பெற்றோர்களோ ஜாதித்தளைகளை அறுத்தெறிந்தால் தான் இந்தத் தீமையை ஒழிக்க முடியும்.

பசுவைப் பாதுகாக்க வேண்டும் என்று மதத்தின் பெயரால் நாம் கூக்குரலிடுகிறோம்; ஆனால் கன்னி விதவையின் உருவில் இருக்கும் மனிதப் பசுவைப் பாதுகாக்க மறுக்கிறோம். மதத்தில் உள்ள நிர்ப்பந்த அம்சத்தை நாம் எதிர்க்க வேண்டும். ஆனால் திருமணச் சடங்கின் பொருளையே அறியாத நம் சிறுமிகள் மீது கைம்மை நிலையை, மதத்தின் பெயரால், நாம் நிர்ப்பந்தமாகத் திணிக்கிறோம். சின்னஞ்சிறு பெண்களை நிர்ப்பந்தமாக விதவைகளாக்குவது மிருகத்தனமான குற்றம்; அதற்காக ஹிந்துக்களாகிய நாம் தினந்தோறும் கடுமையான கஷ்டத்தை அனுபவித்து வருகிறோம்; நம்முடைய

மனச்சாட்சி உண்மையாகவே விழிப்புப் பெற்றால், 15 வயதுக்கு முன் திருமணமே நடக்காது; பின்னர் விதவை நிலை பற்றிய பேச்சே இல்லை; இந்தப் பெண்களுக்கு மத ரீதியாக கல்யாணமே நடக்கவில்லை என்று அப்போது நாம் கூறுவோம். இத்தகைய கைம்மை நிலைக்கு எந்தச் சாத்திரத்திலும் ஆதாரம் இல்லை. தன்னுடைய துணைவன் மீதுள்ள அன்பு காரணமாக, ஒரு பெண் தானாகவே ஏற்றுக்கொள்ளும் கைம்மை நோன்பானது வாழ்க்கைக்கு நளினமும் பெருமையும் தருகிறது, இல்லத்தைப் புனிதமாக்குகிறது, மதத்தையேகூட உயர்த்துகிறது.

கேள்வி :—நம்மிடையே நிலவும் எண்ணற்ற சமூகத் தீமைகள் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவை இருப்பது உண்மையே, ஆனால், அவசியமான மாறுதல்களை இயற்றுவதற்கு ஆண்கள் விரும்பாவிடில் பெண்கள் என்ன செய்ய முடியும் ?

பதில் :—ஆண்களைவிடத் தாங்கள் கீழானவர்கள் என்று பெண்கள் நினைப்பதற்குக் காரணமேயில்லை. ஆணில் பாதி பெண் என்று பல்வேறு பாஷைகளும் பறை சாற்றுகின்றன; அதே வாதத்தின் பிரகாரம் பெண்ணின் பாதியாவான் ஆண். அவர்கள் இரு தனிப் பொருள்கள் அல்ல, ஒரே பொருளின் இரு பாதிகள்தாம். ஆங்கில மொழி இதற்கும் ஒரு படி மேலே சென்று, பெண்ணை ஆணின் சிறந்த செம்பாதி (பெட்டர் ஹாஃப்) என்று குறிக்கிறது. ஆகவே, விரும்பத்தகாத, முறையற்ற கட்டுப்பாடுகள் அனைத்துக்கும் எதிராகப் பெண்கள் சாத்துவிகக் கலகம் செய்ய வேண்டும் என்று நான்

யோசனை கூறுகிறேன். தம்மிச்சையாக ஏற்றுக் கொள்ளப்படும் கட்டுப்பாடுகளே நன்மை தரக் கூடியவை. சாத்துவிகக் கலகத்தினுல் தீமை எதுவும் ஏற்படக்கூடிய சாத்தியம் இல்லை. ஆனுல் தூய்மை யுடனும், தர்க்கரீதியாகவுமே அதை மேற்கொள்ள வேண்டும்.

சகோதரிகளே, ஹரிஜன இயக்கத்துக்கு நீங்கள் எவ்வளவு அதிகமாக முடியுமோ அவ்வளவு அதிகமாகக் கொடுக்கவேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஹரிஜனங்களுக்கு எவ்வாறு சேவை செய்வது என்று நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். முதன் முதலாக உங்கள் இதயத்திலிருந்து தீண்டாமை உணர்வை வேரோடு கல்லியெறியவேண்டும்; உங்கள் சொந்தக் குழந்தை களைப் போலவே ஹரிஜனச் சிறுவர் சிறுமியர்களையும் கருதி அவர்களுக்குச் சேவை செய்யவேண்டும். உங்கள் உறவினர்களைப் போலவே, ஒரே பாரத மாதாவின் குழந்தைகளாக அவர்களையும் நீங்கள் நேசிக்கவேண்டும். சேவை உணர்வு, தியாக உணர்வு ஆகியவற்றின் உயிர்த் துடிப்புள்ள உருவமாகப் பெண்ணை நான் வழிபட்டு வந்திருக்கிறேன். தந்நலமற்ற சேவை என்ற பண்பை உங்களுக்கு இயற்கை வழங்கியிருக்கிறது; இதில் உங்களுக்குச் சமமான நிலையை ஆணினுல் ஒருகாலும் எட்டிப்பிடிக்க முடியாது.

கருணை நெஞ்சம் படைத்தவள் பெண்; துன்பப் படுவோரைக் கண்டால் அவளுடைய இதயம் கரைந்து உருகும். ஆகவே, ஹரிஜனங்களின் கஷ்டங்களைக் கண்டு உங்கள் மனம் இளகி, தீண்டாமையையும் உயர்வு,

தாழ்வு மனப்பான்மையையும் கைவிட்டால், பின்னர் ஹிந்து மதம் புனிதமடையும், ஹிந்து சமூகம் ஆன்மிகத் துறையில் பெரிதும் முன்னேறும். இறுதியில், இந்தியா முழுவதற்கும், அதாவது 35 கோடி மனிதர்களுக்கும், நல்வாழ்வு ஏற்படும்.

பலவிதமான, ஆழ்ந்த, அனுபவங்கள் செறிந்த என்னுடைய சுறுசுறுப்பான வாழ்க்கையிலே, உள்ளத்தை உருக்கும், ஆன்மாவை உலுக்கும் காட்சிகள் பலவற்றைக் காணும் பேறு எனக்குக் கிடைத்திருக்கிறது. ஆனால், இதை எழுதும்போது, ஹரிஜன இயக்கம் சம்பந்தமான ஒரு நிகழ்ச்சியைவிட அதிக உருக்கமான காட்சி எதுவும் என் நினைவில் எழவில்லை; படகராவில் அப்போதுதான் என் சொற்பொழிவை முடித்தேன் பிரசங்கத்தின் போது, அங்கிருந்த பெண்கள் தங்கள் நகைகளைத் தர வேண்டும் என்று தார்மீக தர்க்க வாதத்துடன் கேட்டுக் கொண்டேன். பேசி முடித்த பின், கிடைத்த நன்கொடைகளை நான் விற்றுக் கொண்டிருந்தபோது, கௌமுதி என்ற 16 வயதுப் பெண் ஒருத்தி மெதுவாக வந்து மேடையில் ஏறினாள். அவள் ஒரு வளையலைக் கழற்றிக் காட்டி, என்னுடைய கையெழுத்துக் கிடைக்குமா என்று கேட்டாள். நான் கையெழுத்திட முன்வந்தபோது, இன்னொரு வளையலையும் கழற்றி விட்டாள். அவள் கைக்கு ஒவ்வொரு வளையல்தான் அணிந்திருந்தாள். ''நீ இரண்டையும் எனக்குத் தர வேண்டாம். ஒரு வளையலுக்கே நான் கையெழுத்துப் போட்டு விடுகிறேன்'' என்று நான் சொன்னேன்.

இதற்குப் பதிலளிக்கும் விதத்தில் அவள் தன்னுடைய தங்கச் சங்கிலியைக் கழற்றத் தொடங்கினாள். அதை இலேசில் கழற்ற முடியவில்லை. அவளுடைய நீண்ட பின்னலில் மாட்டிக் கொண்ட அதைப் பிரித்து

எடுக்க வேண்டியிருந்தது. வியப்பில் ஆழ்ந்திருந்த பல்லாயிரக் கணக்கான ஆண்—பெண்களின் மத்தியில், பகிரங்கமாக இந்தக் காரியத்தை நடத்துவது சம்பந்த மாக அந்த மலையாளப் பெண்ணுக்குப் போலி நாணம் எதுவும் ஏற்படவில்லை. "ஆனால், உன்னுடைய பெற் றோர்களின் அனுமதியைப் பெற்றிருக்கிறாயா ?" என்று நான் கேட்டேன். பதில் இல்லை. அவள் தன்னுடைய பரித்தியாகத்தை இன்னும் முடிக்கவில்லை. அவளுடைய கைகள் தாமாகவே காதுகளை எட்டின ; கல் பதித்த தோடுகள் வெளியே வந்தன ; பொதுமக்கள் வானதிரக் கோஷமிட்டனர். தங்களுடைய மகிழ்ச்சியை அவர் களால் அடக்கிக்கொள்ள முடியவில்லை. இவ்வாறு தியாகம் செய்வதற்குப் பெற்றோர்களின் அனுமதியைப் பெற்றிருக்கிறாளா என்று நான் மறுபடியும் கேட்டேன். கூச்சம் மிகுந்த அந்தச் சிறுமியிடமிருந்து நான் பதில் பெறுவதற்குள், யாரோ ஒருவர், அக்கூட்டத்தில் அவளுடைய தந்தை இருப்பதாகவும், அவரே நான் போட்ட ஏலங்களில் கலந்து கொண்டு எனக்கு உதவி செய்து வருவதாகவும், நல்ல காரியங்களுக்குப் பணம் கொடுப்பதில் தம் மகளைப்போலவே அவரும் தாராளக் காரர் என்றும் சொன்னார். இந்த நகைகளுக்குப் பதிலாக புதிய ஆபரணங்களைப் போட்டுக் கொள்ளக் கூடாது என்பதை கௌமுதிக்கு ஞாபகப்படுத்தினேன். இந்த நிபந்தனைக்கு அவள் உறுதியுடன் சம்மதித்தாள். அவளுக்குக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தபோது, "நீ களைந்துள்ள நகைகளையும்விட உண்மையான ஆபரணமாகும் உன்னுடைய பரித்தியாகம்" என்று என்னையறியாமல் குறிப்பிட்டேன்.

## கௌமுதியின் மாபெரும் முடிவு

பதினாறு வயது மலையாளச் சிறுமியான கௌமுதியின் பரித் தியாகம் பற்றி காந்திஜி எழுதியிருக்கிறார். கோழிக்கோட்டில்

காந்திஜி தங்கியிருந்தபோது, கடைசி நாளன்று அவள் அவரைப் பார்க்கத் தன்னுடைய தந்தையுடன் வந்திருந்தாள். அவளுடைய தியாகத்தைப் பற்றிய மேல் விவரங்களை அறிந்துகொள்ள காந்திஜி விரும்பினார். அவ்வாறு தியாகம் செய்யவேண்டும் என்று முன் கூட்டியே தீர்மானித்துக் கொண்டு அந்தக் கூட்டத்துக்கு வந்தாளா, அல்லது கூட்டத்தில் இருந்தபோது சட்டென்று முடிவு செய்தாளா என்று அவர் கேட்டார்.

" அவள் முன்பே தீர்மானித்திருந்தாள், எங்கள் அனுமதியையும் பெற்றிருந்தாள்," என்று தந்தை பதிலளித்தார்.

" ஆனால் நகையே இல்லாமல் நீ இருப்பதைக் கண்டால் உன் அம்மா வருத்தப்படமாட்டாளா ?"

" வருத்தப்படுவாள். ஆனால், அவைகளை மறுபடி அணியும்படி அவள் என்னை நிர்ப்பந்திக்கமாட்டாள் என்பது நிச்சயம் " என்று கௌமுதி கூறினாள்.

" ஆனால், காலப்போக்கில் உனக்குக் கலியாணம் நடக்கும் போது, ஆபரணங்களே இல்லாமல் நீ இருப்பதைக் காண உன் கணவனுக்கு இஷ்டமில்லாதிருக்கலாம். அப்போது என்ன செய்வாய் ? எனக்கு ஒரு தார்மிகச் சங்கடம் இருக்கிறது. உன்னுடைய அற்புதத் தியாகம் பற்றி 'ஹரிஜன்' பத்திரிகைக்கு நான் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறேன். நீ மறுபடியும் ஆபரணங்களை அணியவே மாட்டாய் என்று அதில் குறிப்பிட்டிருக்கிறேன் அதற்கு நீ தயாராய் இல்லாவிடில், கட்டுரையின் அந்தப் பகுதியை நான் மாற்ற வேண்டியிருக்கும் ; அல்லது உன்னுடைய வருங்காலக் கணவனின் விருப்பத்துக்கு எதிராக நீ உறுதியுடன் நிற்க வேண்டும். மலையாளப் பெண்ணாகிய உன்னால் அவ்வாறு நிற்க முடியும் அல்லது, ஆபரணங்கள் இல்லாமலே உன்னை ஏற்றுக் கொள்ளக்கூடிய கணவனை நீ தேர்ந்தெடுக்க வேண்டியிருக்கும். நீ என்ன நினைக்கிறாய் என்பதை விண்டு சொல்லலாம்."

காந்திஜி கூறியதன் முழு உட்பொருளையும் கௌமுதி நிதானமாகக் கிரகித்துக் கொண்டாள். ஒரு மாபெரும் காரியத்தை அவள் சாதிக்க வேண்டியிருந்தது. ஒரு மாபெரும் முடிவை அவள் வகுக்கவேண்டியிருந்தது. அவள் சற்றே யோசித்துவிட்டு ஒரே ஒரு வாக்கியம் பேசினாள் : " நகைகள் அணியும்படி என்னைக் கட்டாயப்படுத்தாத கணவரையே நான் தெரிந்தெடுத்துக் கொள்வேன்."

காந்திஜியின் கண்களில் ஆனந்த ஒளி வீசியது, " முன்பு அன்னபூர்ணாவைப் பெற்றிருந்தேன். அவள் திருமணமானவள் ;

எனினும் தன்னுடைய நகைகள் அனைத்தையும் அவள் துறந்தாள். அதோடு, இறக்கும்வரை தன்னுடைய பிரதிக்கினையைக் காப்பாற்றினாள்.* இப்போது உன்னைப் பெற்றுள்ளேன்,'' என்று காந்திஜி கூறினார். அப்போதுமுதல், அலுப்பே இல்லாமல் கௌமுதியின் உன்னதத் தியாகத்தைப் பெண்களிடம் அவர் எடுத்துச் சொல்லிக்கொண்டேயிருக்கிறார்.

—ஹரிஜன் : ஜனவரி, 26, 1934.

*(தியாகம், சேவை ஆகியவற்றின் உன்னதமான உதாரணமாகத் தன்னுடைய சகோதரிகளுக்கு வழிகாட்டிய முதல் ஆந்திர மாது காலஞ்சென்ற ஸ்ரீமதி அன்னபூர்ணாதேவி. அவளுடைய தியாகத்தை நினைவுபடுத்தி காந்திஜி ஒருசமயம் கூறியதாவது; "அவள் என்னைச் சந்தித்த முதல் நாளிலேயே தன்னுடைய ஆபரணங்களை—ஒன்றல்ல, எல்லாவற்றையும்—கழற்றிக் கொடுத்தாள். இந்தக் காட்சியைக் கண்ட மற்றவர்கள் ஒரே ஆச்சரியத்தில் ஆழ்ந்துவிட்டனர். உடனே அங்கு நகை மாரி பொழிந்தது. தன்னுடைய ஆபரணங்களைக் கொடுத்துவிட்டதால் அவளுடைய அழகு குறைந்துவிட்டது என்று நினைக்கிறீர்களா ? மாறாக, எனக்கு அவள் முன்னையும்விட அழகாகவே தோன்றினாள். "அழகின் செயல் அழகாக இருக்கும்" என்று ஆங்கில பாஷையில் சரியான பழமொழி இருக்கிறது.)

★ ★ ★ ★

## 7. ஆங்கிலம் தேசிய பாஷையாக இருக்க முடியாது

நம்முடைய பாஷை நம்முடைய பிரதிபிம்பம்தான்; சிறந்த சிந்தனைகளை வெளிப்படுத்தும் வளமை நம்முடைய மொழிகளுக்கு இல்லை என்று என்னிடம் நீங்கள் சொன்னால், சீக்கிரமே நாம் ஒழிந்துவிடுவது நல்லது என்று நான் சொல்வேன். ஆங்கிலம் என்றாவது இந்தியாவின்

தேசிய பாஷையாக முடியும் என்று கனவு காண்பவர் யாராவது இருக்கிறாரா? நம் தேசிய சமுதாயத்துக்கு ஏன் இந்த வில்லங்கம்?...புனைவச் சேர்ந்த பேராசிரியர்கள் சிலருடன் அன்னியோன்னியமாக உரையாடும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. ஒவ்வொரு இந்திய இளைஞரும், ஆங்கிலத்தின் வாயிலாக அறிவு தேடுவதன் காரணமாக, தன்னுடைய வாழ்க்கையின் ஆறு அருமையான ஆண்டுகளை இழக்க நேரிடுகிறது என்று அவர்கள் என்னிடம் உறுதியுடன் கூறினர். நம்முடைய பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் படிக்கும் மாணவர்களின் எண்ணிக்கையால் அதைப் பெருக்கிப் பாருங்கள்; நாட்டுக்கு எத்தனை ஆயிரம் ஆண்டுகள் நஷ்டமாகின்றன என்பதை நீங்களே கண்டுகொள்வீர்கள். நமக்குச் செயலூக்கம் இல்லை என்று நம்மீது குற்றம்சாட்டப்படுகிறது. அந்நிய மொழி ஒன்றில் பாண்டித்தியம் பெறுவதில் நம் வாழ்வின் அருமையான ஆண்டுகளைக் கழித்தால் செயலூக்கம் எப்படி இருக்க முடியும்? இவ்வாறு பாண்டித்தியம் பெறும் முயற்சியிலும் தோற்கிறோம்.

உண்மையில் நாம் ஆங்கிலத்தில் ஒருகாலும் பாண்டித்தியம் பெறுவதில்லை ஒருசிலர் தவிர மற்றப்படி நம்மவர்களுக்கு அது சாத்தியமாவதில்லை. தாய்மொழியில் கருத்துக்களைத் துல்லியமாக வெளியிடுவதுபோல ஆங்கிலத்தில் வெளியிட நம்மால் ஒருகாலும் இயலாது. நம்முடைய குழந்தைப் பருவ ஆண்டுகளின் நினைவு முழுவதையும் அழிக்க முற்படலாமா? ஆனால், உயர்தரக் கல்வி என்று நாம் குறிப்பிடும் கல்வியை அந்நியப் போதன மொழியில் தொடங்கும் போது இவ்வாறு அழிக்கும் காரியத்தைத்தான் செய்கிறோம். இதன் விளைவாக நம் வாழ்க்கையில் ஒரு முறிவு ஏற்படுகிறது; இதற்காக நாம் பெரிதும் கஷ்டப்படவேண்டியிருக்கும்.

ஆங்கிலம் படித்த இந்தியர்கள்தாம் தலைமை தாங்குவதாகவும், நாட்டுக்கு வேண்டிய எல்லா காரியங்களையும் செய்வதாகவும் சொல்லப்படுவதை நான் கேள்விப்பட்டிருக்கிறேன். இது வேறு விதமாக இருந்தால்தான் பைசாசத்தனமாக இருக்கும். நாம் பெறுகின்ற ஒரே கல்வி ஆங்கிலக் கல்விதானே! அதைக் கற்றதற்கு ஏதாவது பலன் காட்டத்தான் வேண்டும். ஆனால், கடந்த ஐம்பது ஆண்டுகளில் நாம் நம்முடைய தாய்மொழிகளில் கல்வி பயின்றிருந்தால், இன்று நாம் என்ன நிலையில் இருக்க வேண்டும்? இன்று சுதந்திர இந்தியாவில் நம்மிடம் இருக்கும், நம்முள் படித்தவர்கள் சொந்த நாட்டிலேயே அந்நியர்கள்போல இருக்காமல் தேசிய சமுதாயத்தின் நெஞ்சோடு நெஞ்சாய் உரையாடுவார்கள்; பரம ஏழைகளின் மத்தியில் அவர்கள் சேவை செய்துகொண்டிருப்பர்; கடந்த ஐம்பது ஆண்டுகளில் நாம் பெற்ற பலன் எல்லாம் ஒரு தேசியப் பிதிரார்ஜிதமாயிருக்கும். இன்றோ, நம்முடைய சொந்த மனைவிமார்கள் கூட நமது சிறந்த சிந்தனைகளைப் பகிர்ந்து கொள்ள முடிவதில்லை. பேராசிரியர் போஸையும் பேராசிரியர் ரேயையும் பாருங்கள், அவர்களுடைய உன்னத ஆராய்ச்சிகளைப் பாருங்கள். அவர்களுடைய ஆராய்ச்சிகள் வெகு ஜனங்களின் சொத்தாக இருக்கவில்லை என்பது வெட்ககரமானது அல்லவா?

ஆங்கில பாஷையைக் கற்பதைப் பெரிதும் போற்றுகின்ற நம்முடைய குருட்டுப் பழக்கத்திலிருந்து நம்மையும் சமூகத்தையும் விடுதலை செய்வதுதான் நமக்கும் சமூகத்துக்கும் நாம் செய்யக்கூடிய மிகப் பெரிய சேவையாகும். நம்முடைய பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் அதுவே போதனா மொழியாக இருக்கிறது. நாட்டின் பொது மொழியாகவும் அது உருவாகி வருகிறது. நம்முடைய மிகச் சிறந்த சிந்தனைகளை

அந்த மொழியில்தான் வெளியிடுகிறோம். ஆங்கில மொழிப் பயிற்சி அவசியமானது என்ற இந்த நம்பிக்கை தான் நம்மை அடிமைப்படுத்தியிருக்கிறது. உண்மையான தேசத் தொண்டுக்கு நம்மை அது தகுதியற்றவர்களாக்கியிருக்கிறது. ஆங்கிலம் போதனு மொழியாக இருப்பதால் நம்முடைய அறிவு ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கிறது என்பதையும், வெகுஜனங்களிடமிருந்து நாம் தனித்து நிற்கிறோம் என்பதையும், நாட்டின் மிகச் சிறந்த மனிதர்களின் உள்ளங்கள் கூண்டுகளில் அடைக்கப்பட்டுள்ளன என்பதையும், நாம் பெற்றுள்ள புதிய கருத்துக்களை மக்கள் பகிர்ந்து கொள்ளவில்லை என்பதையும், பழக்கத்தின் நிர்ப்பந்தம் காரணமாக நாம் உணர்வதில்லை. விஷயங்களைக் கிரகித்துக் கொள்வதற்குப் பதிலாக, கடந்த அறுபது வருஷ காலமாக விசித்திரமான சொற்களையும் அவற்றின் உச்சரிப்பு முறையையும் மனப்பாடம் செய்வதில் நாம் ஈடுபட்டிருக்கிறோம். நம்முடைய பெற்றோர்களிடம் பெற்ற பயிற்சியை அஸ்திவாரமாகக் கொண்டு கட்டிடத்தை எழுப்புவதற்குப் பதில், அந்தப் பயிற்சியை அநேகமாக மறந்தேவிட்டோம். இதற்கு ஈடான ஒரு நிலையை வரலாற்றிலேயே காணமுடியாது. இது நம் நாட்டின் சோகம்.

நம்முடைய தாய்மொழிகளை மீண்டும் கையாள்வதும், தேசிய பாஷை என்ற தன்னுடைய இயற்கையான நிலையை ஹிந்திக்கு மறுபடி வழங்குவதுதான் சமூகத்துக்கு நாம் செய்யக்கூடிய முதல் பெரும் தொண்டு. மாகாண நிலையில் அலுவல்களை அந்தந்த மாகாண மொழியிலும், தேசிய அலுவல்களை ஹிந்தியிலும் நடத்தத் தொடங்க வேண்டும். நம்முடைய பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் மாகாண மொழிகளில் போதனை தொடங்கும்வரை நாம் ஓய்ந்திருக்கக் கூடாது.

ஆங்கிலத்தின் வர்த்தகரீதியான உபயோகம் காரணமாகவும், அரசியல் உபயோகம் என்று கூறப்படும் உபயோகம் காரணமாகவும், அது இன்று கற்கப் படுகிறது. ஆங்கில அறிவு இல்லாமல் சர்க்கார் உத்தியோகம் கிடைக்காது என்று நம் பையன்கள் கருதுகின்றனர்—இப்போதைய சூழ்நிலையில் அவர்கள் இவ்வாறு நினைப்பது சரியே. திருமணத்திற்கு ஒரு சாதனமாக இருக்கட்டுமே என்று பெண்களுக்கு ஆங்கிலம் போதிக்கப்படுகிறது. ஆங்கிலேயர்களிடம் ஆங்கில மொழியிலேயே பேசவேண்டும் என்பதற்காகப் பல மாதர்கள் ஆங்கிலம் பயில விரும்புவதை நான் அறிவேன். தங்கள் மனைவிமார்கள் தங்களிடமும் தங்கள் நண்பர்களிடமும் ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே என்று வருந்துகின்ற கணவன்மார்களையும் எனக்குத் தெரியும். ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கூடக் கையாளுகின்ற குடும்பங்கள் இருப்பதையும் நான் அறிவேன்... மாகாண மொழிகள் நசுக்கப்பட்டு, பட்டினி போடப்பட்டு வருவதைக் காண எனக்குச் சகிக்கவில்லை. பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்கு, அல்லது கணவர்கள் தங்கள் மனைவிமார்களுக்குத் தங்கள் தாய்மொழிகளில் கடிதம் எழுதுவதற்குப் பதில் ஆங்கிலத்தில் எழுதுவதை என்னால் சகிக்கமுடியாது.

மேற்கத்திய கலாசாரத்துக்கு நான் கடன் பட்டிருப்பதைத் தாராளமாக ஒப்புக் கொள்கிறேன்; என்றாலும், கூடுமானவரை கிழக்கத்திய காலாசாரத்தை நான் காப்பாற்றிக் கொண்டதன் பலனாகவே நாட்டுக்கு நான் ஏதாவது சேவை செய்ய முடிந்திருக்கிறது என்று கூறுவேன். ஆங்கில மோஸ்தரைக் கொண்டவனாகவும், தேசியப் பண்பாடு அற்றவனாகவும், வெகுஜனங்களின் வாழ்க்கை முறைகள், பழக்கவழக்கங்கள், சிந்தனைகள், அபிலாஷைகள் ஆகியவற்றை அறியாதவனாகவும்,

அவற்றைப் பொருட்படுத்தாதவனுகவும், அவற்றை துச்சமாகக் கருதுபவனுகவும், நான் இருந்திருந்தால் அவர்களுக்கு என்னுல் ஒரு உபயோகமும் இருக்காது.

மாணவர்கள் கூட்டங்களில் எல்லாம் நான் ஆங்கிலத்தில் பேசவேண்டும் என்ற கோரிக்கை எழுவதைக் கண்டு ஆச்சரியமடைகிறேன். ஆங்கில மொழியினிடம் எனக்குப் பிரியம் உண்டு என்பது உங்களுக்குத் தெரியும், அல்லது தெரியவேண்டும். ஆனுல், இந்திய மாணவர்கள் கோடிக்கணக்கான மக்களுடன் கலந்து அவர்களுக்குப் பணிபுரிய வேண்டியிருப்பதால், ஆங்கிலத்தினைவிட ஹிந்தியில் அதிகக் கவனம் செலுத்தினுல்தான், அவ்வாறு பணிபுரிவதற்கு அவர்கள் அதிகத் தகுதி பெற முடியும். நீங்கள் ஆங்கிலம் கற்கக் கூடாது என்று நான் கூறவில்லை; தாராளமாய்ப் படியுங்கள். ஆனுல் நானறிந்தவரை, கோடிக்கணக்கான இந்திய இல்லங்களின் மொழியாக அது இருக்கமுடியாது. ஆயிரக்கணக்கான, அல்லது பத்தாயிரக்கணக்கான இல்லங்களில்கூட அது இடம் பெறலாம்; ஆனுல், கோடிக்கணக்கான இல்லங்களில் அது புகமுடியாது. ஆகவே ஹிந்தியில் பேசும்படி மாணவர்கள் கேட்டுக் கொள்ளும்போது எனக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது.

தேசிய மொழிப் பிரச்சினையை இப்போது ஆராய்வோம். ஹிந்தி தேசிய மொழியாக வேண்டும் என்றுல், நம்முடைய பள்ளிக்கூடங்களில் அதைக் கட்டாய பாடமாக்கவேண்டும். ஆங்கிலம் நமது தேசிய மொழியாக முடியுமா என்பதை முதலில் கவனிப்போம்.

கற்றுத்தேர்ந்தவர்களாகவும் நல்ல தேசபக்தர்களாகவும் உள்ள நம்மவர்களில் சிலர், இந்தப் பிரச்

சினையை எழுப்புவதே அறியாமையை வெளிப்படுத்துவதாக வாதாடுகின்றனர். அது (ஆங்கிலம்) ஏற்கனவே அந்த ஸ்தானத்தை வகிப்பதாக அவர்கள் கருதுகின்றனர்.

மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இந்த அபிப்பிராயம் சரியானதே என்று தோன்றும். நம்முடைய சமூகத்தில் உள்ள படித்த பிரிவினரை நோக்கினுல், ஆங்கிலம் இல்லாவிடில் நம்முடைய அலுவல் எல்லாம் நின்று போய்விடும் என்ற எண்ணம் ஏற்படக்கூடும். ஆனுல் ஆழ்ந்து யோசித்தால், ஆங்கிலம் நம்முடைய தேசிய மொழியாக முடியாது, ஆகவும் கூடாது என்பது புலனுகும்.

தேசிய மொழிக்கு என்னென்ன தகுதிகள் இருக்க வேண்டும் என்று பார்ப்போம்:

1. அரசாங்க அதிகாரிகள் இலகுவில் கற்றுக் கொள்ளக் கூடியதாக அது இருக்கவேண்டும்.

2. இந்தியா முழுதிலும் மத, பொருளாதார, அரசியல் தொடர்புகளுக்கு ஏற்ற சாதனமாக அது இருக்கவேண்டும்.

3. இந்தியாவில் வாழும் பெரும்பாலான மக்களின் பாஷையாக அது இருக்கவேண்டும்.

4. நாடு முழுவதும் இலகுவில் கற்றுக் கொள்ளக் கூடியதாக அது இருக்கவேண்டும்.

5. இந்த மொழியைத் தெரிந்தெடுக்கும்போது தற்காலிக அல்லது ஸ்திரமற்ற பலனைக் கணக்கில் கொள்ளக்கூடாது.

இந்த யோக்கியதாம்சங்களில் எதுவும் ஆங்கிலத்தினிடம் இல்லை. அப்படியானுல் ஐந்து தகுதிகளையும் கொண்ட பாஷை எது? அது ஹிந்தியே என்பதை நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டியிருக்கும்.

இந்தியர்கள் எல்லோருக்கும் பல—மாகாணத் தொடர்பு மொழியாக இருப்பதற்கு மிகவும் பொருத்த மானது ஹிந்துஸ்தானிதான் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. பாரசீகமயமான உருதுவையோ சம்ஸ்கிருதமயமான ஹிந்தியையோ வெகுஜனங்களால் புரிந்துகொள்ள முடியாது. பிரிட்டிஷ் ஆட்சி முடியும் போது, ஆங்கிலமும் பொதுப்பேச்சு மொழி அல்லது அரசாங்க மொழி என்ற நிலையிலிருந்து விலகவேண்டி யதுதான். அது ஆக்கிரமித்துக் கொண்டுள்ள ஸ்தானம் இது. ஆங்கிலம் அதற்குரிய இடத்தில் இருக்கும்போது அதை நான் கௌரவிக்கிறேன். அது ஒருகாலும் இந்தியாவின் தேசிய மொழியாக முடியாது.

தேசிய மொழி பற்றி இப்போது சச்சரவு இருப்ப தாகத் தோன்றுகிறது. அது எப்படிப்பட்டதாக இருக்கவேண்டும்? தேவநாகரி லிபியில் உள்ள ஹிந்தியே அதுவாக இருக்கவேண்டும் என்று என்னிடம் சொல்லப்படுகிறது. இதற்கு நான் ஒருகாலும் சம்ம திக்கமாட்டேன். ஹிந்தி ஸாகித்திய சம்மேளனத்துக்கு நான் இரண்டு முறை அக்கிராசனராக இருந்திருக் கிறேன். ஹிந்திக்கோ உருதுவுக்கோ நான் எதிரி அல்ல என்பது தெளிவு. ஆனால், தேவநாகரி லிபியிலும் உருது லிபியிலும் எழுதப்படும் எளிய ஹிந்தியும் எளிய உருது வும்தான், அதாவது ஹிந்துஸ்தானிதான், பாமர மனிதனின் பாஷையாக, இந்தியாவின் பொது மொழி யாக இருக்க முடியும் என்பதை நான் உணர்கிறேன். முஸ்லிம்கள் இருக்கட்டும்; ஹிந்துக்கள் பலருக்குக் கூட சம்ஸ்கிருதமயமான ஹிந்தி புரிவதில்லை என்பதும், தேவநாகரி லிபியில் அவர்கள் எழுதமுடிவதில்லை என்பதும் எனக்குத் தெரியும். ஆகவே நான் தனித்து நிற்க நேர்ந்தாலும் ஹிந்துஸ்தானியை விடமாட்டேன்.

ஒரு அந்நிய மொழியின் வாயிலாக இந்தியாவில் உயர்நிலைக் கல்வி போதிக்கப்படுவதன் விளைவாக அறிவியல் ரீதியிலும் தார்மிக ரீதியிலும் நாட்டுக்கு அளவிட முடியாத தீங்கு ஏற்பட்டிருக்கிறது. நம் காலத்திலேயே இது நிகழ்வதால், எவ்வளவு பிரம் மாண்டமான நாசம் ஏற்பட்டிருக்கிறது என்பதை நம்மால் அளவிட இயலாது. இத்தகைய கல்வியையே பயின்றுள்ள நாம் அதனால் பாதிக்கப்பட்டவர்களாக வும், அதை எடைபோடுவோராகவும் ஏககாலத்தில் இருப்பது அநேகமாய் இயலாத காரியம். போதனை மொழியை உடனடியாக மாற்றவேண்டும், மாகாண பாஷைகளுக்கு அவற்றுக்கு உரித்தான ஸ்தானத்தை அளிக்கவேண்டும் ; இதனால் வேறு என்ன விளைவு ஏற்பட்டாலும் பரவாயில்லை. அன்றாடம் மேலும் மேலும் விரயம் அதிகரித்து வருவதை விட உயர்நிலைக் கல்வியில் தற்காலிகமான குழப்பம் ஏற்பட்டாலும் பெரிய காரியமில்லை என்று நினைக்கிறேன்.

சம்ஸ்கிருதப் படிப்பு புறக்கணிக்கப்படுவது வருந் தத்தக்கது. புராதன மொழிகளைக் கற்பது அவசியம் என்று கருதிய தலைமுறையைச் சேர்ந்தவன் நான். இவ்வாறு பயில்வதில் காலமும் உழைப்பும் விரயமாவ தாக நான் கருதவில்லை. நவீன பாஷைகளைக் கற்ப தற்கு அது உதவியாய் இருப்பதாக நம்புகிறேன். இந்தியாவைப் பொறுத்தவரை, வேறு எந்தப் புராதன பாஷையையும்விட சம்ஸ்கிருதம் இதற்கு அதிக உதவி யாக இருக்கிறது ; மாகாண மொழிகளைக் கற்பதை அது இலகுவாக்குவதால் அதை ஒவ்வொரு தேசிய வாதியும் கற்க வேண்டும். நம்முடைய முன்னோர்கள் சிந்தித்ததும் எழுதியதும் இந்த பாஷையில்தான். ஹிந்துப் பையன்களும் பெண்களும் தங்கள் மதத்தின்

உட்பொருளைக் கிரகித்துக் கொள்ள விரும்பினால், சம்ஸ்கிருத மொழியின் அடிப்படை அம்சங்களையாவது அறிந்து கொள்ள வேண்டும்.

* * * *

## 8. மாணவர்களுக்கு

இப்போதுள்ள நிலைமையில், மாணவர்கள் என்ன பணி செய்ய முடியும் என்பதையும், நாட்டுக்கு நாம் இன்னும் என்ன தொண்டு ஆற்ற முடியும் என்பதையும் பரிசீலிக்கவேண்டும். மாணவர்கள் ஆத்ம பரிசோதனை செய்து கொண்டு தங்கள் நற்குணத்தை வளர்க்க வேண்டும் என்பதே நானும், மாணவர் உலகம் நல்ல பணி புரியவேண்டும் என விரும்பும் மற்றவர்களும், இக் கேள்விக்கு அளிக்கக்கூடிய பதில். சிறந்த கல்வி பெறுவதற்கு அஸ்திவாரமாக இருப்பது தூய்மையான சொந்த வாழ்வுதான். ஆயிரக்கணக்கான மாணவர்களுடன் என்னுடைய சந்திப்புகளும், மாணவர்களுடன் இடையறுமல் நான் நடத்திவரும் கடிதப் போக்குவரத்தும்—கடிதங்களில் மாணவர்கள் என்னிடம் ஒளிக்காமல் தங்கள் அந்தரங்க உணர்ச்சிகளையெல்லாம் கொட்டுகிறார்கள் — இவ்விஷயத்தில் செய்ய வேண்டியது எவ்வளவோ பாக்கியிருக்கிறது என்பதைத் தெட்டத்தெளிவாகக் காட்டுகின்றன...நற்குணத்தை வளர்ப்பதுதான் உலக அறிவையெல்லாம் தேடுவதன் குறிக்கோள்.

கிறிஸ்தவ மதம், ஹிந்து மதம், உலகில் உள்ள மற்ற மகத்தான மதங்கள் ஆகியவற்றை நான் ஆராய்ந்தபோது, எண்ணற்ற மதங்களின் இடையே அடிப்படை ஒற்றுமை இழையோடுவதைக் கண்டேன்— சத்தியம், சீலம் என்பவையே அந்த ஒற்றுமையின் அம்சங்கள். கொல்லாமை, ஹிம்ஸை செய்யாமை என்பதே சீலத்தின் பொருள். பையன்களாகிய நீங்கள் சத்தியத்தையும் சீலத்தையும் உறுதியுடன் கடைப் பிடித்தால், உறுதியான அஸ்திவாரத்தின் பேரில் உங் கள் வாழ்க்கை நிருமாணிக்கப்பட்டிருப்பதை நீங்களே உணர்வீர்கள்.

வாய்மைதான் எல்லாப் பூட்டுக்களையும் திறக்கக் கூடிய சாவியாகும். எத்தகைய சந்தர்ப்பத்திலும் பொய் பேசாதீர். எதையும் மறைத்து வைக்கவேண் டாம், எல்லா விஷயங்களையும் உங்கள் உபாத்தியாயர் களிடமும் பெரியவர்களிடமும் ஒளிக்காமல் சொல்லி விடுங்கள். யாரிடமும் குரோதம் கொள்ளவேண்டாம், யாரைப்பற்றியும் புறங்கூறவேண்டாம். எல்லாவற்றை யும் விட முக்கியமாக "உங்களிடமே உண்மையாக இருங்கள்; அப்போதுதான் வேறு யாரிடமும் உண்மை யின்றி நடந்துகொள்ளமாட்டீர்கள். வாழ்வின் மிக அற்பமான விஷயங்களில் கூட உண்மையைக் கடைப் பிடிப்பதுதான் பரிசுத்த வாழ்வின் இரகசியமாகும்.

சிறுவர் சிறுமியர்களுக்கு நான் சொல்லக்கூடியது இதுதான்: கடவுள் நம்பிக்கையை ஒருகாலும் கை விடாதீர், அதேபோல் தந்நம்பிக்கையையும் இழக்காதீர்; ஒரே ஒரு தீய எண்ணத்துக்கோ பாபச் சிந்தனைக்கோ இடம் கொடுத்தால்கூட உங்களுக்கு நம்பிக்கையில்லை என்றே அர்த்தம். பொய்மை, கொடூரச் சித்தம், வன்முறை, புலன்வெறி ஆகியவையெல்லாம் அந்த

நம்பிக்கைக்கு அந்நியமானவை. இந்த உலகத்திலே நமக்கு நம்மையேவிடப் பெரிய விரோதிகள் இல்லை. பகவத்கீதை அநேகமாய் ஒவ்வொரு சுலோகத்திலும் இதைப் பறைசாற்றுகிறது. ஏசுநாதனின் மலை உபதேசத்தின் சாராம்சமும் இதுவேதான் என்பது என் கருத்து. குரானைப் படித்ததில் நான் கண்டுள்ள முடிவும் இதுதான். நாமே நமக்குத் தீங்கு செய்து கொள்வதற்குச் சமமாகவேறு யாராலும் செய்யமுடியாது. ஆகவே, நீங்கள் திரம் நிறைந்த பையன்களாகவும் பெண்களாகவும் இருந்தால், தீய சிந்தனைகளை எதிர்த்து ஆவேசமாகவும் வீரத்துடனும் போராடவேண்டும். பாபச் சிந்தனையின் தூண்டுதல் இல்லாமல் பாபச் செயல் எதுவும் இவ்வுலகில் எச்சமயத்திலும் நடந்ததில்லை. உங்கள் உள்ளத்திலே சுரக்கின்ற ஒவ்வொரு சிந்தனையையும் நீங்கள் கடுமையாகக் கண்காணிக்கவேண்டும்.

மத போதனை அளிப்பதற்கு எது சிறந்த வழி என்பதைக் கண்டறிவதற்காகப் பல பையன்களை வைத்து நான் சோதனை செய்து பார்த்திருக்கிறேன்; புத்தகப் போதனை ஒரு சகாயமாக இருந்தபோதிலும், அதை மாத்திரம் கையாள்வதில் பலனில்லை என்பதைக் கண்டேன். மதங்களைப் போலவே ஆசிரியர்களிடமும் போதனைகள் அடங்கியிருப்பதாகக் கண்டுபிடித்தேன். ஆசிரியர்கள் தங்களுக்குப் படித்துக் காட்டுகின்ற நூல்களிலிருந்தோ, வாயினால் நிகழ்த்தும் உரைகளிலிருந்தோ பெறும் போதனையைவிட ஆசிரியர்களின் சொந்த வாழ்க்கையிலிருந்தே பையன்கள் அதிகமாகக் கற்றுக் கொள்கின்றனர் என்பதைக் கவனித்தேன். ஆசிரியர்களின் எண்ணங்களைத் துருவி அறிந்து கொள்ளக்கூடிய அலாதி ஆற்றல் பையன்களிடமும் பெண்களிடமும் இருப்பதை நான் கண்டதும் பேரானந்தம் கொண்டேன்.

உதட்டளவில் ஒன்றைச் சொல்லிக் கொடுத்துவிட்டு நெஞ்சத்தில் வேறு எண்ணத்தைக் கொண்டுள்ள ஆசிரியர்பாடு திண்டாட்டமாகிவிடும்.

உங்கள் ஒழுக்கத்தை வளர்த்துக் கொண்டு, சிந்தனைகளையும் செயல்களையும் கட்டுப்படுத்திக் கொள்ளாவிட்டால், உங்கள் பாண்டித்தியம் எல்லாம், —ஷேக்ஸ்பியரையும் வேர்ட்ஸ்வொர்த்தையும் நீங்கள் படித்தது எல்லாம்,—வீண்தான். நீங்கள் தன்னடக்கம் பெற்று, உங்கள் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளத் தெரிந்து கொண்டால் பிறகு உங்களுக்கு நிராசையே ஏற்படாது.

நாம் ஒரு கிராமாந்தரக் கலாசாரத்தின் வாரிசுகள். நம் நாட்டின் பெரும் பரப்பு, நமது பெரிய மக்கள் தொகை. நாட்டின் ஸ்தானமும் தட்பவெப்ப நிலையும், ஆகியவை அதற்குக் கிராமாந்தர கலாசாரத்தையே விதித்திருக்கின்றன என்பது என் அபிப்பிராயம். அதில் உள்ள குறைபாடுகளை யாவரும் அறிவர். ஆயினும் அவைகளுள் எதுவும் நீக்க முடியாதது அல்ல. அதை வேரோடு பிடுங்கியெறிந்துவிட்டு, அதன் இடத்தில் நகரக் கலாசாரத்தை நிறுவுவது இயலாத காரியம்; முப்பது கோடி மக்களை முப்பது லட்சம் மக்களாக, அல்லது மூன்று கோடியினராகவாவது குறைப்பதற்குத் தீவிர நடவடிக்கை எடுக்க நாம் தயாராய் இருந்தால் தான் இது சாத்தியமாகும். ஆகவே, இப்போதைய கிராமாந்தர நாகரிகத்தை நிரந்தரமாகப் பாதுகாக்க வும், அதில் வெளிப்படையாகத் தெரியும் குறைகளை நீக்கவும் வேண்டும் என்ற ஊகத்தின் பேரில்தான் பரிகாரங்களை நான் குறிப்பிட முடியும். நாட்டின் இளைஞர்கள் கிராமாந்தர வாழ்க்கையை ஏற்றுக் கொண்டால்தான் இவ்வாறு செய்யமுடியும். அவர்கள்

இவ்வாறு ஏற்றுக் கொள்வதற்குப் பூர்வாங்கமாக, தங்கள் வாழ்வை மாற்றி அமைத்துக் கொள்ளவேண்டும்; விடுமுறை காலத்தில் ஒவ்வொரு நாளையும் தங்கள் கல்லூரிகளுக்கும் உயர்நிலைப்பள்ளிகளுக்கும் அருகாமையில் உள்ள கிராமங்களில் கழிக்கவேண்டும். படிப்பை முடித்துவிட்டவர்கள், அல்லது படிப்பின்றி இருப்பவர்கள் கிராமங்களிலேயே குடியமர்வதுபற்றி யோசிக்க வேண்டும். அவர்கள் கிராமங்களுக்குச் சென்றால் தொண்டு புரியவும், ஆராய்ச்சி செய்யவும், உண்மையான அறிவு பெறவும் வரம்பற்ற வாய்ப்புகள் கிடைக்கும். விடுமுறையின்போது பையன்களுக்கும் பெண்களுக்கும் பேராசிரியர்கள் பாட வேலைகளைக் கொடுக்காமல் இருப்பது நல்லது; மாறாக, கிராமங்களுக்குச் சென்று அறிவு திரட்டும் வேலைகளைக் கொடுக்க வேண்டும். விடுமுறை காலத்தை உல்லாசமாகக் கழிக்க வேண்டுமே தவிர, புத்தகங்களை மனப்பாடம் செய்வதில் கழிக்கக்கூடாது.

ஆயிரக்கணக்காக இருக்கும் ஹரிஜனங்களுக்குத் தொண்டாற்றுவதில் மாணவர்கள் தங்கள் ஓய்வு நேரத்தில் ஒரு பகுதியைப் பயன்படுத்த வேண்டும் ......ஓய்வு நேரத்தில் ஒத்தாசை செய்வதற்கு அதிகமான ஆட்கள் முன்வந்தால் அதிகமான பணியை நிறைவேற்ற முடிகிறது என்பது என்னுடைய அனுபவம் .......

சம்பளத்துக்கு ஆள் அமர்த்துவதன் மூலம் இந்தப் பிரச்சினையைத் தீர்க்க முடியாது. எவ்வளவு பணம் இருந்தாலும் இதை என்னால் சமாளிக்க முடியாது. இது உங்களுக்கே சிறப்பாக உரிய காரியம். பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் நீங்கள் பெற்றுள்ள கல்விக்கு ஒரு அக்கினிப் பரீட்சை இது. ஆங்கிலத்தில் பிழையின்றிப் பேசுவது உங்கள் தகுதிக்கு அளவுகோல் அல்ல .....ஏழை

பாமைகளுக்கு நீங்கள் தொண்டாற்றுவதுதான் உங்கள் திறமைக்கு அளவுகோல். 60 ரூபாய்க்கோ 600 ரூபாய்க்கோ நீங்கள் பெறக்கூடிய அரசாங்க உத்தியோகம் இத்தகைய அளவுகோல் அல்ல. நான் குறிப்பிடுகின்ற மனப்பான்மையுடன் இந்தப் பணியை நீங்கள் நடத்த வேண்டும். தினம் ஒரு மணி நேரம் இதற்காகச் செலவிட முடியாத மாணவன் ஒருவனைக்கூட நான் கண்டதில்லை. நீங்கள் நாட்குறிப்பு எழுதிவந்தால், வருஷத்தின் 365 நாட்களில் எத்தனை அருமையான மணிகள் விரயமாகின்றன என்பதைக் கண்டு கொள்வீர்கள். நீங்கள் கற்ற கல்வியை நன்கு பயன் படுத்த விரும்பினால் இந்தப் பணியில் கவனம் செலுத்த வேண்டும்..... இது கஷ்டமானது, ஆனால் மகிழ்ச்சி தரக் கூடியது. உங்கள் கிரிக்கெட்டையும் டென்னிஸையும் விட அதிகமான ஆனந்தத்தை இது அளிக்கும்... உங்கள் ஓய்வு வேளையில் குறிப்பிட்ட மணி நேரத்தை ஹரிஜன சேவையில் ஈடுபடுத்துவது என்று பிரதிக்ஞை செய்து கொள்ளும்படி வேண்டுகிறேன்.

உண்மையான சாரணர்கள் அனைவருக்கும் என் வாழ்த்துக்கள். உலகின் பல்வேறு பாகங்களில் நான் பயணம் செய்தபோது ஆயிரக்கணக்கான சாரணச் சிறுவர்களைச் சந்தித்திருக்கிறேன். உண்மையான சாரணர்கள் தீரமும் பரிவும், மரியாதையும் புத்திசாலித் தனமும் வாய்ந்தவர்கள். அவர்கள் தங்கள் கடமையை நன்கு உணர்ந்திருக்க வேண்டும். இலட்சக்கணக்கான மக்கள் கலந்து கொள்கின்ற எண்ணற்ற விழாக்களில் ஒழுங்கைப் பாதுகாப்பதற்கு அவர்கள் உதவி வருகின்றனர். அவர்கள் தங்கள் நேரத்தில் ஒரு பகுதியை ஹரிஜன சேவைக்கும் தரவேண்டும் என்று நான் விரும்பு கிறேன். ஹரிஜனக் குடியிருப்புகளை என்னுடைய நோக்குடன் பார்ப்பவர் எவரும் தொண்டு புரிவதற்கு

எவ்வளவோ அவசியம் இருக்கிறது என்பதை உணர்வார்; ஆவலும் ஆற்றலும் உள்ளவர்கள் எல்லோரும் இந்தப் பணியில் ஈடுபடலாம். இதற்கு அசாதாரணமான அறிவுக்கூர்மை தேவையில்லை. ஹரிஜனங்களை நம்மைப் போலவே கருதும் மனப்பான்மை இருந்தாலே போதும்.

வெகு அபூர்வமான சந்தர்ப்பங்களில் தவிர, மற்றப்படி மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்யக்கூடாது என்று நான் பன்முறை எழுதியிருக்கிறேன். அரசியல் ஆர்ப்பாட்டங்களிலும், கட்சி அரசியலிலும் மாணவர்கள் கலந்து கொள்வது முற்றிலும் தவறானது என்பது என் கருத்து. இத்தகைய கிளர்ச்சி கவனமான படிப்பில் குறுக்கிடுவதுடன், வருங்காலப் பிரஜைகளாக உருப்படியான பணி செய்வதற்கு மாணவர்களைத் தகுதியற்றவர் களாகவும் ஆக்குகிறது.

மாணவர்களிடம் எனக்கும், என்னிடம் அவர் களுக்கும் விசேஷச் சலுகை உண்டு. ஏனெனில், நான் இன்னமும் என்னை ஒரு மாணவனாகவே கருதுகிறேன்; அதோடு இந்தியாவுக்கு நான் திரும்பிய நாள்முதல் அவர்களுடன் நான் நெருங்கிய தொடர்பு கொண்டிருக் கிறேன், அவர்களுள் பலர் சத்தியாக்கிரக இயக்கத்தில் பணிபுரிந்திருக்கின்றனர். ஆகவே, தற்காலிகக் காரணங் களினால் மாணவர் உலகம் முழுவதும் என்னை ஒதுக்கினாலும், என் ஆலோசனை நிராகரிக்கப்படலாம் என்றாலும் அவர்களுக்கு ஆலோசனை கூறுவதை நான் நிறுத்தமாட்டேன்.

கட்சி அரசியலில் மாணவர்கள் ஈடுபடுவது சரியல்ல. பலவகைப் புத்தகங்களைப் படிப்பது போலவே, எல்லாக்

கட்சிகளின் கருத்துக்களையும் அவர்கள் கேட்கலாம்; ஆனால் எல்லாவற்றிலும் உள்ள உண்மையை மாத்திரம் கிரகித்துக் கொண்டு பாக்கியைத் தள்ளுவதுதான் அவர்கள் கடமை. அவர்கள் செய்யக்கூடிய கண்ணிய மான காரியம் இதுதான். ஆதிக்க அரசியல் என்ற ஒன்று இருப்பதாகவே மாணவர் உலகத்துக்குத் தெரியக்கூடாது. அதுபோன்ற துறையில் அவர்கள் ஈடுபட்டால் அவர்கள் பின்னர் மாணவர்களாக இருக்க முடியாது, நெருக்கடிக் காலத்தில் நாட்டுக்குப் பணி புரியவும் முடியாது...... ஆகவே, என்னுடைய புத்திமதியை நிராகரிக்குமுன் அவர்கள் ஐம்பது முறை சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

கேள்வி : இந்தியா சுயாட்சி பெற்றபின், கல்விக்கு எத்தகைய குறிக்கோள் இருக்கவேண்டும் என்று நினைக்கிறீர்கள் ?

பதில் : ஒழுக்கத்தை வளர்ப்பது (குறிக்கோளாக இருக்கவேண்டும்). தைரியம், வலிமை, நற்குணங்கள், மகத்தான காரியங்களுக்காகத் தன்னை மறந்து வேலை செய்வது என்ற பண்புகளை வளர்க்க முயலவேண்டும். எழுத்தறிவைவிட முக்கியமானது இது; இந்த மகத்தான குறிக்கோளுக்கு ஒரு சாதனம்தான் பாடப் படிப்பு.

* * *

# VII. தனிநபரின் வளர்ச்சிக்கு

"தன்னை இழப்பவன் இறைவனைக் காண்பான்" இந்த வாசகத்தின் பொருளை நாம் புரிந்துகொண்டால், பிறகு மேற்கொண்டு எதையும் தெரிந்து கொள்ள வேண்டியதில்லை... பின்னர் எல்லா வேலையையும் ஒருவர் தமக்காக மேற்கொள்ளாமல் எல்லோருடைய நலனுக்காகவும் மேற்கொள்வார்.

இந்தப் பிரம்மாண்டமான உலகத்திலே, மனிதனின் மிருக அம்சத்தை மாத்திரம் கவனித்தால், அவனுடைய நிலை மிகவும் அற்பமானதே, உடல் வலு சம்பந்தப்பட்டவரை அவன் ஒரு அற்பப் புழுதான். ஆனால் கடவுள் அவனுக்கு புத்தியையும், நல்லது—கெட்டதைப் பகுத்து அறியும் ஆற்றலையும் வழங்கியிருக்கிறார். ஆண்டவனை அறிந்து கொள்வதற்கு இந்த ஆற்றலை நாம் பயன்படுத்தினால், நாம் ஒரு ஆக்க சக்தி ஆகிவிடுவோம். அந்தத் திறனைத் துஷ்பிரயோகம் செய்தால் நாம் ஒரு தீயசக்தி ஆகிவிடுவோம். அந்நிலையில் நாம் ஒரு கொள்ளைநோய் போலாகி, பிளேக் நோய் போலாகி, உலகெங்கும் சண்டை, இரத்தக் களரி, துன்பம், கஷ்டம் ஆகியவற்றைப் பரப்புகிறோம்.

சாசுவதமான, உண்மையான எதையும் நாம் சாதிப்பதற்கு அஞ்சாமை என்பது இன்றியமையாத முதல் தேவை என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம். மத உணர்வு இல்லாமல் இந்தக்

குணத்தைப் பெறமுடியாது. நாம் கடவுளிடம் அஞ்சினால் மனிதர்களிடம் அஞ்சுவதை நிறுத்திவிடுவோம். நம்முள் ஒரு தெய்வீக சக்தி இருக்கிறது; நம் சிந்தனைகள், செயல்கள் அத்தனைக்கும் அது சாட்சியாக இருக்கிறது; அது நம்மைப் பாதுகாத்து மெய்ந்நெறியில் செலுத்துகிறது என்ற உண்மையை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு, கடவுளிடம் உள்ள பயம் தவிர இந்த உலகில் உள்ள வேறு எதனிடமும் நமக்குப் பயம் இல்லாமல் போய்விடும்.

ஆன்மிக ,வாழ்வுக்கு முதல் தேவை அஞ்சாமை தான். கோழைகள் ஒருகாலும் நல்லொழுக்கத்துடன் இருக்க முடியாது.

ஆன்மிக அறிவும், ஆன்மிகச் சாதனையும் ஒன்று தான் என்று நாம் சகஜமாகக் குழப்பிக் கொள்கிறோம். சாத்திரங்களைக் கற்பதும், தத்துவ வாதங்களில் ஈடுபடுவதும் ஆன்மிக வாழ்வு அல்ல. அது (ஆன்மிகம்) இதயப்பண்பாடு ஆகும், அளவிடமுடியாத வலிமை ஆகும்.

நாம் நல்ல முறையில் வாழவேண்டும் என்று கட்டளையிடப்பட்டிருக்கிறது; நமக்கு நன்மை ஏற்படும் என்பது இதற்குக் காரணம் அல்ல; இயற்கையின் நித்தியமான, மாற்றமுடியாத நியதி இது என்பதே காரணம்......நல்லது செய்யவேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக நல்வழியைக் கடைப்பிடிப்பதில்தான்

நற்செய்கை அடங்கியிருக்கிறது. நல்லது செய்யும் சக்தி வெளியிலிருந்து நம்மிடம் வருவதில்லை. அது எப்போதுமே நம்முள் இருக்கிறது. சரியான வழியில் அதை வளர்ப்பதுதான் நாம் செய்யவேண்டிய காரியம். மனித குலத்தின் நலனுக்காக நாம் தளராமல் பாடுபட வேண்டும் என்பதுதான் மிக உயர்ந்த தார்மிக நியதியாகும்.

நம்முடைய வார்த்தைகளுக்குப் பதில் நம்முடைய வாழ்க்கை நம் சார்பில் பேசுவதுதான் சிறந்தது...... நம்பிக்கை தன்னைப் பற்றிப் பேசப்படுவதை அனுமதிப்ப தில்லை. அதை வாழ்வில் காட்டவேண்டும், பிறகு அது தானாகவே பிரசாரம் செய்துகொள்ளும்.

தீமையிலிருந்து நன்மை விளைவதும் சகஜம். ஆனால் அது ஆண்டவனின் சித்தமே தவிர மனிதனின் சித்த மல்ல. நன்மையிலிருந்து நன்மை விளைவதைப்போல், தீமையிலிருந்து தீமைதான் விளையும் என்பதுதான் மனிதனுக்குத் தெரியும்.

நன்மைக்குப் பதில் நன்மை செய்வது வெறும் பேரம்தான், அதில் பெருமை எதுவும் இல்லை. ஆனால் நீங்கள் தீமைக்குப் பதில் நன்மை செய்தால் அது இரட்சிக்கும் சக்தியாகிவிடுகிறது. அதன் முன்னிலையில் தீமை மறைந்து விடும்; அது மேலும் மேலும் வளர்ச்சி யும் வேகமும் பெற்று எதிர்க்க முடியாத பெருஞ் சக்தி யாகிவிடுகிறது.

மகிழ்ச்சியின்றிச் செய்யும் தியாகம் எதுவும் தியாகமல்ல. தியாகத்துக்கும் உம்மணாமூஞ்சிக்கும் ஒத்துவராது. தியாகம் என்பது "புனிதப்படுத்தும்" செயலாகும். தன்னுடைய தியாகத்துக்காக அனுதாபம் தேடுபவன் மனிதர்களுள் கடைப்பட்டவன்தான். அந்தத் தியாகம் நிலைக்காது.

போராட்டத்தில், முயற்சியில், கஷ்டப்படுவதில் தான் ஆனந்தம் இருக்கிறது; வெற்றியில் அல்ல. ஏனெனில் இந்த முயற்சியிலேயே வெற்றி அடங்கியிருக்கிறது.

ஒருவன் அவனுடைய சிந்தனைகளினால்தான் உருவாகிறான்; அவன் எதை நினைக்கிறானோ அதுவாக மாறுகிறான்.

மகிழ்ச்சி என்பது ஒருவித மனநிலைதான்; ஒரு தலைமுறை காலத்துக்கு மேலாகக் கஷ்டமான வாழ்க்கையில் பழகிப்போன நான், என்னுடைய சூழ்நிலையிலிருந்து எனது மகிழ்ச்சியைப் பிரித்து வைத்துக் கொள்ள அறிந்துகொண்டிருக்கிறேன்.

சகோதர மனிதர்களின் நல்வாழ்வுக்காக ஒரு மனிதன் எந்த அளவுக்குப் பாடுபடுகிறானோ அதே அளவுக்குத்தான் அவனுக்குப் பெருமை ஏற்படுகிறது.

இஷ்டபூர்வமாகவும் மகிழ்ச்சியுடனும் செய்யும் வேலை ஒருகாலும் கஷ்டமாக இருக்காது.

ஒரு மனிதன் தன்னுடைய வேலையில் முழுமூச்சுடன் முனைந்திருந்தால் அவ்வேலை ஒரு சுமையாகத் தோன்றாது. ஆகவே அவனுக்குக் களைப்பும் ஏற்படாது. ஆனல், அதில் அவனுக்கு மகிழ்ச்சி இல்லாவிடில், சிறிது உழைப்புக்கூட மிகப் பெரிதாகத் தோன்றும். சிறையில் இருக்கும் ஒரு மனிதனுக்கு ஒருநாள் போவது ஒரு வருஷம் போவது மாதிரி இருக்கும்; போகிக்கு ஒரு ஆண்டு கூட ஒரு நாள்தான். முன்பு நான் ஐரோப்பிய இசையைக் கேட்டபோது சீக்கிரமே சலிப்பு ஏற்பட்டது; ஆனல் இப்போது அதை நான் ஓரளவு புரிந்து கொண்டு ரசிக்க முடிகிறது.

ஒருவரிடம் இயல்பாக உள்ள அடக்கம் ஒருகாலும் வெளிக்குத் தெரியாமல் இருக்க முடியாது; ஆனல் அவருக்கோ தம்மிடம் அது இருப்பதாகவே தெரியாது.

கேள்வி :—நம்மை ஒரு பூஜ்யமாக்கிக் கொள்ள வேண்டும் என்பதன் பொருள் என்ன ?

பதில் :—நல்ல பொருட்களை மற்றவர்கள் எல்லாம் பெற்ற பின்னர் தான் பெற்றுக் கொள்வது, ஒவ்வொருவருக்கும் தொண்டாற்றுவது, நன்றியை எதிர்பார்க்காமை, கஷ்டப்படுவதற்கு முதல் ஆளாக இருத்தல் என்பவை அதன் பொருள். இவ்வாறு

தம்மைப் பூஜ்யமாக்கிக் கொள்ளும் ஒருவர் எப்போதும் தம்முடைய கருமத்திலேயே கண்ணாக இருப்பார்.

தீரத்துடனும் மானத்துடனும் இறப்பது என்ற கலைக்குத் தனிப் பயிற்சி எதுவும் தேவையில்லை, கடவுளிடம் விறுவிறுப்பான நம்பிக்கை இருந்தாலே போதும்.

மனிதனும் அவனுடைய செயலும் இரு தனி விஷயங்கள். நல்ல செயலுக்குப் பாராட்டும், தீய செயலுக்குக் கண்டனமும் அவசியம் என்றாலும், அதைச் செய்தவன் நல்லவனாக இருந்தாலும் கெட்டவனாக இருந்தாலும், அவனுடைய செயலைப் பொறுத்து, அவனிடம் எப்போதும் மரியாதையோ இரக்கமோ காட்டவேண்டும்.

வாழ்வின் ஒரு துறையில் தவறான முறையில் செயலாற்றும் மனிதன், இன்னொரு துறையில் நல்ல முறையில் செயலாற்ற முடியாது. வாழ்க்கை என்பது பிரிக்க முடியாத ஒரு முழுப் பொருள்.

ஒருவர் மற்றவரைவிடத் தம்மை உயர்ந்தவராகவோ தாழ்ந்தவராகவோ கருதும்வரை சமத்துவம் ஏற்பட முடியாது, சமமானவர்கள் ஒருவருக்கு ஒருவர் வள்ளலாக நடந்து கொள்ள முடியாது.

நம்முடைய எதிரிகள் ஸ்தானத்தில் நாம் இருந்து கொண்டு விஷயங்களைக் கவனித்தால், அவர்களிடம் நாம் முழு நியாயத்துடன் நடந்து கொள்வது சாத்திய மாகும். இதற்குப் பற்றற்ற மனப்பான்மை தேவை என்பதும், அந்நிலையை அடைவது மிகக் கஷ்டம் என்பதும் எனக்குத் தெரியும். எனினும், ஒரு சத்தியாக் கிரகிக்கு அது அத்தியாவசியமானது. நம்முடைய எதிரி களின் ஸ்தானத்தில் நம்மை வைத்துக் கொண்டு அவர் களுடைய அபிப்பிராயத்தைப் புரிந்து கொண்டால் உலகத்தின் கஷ்டங்களிலும் துயரங்களிலும் முக்கால் பங்கு மறைந்து விடும்; அப்போது நாம் நம்முடைய எதிரிகளுடன் சட்டென்று உடன்படுவோம், அல்லது அவர்களிடம் தாராள மனப்பான்மையுடன் நடந்து கொள்வோம்.

இன்னொருவரின் எண்ணங்கள் கெட்டவை என்றும், நம்முடைய எண்ணங்களே நல்லவை என்றும், நம்மிட மிருந்து மாறுபட்ட அபிப்பிராயங்களைக் கொண்டவர் கள் நாட்டின் விரோதிகள் என்றும் கூறுவது ஒரு கெட்ட பழக்கமாகும்.

நம்மிடம் கண்ணியமும் தேசாபிமான நோக்கங் களும் இருப்பது போலவே நம்முடைய எதிரிகளிடமும் இருப்பதாக எண்ணி அவர்களைக் கௌரவிப்போமாக.

நான் பலமுறை ஏமாற்றப்பட்டிருக்கிறேன் என்பது உண்மைதான். எத்தனையோ பேர் என்னை ஏமாற்றி

யிருக்கிறார்கள்; எத்தனையோ பேர் சோடை போயிருக்கிறார்கள். ஆனால் அவர்களுடன் தொடர்பு கொண்டது பற்றி நான் வருந்தவில்லை. ஏனெனில், எவ்வாறு ஒத்துழைக்கலாம் என்பதைப் போலவே எவ்வாறு ஒத்துழையாமல் இருக்கலாம் என்பதும் எனக்குத் தெரியும். மற்றவர்கள் சொல்வதை நம்பாதிருப்பதற்கு உருப்படியான காரணம் இல்லாவிடில், அதை நம்புவது தான், உலகில் வாழ்வதற்கு மிகவும் காரியசாத்தியமான, மிகவும் கண்ணியமான வழியாகும்.

பிறருக்கு இதமாக எடுத்துச் சொல்லி, அவர்களுடைய புத்தியையும் உணர்ச்சியையும் கவர்ந்து அவர்களை நம் வழிக்கு மாற்றுவதுதான் எப்போதுமே நம்முடைய கோட்பாடாக இருக்க வேண்டும். ஆகவே, நம்முடன் மாறுபடுவோரிடம் நாம் எப்போதுமே மரியாதையாகவும் பொறுமையுடனும் நடக்கவேண்டும். நம்முடைய எதிரிகளை நாட்டின் எதிரிகளாகக் கருதுவதற்கு நாம் திட உறுதியுடன் மறுக்கவேண்டும்.

தவறு செய்வது மோசமான காரியம். ஆகவே, அது குறித்து நாம் வெட்கப்படவேண்டும். ஆனால், தவற்றை ஒப்புக்கொண்டு மன்னிப்புக் கேட்பதுதான் நல்ல காரியம், ஆகவே இதற்கு வெட்கப்படக்கூடாது. தவற்றுக்கு மன்னிப்புக் கேட்பதில், இனித் தவறு செய்யாதிருக்கும் உறுதியும் அடங்கியிருக்கிறது. இவ்வாறு உறுதிகொள்வது வெட்கத்துக்குரியதா ?

தவறு செய்வது மனித இயல்பு. தவறுகளை ஒப்புக் கொள்வதன் மூலம், முன்னேற்றத்துக்கான படிக்கட்டாக

அவற்றை மாற்றிக் கொள்கிறோம். இதற்கு மாறாக, ஒருவர் தம்முடைய தவறுகளை மறைக்க முயன்றால், அவர் மோசடியின் உருவமாகிவிடுவார், இழிவடைவார்.

ஒப்புதல் வாக்குமூலம் பெறுவதற்கு உரிமையுள்ளவரின் முன்னிலையில், நம் பாபத்தை ஒப்புக் கொண்டு, மறுபடியும் அதைச் செய்யாதிருப்பதாக வாக்குறுதி அளிப்பதுதான், மிகத் தூய்மையான கழிவிரக்கமாகும்.

தூசியைப் பெருக்கித் தள்ளித் தரையை முன்னை விடச் சுத்தமாக்குகின்ற துடைப்பம் போன்றது தவற்றை ஒப்புக்கொள்ளும் செய்கை. நமக்கு நாமே பொய்யர்களாக இருப்பதைவிட உலகத்திற்குப் பொய்யர்களாகத் தோற்றமளிப்பது கோடி மடங்கு உயர்வானது.

தவறுகளை ஒப்புக்கொள்ள மறுப்பதைவிடப் பெரிய அவமானம் வேறு இல்லை.

மனிதகுலத்துக்குத் தொண்டாற்றுவதாகச் சொல்லிக் கொள்பவர் தம்முடைய சேவையைப் பெறுவோரிடம் கோபப்படாமல் இருப்பது அவருடைய கடமை.

ஆவேசமான ஈடுபாடும், பரிபூரணமான பற்றின்மையும் எல்லா வெற்றிகளுக்கும் திறவுகோலாகும்.

நீங்கள் போராடத்தான் வேண்டுமென்றால் அற நெறியில் நின்று போராடுங்கள்; அப்போது கடவுள் உங்கள் பங்கில் இருப்பார். உங்களைப் பரிசுத்தப்படுத்திக் கொள்ளுதல், நீங்களே கஷ்டத்தை அனுபவித்தல் என்ற வழியைத் தவிர, உங்கள் உரிமைகளைப் பெறுவதற்கு வேறு ராஜபாட்டை எதுவும் இல்லை.

உண்மையான சுய கட்டுப்பாடு என்றால் அது ஒருவருக்குத் தெம்பு ஊட்டவேண்டும். அச்சத்தையோ துக்கத்தையோ ஏற்படுத்தினால் அது இயந்திரகதியானது தான், அல்லது மேலெழுந்தவாரியானதுதான்.

மனிதன் எப்போதுமே பூரணமற்றவனாகத்தான் இருப்பான்; பூரண நிலையை அடைவதற்காக அவன் எப்போதும் முயன்று கொண்டிருக்கவேண்டும்.

சரியான அகப்பார்வை இருக்கும்போதுதான் உண்மையான அழகுள்ள படைப்புகள் தோன்றுகின்றன. வாழ்க்கையில் இத்தகைய சந்தர்ப்பங்கள் அபூர்வ மாகவே ஏற்படுகின்றன என்றால், கலைத்துறையிலும் அவை அபூர்வம்தான்.

மூளையின் வழியாக இதயத்திலும் உண்மை இறங்க வேண்டும் என்பதற்காக அதை நான் அழுத்தமாக வலி யுறுத்துகிறேன். மூளையில் மாத்திரம் அது தங்கியிருந்

தால் மூளைக்கு வெறும் பாரமாகவே இருக்கும். மூளைக்குக் கிடைக்கும் எந்த உண்மையையும் உடனடியாக நெஞ்சுக்கு அனுப்பிவிடவேண்டும் இவ்வாறு செய்யாவிடில், அந்த உண்மை குறைப் பிரசவமாகி, மூளையில் நச்சுப் பொருளாகத் தங்கிவிடும். மூளையை நச்சு மயமாக்குவதுடன் உடலமைப்பு முழுதையுமே நச்சு மயமாக்கிவிடும். ஆகவே மூளையைத் தகவலறிவிப்பு நிலையமாகவே பயன்படுத்தவேண்டும். அது பெறுகின்ற எந்தத் தகவலையும், உடனடியாக நடவடிக்கை எடுப்பதற்காக, இருதயத்துக்கு அனுப்பவேண்டும், அல்லது அனுப்ப இலாயக்கற்ற தகவல் என்று அந்தக் கணத்திலேயே அதை நிராகரித்துவிடவேண்டும். இந்த அலுவலை மூளை சரிவரச் செய்யாமையால்தான் உடலோடு ஒட்டிய பல்வேறு தீமைகளும் மனச்சோர்வும் ஏற்படுகின்றன.

ஒருவகை ஆட்கள் இருக்கிறார்கள்; நம்முள் பலரும் இந்த வகையைச் சேர்ந்தவர்களே. இந்த ஆட்கள் படிப்பு படிப்பு என்று படித்துக் கொண்டேயிருக்கிறார்கள்; தங்கள் சிந்தனை சக்தியை இழக்கும் வரை படிக்கிறார்கள். படிப்பதை நிறுத்திவிட்டு முன்பு தாங்கள் படித்தவைகளைச் சிந்தித்துப் பார்க்கவேண்டும் என்பது இத்தகைய பேர்களுக்கு நான் கூறும் யோசனையாகும்.

காமத்தை வெல்வதுதான் ஒரு ஆண் அல்லது பெண்ணினுடைய வாழ்வின் மிக உன்னதமான முயற்சியாக இருக்கவேண்டும். காமத்தை ஒடுக்காமல் மனிதன் தன்னைத்தானே அடக்கியாள முடியாது. தன்னை அடக்கி ஆளாவிடில் சுயராஜ்யமோ ராம ராஜ்யமோ ஏற்பட

முடியாது. ஒவ்வொருவரும் தம்மை அடக்கி ஆளாமல் எல்லோரும் சேர்ந்து ஆளலாம் என்பது, வர்ணம் பூசிய மாம்பழப் பொம்மையைப் போல ஏமாற்றத்தையே தரும். இந்தப் பொம்மை பார்ப்பதற்கு அழகாக இருந்தாலும் உள்ளே காலியாக இருக்கும். காமத்தை வெல்லாத ஊழியர் எவரும், ஹரிஜன இயக்கம், வகுப்பு ஒற்றுமை, காதி, பசுப்பாதுகாப்பு, அல்லது கிராமப் புனரமைப்பு போன்ற எந்த இலட்சியத்துக்கும் உண்மை யான தொண்டு ஆற்ற முடியாது. இத்தகைய மகத் தான இயக்கங்களில் சேவை செய்வதற்கு அறிவாற்றல் மாத்திரம் போதாது; ஆன்மிக முயற்சி அல்லது ஆன்மிக பலமும் தேவை. ஆன்ம பலம் இறையருளினுல்தான் கிடைக்கும்; காமத்தின் அடிமையாக உள்ள ஒருவனுக்கு ஆண்டவனின் அருள் சுரக்காது.

பிரம்மச்சரியம் என்பதன் இலக்கணத்தை, பொருளை, இப்போது பார்ப்போம். பிரம்மத்துடன் (கடவுளுடன்) ஒருவரைச் சம்பந்தப்படுத்துகின்ற நடத்தை என்பதை அதன் மூலப் பொருளாகக் குறிப் பிடலாம்.

எல்லாப் புலன்களையும் பூரணமாக அடக்குவது இந்த நடத்தையில் அடங்கியிருக்கிறது. அந்தச் சொல்லின் உண்மையான, பொருத்தமான அர்த்தம் இதுதான்.

ஜனன இந்திரியத்தை ஸ்தூல முறையில் கட்டுப் படுத்துவதுதான் பிரம்மச்சரியம் என்று பொதுவாக ஜனங்கள் கருதுகின்றனர். இந்தக் குறுகிய பொருள் பிரம்மச்சரியத்தை இழிவுபடுத்தியிருப்பதுடன் அதைக் கடைப்பிடிப்பதை அநேகமாய் இயலாத காரியமாகவும் ஆக்கிவிட்டது. எல்லாப் புலன்களையும் கட்டுப்படுத் தாமல் ஜனன இந்திரியத்தை மாத்திரம் கட்டுப்படுத்து

முடியாது. எல்லா இந்திரியங்களும் பரஸ்பரச் சார் புள்ளவை. சாதாரண மனமும் இந்தப் புலன்களுள் அடங்கியதுதான். மனத்தைக் கட்டுப்படுத்தாமல், உடலுறுப்பை மாத்திரம் கட்டுப்படுத்துவது சில காலத் துக்குச் சாத்தியமானாலும் கூட, அதனால் அற்பப் பயனே கிடைக்கும், அல்லது பயனே கிடைக்காது.

சிந்தனை, சொல், செயல் ஆகியவை எல்லாவற்றிலும் பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்கவேண்டும். மனத் தைத்தறி கெட்டுத் திரியவிட்டுவிட்டு உடம்பை மாத்திரம் ஒடுக்குவதால் தீங்கு ஏற்படக்கூடும். மனம் எங்கே திரிகிறதோ அங்கே உடலும், சீக்கிரமோ தாமதித்தோ, போய்ச் சேர்ந்துவிடும்.

இங்கு ஒரு பாகுபாட்டைக் கவனிக்கவேண்டும்: தூய்மையற்ற சிந்தனைகளுக்கு இடம் கொடுக்குமாறு மனத்தை அனுமதிப்பது என்பது ஒரு விஷயம். நம்மை யும் மீறி அச்சிந்தனைகளில் அது திரிவது என்பது முற்றி லும் வேறு விஷயம்; கெட்டுத் திரியும் மனத்தினுடன் நாம் ஒத்துழைக்காமல் இருந்தால் இறுதியில் வெற்றி பெறுவோம்.

பூரணத் துறவு, பூரண பிரம்மச்சரியம் என்பது இலட்சிய நிலையாகும். அதை நினைத்துப் பார்க்கவே உங்களுக்குத் துணிவு இல்லாவிடில் தாராளமாகத் திருமணம் செய்து கொள்ளுங்கள்; ஆனால், அதன் பின்னரும் தன்னடக்கத்துடன் வாழுங்கள்.

பாலுணர்ச்சி என்பது அருமையான, உன்னதமான விஷயமாகும். அது குறித்து வெட்கப்படவேண்டியதே

யில்லை. ஆனால் சிருஷ்டிச் செயலுக்காக மாத்திரமே அது ஏற்பட்டிருக்கிறது. அதை வேறு விதத்தில் பயன் படுத்துவது கடவுளுக்கும் மனித குலத்துக்கும் எதிராகச் செய்யும் பாபமாகும்.

மிருக இச்சையில் ஈடுபடுவது அவசியம்தான் என்றும், அதில் தீங்கோ பாபமோ இல்லை என்றும் நாம் நம்பத்தொடங்கினால், பிறகு அதன் வேகத்திற்கு இடம் கொடுப்போம்; அதை எதிர்க்கச் சக்தியற்றவர்களாகி விடுவோம். ஆனால், இவ்வாறு ஈடுபடுவது தீயது, பாபகரமானது, அனாவசியமானது என்றும், அதைக் கட்டுப்படுத்தவேண்டும் என்றும் நம்புவதற்கு நாம் கற்றுக்கொண்டால், நம்மை அடக்கிக் கொள்வது சாத்தியமே என்பதைப் பின்னர் கண்டுகொள்வோம்.

பிரம்மச்சரியம் இல்லாத வாழ்க்கை சுவையற்றதாக, மிருகத்தனமானதாக எனக்குத் தோன்றுகிறது. தன்னடக்கம் இல்லாதிருப்பது மிருகத்தின் இயற்கையான குணம். தன்னை அடக்கிக் கொள்ளும் சக்தி மனிதனுக்கு உண்டு என்பதால்தான், எந்த அளவுக்கு அடக்கிக் கொள்கிறானோ அந்த அளவுக்குத்தான், மனிதன் மனிதனாக இருக்கிறான். பிரம்மச்சரியத்தை நம்முடைய மத நூல்கள் அளவுக்கு மீறிப் போற்றியிருப்பதாக முன்பு நான் நினைத்தேன். ஆனால், அந்த ஏற்றமெல்லாம் முற்றிலும் சரியானது என்றும், அனுபவ பூர்வமானது என்றும் இப்போது நாளுக்கு நாள் அதிகத் தெளிவுடன் எனக்குத் தோன்றுகிறது.

சிந்தனை, சொல், செயல் ஆகியவற்றில் பூரணக் கட்டுப்பாட்டுடன் வாழ்ந்தால்தான் ஆன்மிகப்

பரிபக்குவ நிலையை அடைய முடியும். இத்தகைய அடக்கம் உள்ள மனிதர்களைப் பெற்றிராத தேசிய சமுதாயம் எதுவும் ஏழைதான்.

திருமணமானவர்கள் திருமணத்தின் உண்மையான நோக்கத்தைப் புரிந்து கொள்ளவேண்டும்; இனவிருத்திக்காக ஒரு குழந்தையைப் பெறுவதற்குத் தவிர மற்றப்படி பிரம்மச்சரிய நியதியை அவர்கள் மீறக் கூடாது.

இது செயற்கரிய காரியம், ஆனால் கஷ்டங்களையும் ஆசைகளையும் எதிர்த்துப் போராடி வெற்றி பெறுவதற்காகவே நாம் இந்த உலகில் பிறந்திருக்கிறோம்; இவ்வாறு செய்வதற்கு மனவுறுதி இல்லாதவர், உண்மையான ஆரோக்கியம் என்ற மகோன்னத வரப் பிரசாதத்தை ஒருகாலும் அனுபவிக்க முடியாது.

பிரம்மச்சரியத்தின் குறுகிய விளக்கம் காரணமாக மிகுந்த தீங்கு ஏற்பட்டிருப்பதாக நான் எப்போதுமே நினைத்து வந்திருக்கிறேன். எல்லாத் துறைகளிலும் ஏககாலத்தின் தன்னடக்கத்தைக் கடைப்பிடித்தால், அது விஞ்ஞான ரீதியான முயற்சியாக இருக்கும், வெற்றியும் பெறக்கூடும். ஒருவேளை, நாக்குத்தான் (உணவுரசனை) பிரதான குற்றவாளியாக இருக்கக் கூடும்.

நாக்கைக் கட்டுப்படுத்துவதற்கும் பிரம்மச்சரியத்துக்கும் மிக நெருக்கமான தொடர்பு உண்டு. நாக்கைக்

கட்டுப்படுத்தினால், பிரம்மச்சரியத்தை அனுஷ்டிப்பது மிகவும் சுலபமாகிவிடுகிறது என்பது என் அனுபவம்.

கடந்த காலத் தவறுகளை மறந்துவிட்டு, பரிசுத்த மாக வாழத்தொடங்கும் சிரத்தையுள்ள மனிதன் அதன் நற்பலனை உடனடியாகப் பெறமுடியும். உண்மை யான பிரம்மச்சரியத்தைச் சிறிது காலத்துக்குக் கடைப் பிடிப்பவர்கள் கூட, தங்கள் உடலும் உள்ளமும் மேலும் மேலும் வலிமையும் ஆற்றலும் பெறுவதைக் காண்பார் கள்; பிறகு, என்னவானாலும் சரி, இந்தக் கருவூலத்தை இழக்க அவர்கள் விரும்பமாட்டார்கள்.

இந்த உலகத்தினிடம் தான் பட்ட கடனைத் தீர்ப்ப தற்காகவே—அதாவது, ஆண்டவனுக்கு நேரடியாகத் தொண்டாற்றுவதற்காகவும் அவருடைய சிருஷ்டிகளுக் குச் சேவை செய்வதன் வாயிலாக அவருக்குப் பணிபுரி வதற்காகவும்—மனிதன் இந்த உலகத்துக்கு வந்தான். இந்தக் கருத்தை நினைவில் கொண்டு, தன்னுடைய உடம்பின் காவலனாக மனிதன் நடந்து கொள்ள வேண்டும். சேவை புரியும் இலட்சியத்தை முழுத் திறனுடன் கடைப்பிடிப்பதற்கு வசதியாகத் தன் னுடைய உடலைப் போதிய அளவு பராமரிப்பது அவ னுடைய கடமையாகிறது.

வாழ்வும் சாவும் ஒரே நாணயத்தின் இருபுறங்கள் தாம்; நாம் மகிழ்ச்சியுடன் வாழ்வதைப் போலவே மகிழ்ச்சியுடன் இறக்கவும் வேண்டும்; எனினும், உயிர்

இருக்கும்வரை உடம்புக்கு உரிய பராமரிப்பு அளிப்பது அவசியம். ஆண்டவன் நம்மிடம் ஒப்படைத்துள்ள பொறுப்பு அது. நியாயமான அளவு அதை நாம் பேண வேண்டும்.

தன்னுள்ளே யிருக்கும் ஆன்மாவின் பரிணாமத்தில் முக்கிய பங்கு வகிக்கும் உடம்பு பற்றிய நடைமுறை விவரங்களைச் சாமானிய மனிதர்கள் தெரிந்துகொள்வது அவசியம். ஆயினும், நம்முடைய உடம்புகள் சம்பந்தமாக நம்மிடம் உள்ள படுமோசமான அலட்சியத்துக்கும் அறியாமைக்கும் ஈடாக வேறு எது சம்பந்தமாகவும் இல்லை. உடலை ஆண்டவனின் ஆலயமாகப் பயன்படுத்தாமல், புலனுகர்ச்சிக்குரிய சாதனமாகப் பயன்படுத்துகிறோம்; புலனுகர்ச்சியை அதிகரிப்பதற்காகவும், உடல் என்ற மண்கூட்டைத் துஷ்பிரயோகம் செய்வதற்காகவும் நாம் வெட்கமின்றி வைத்தியர்களின் உதவியை நாடி ஓடுகிறோம்.

கடவுளின் நியதிகளுக்குக் கீழ்ப்படிவதன் மூலமும், சைத்தானின் சக்தியை நிராகரிப்பதன் மூலமுமே முழு ஆரோக்கியத்தைப் பெற முடியும். உண்மையான ஆரோக்கியம் இல்லாமல் உண்மையான சந்தோஷத்தை அனுபவிக்க முடியாது; நாக்கைக் கடுமையாகக் கட்டுப்படுத்தாமல் உண்மையான ஆரோக்கியத்தைப் பெற முடியாது. நாக்கைக் கட்டுப்படுத்திவிட்டால் பிறகு மற்றப் புலன்கள் எல்லாம் தாமாகவே கட்டுப்பட்டுவிடும். புலன்களை வென்றவர், உண்மையாகவே உலகத்தை வெல்வார், அவர் கடவுளின் அம்சமாகிவிடுகிறார்.

மனித உடலைக் கடவுளின் உறைவிடம் என்று எல்லா மதங்களும் ஒருமுகமாகக் கருதுகின்றன. உடம்பின் உதவியுடன் கடவுளுக்கு நாம் பயபக்தியோடு தொண்டாற்ற வேண்டும் என்ற ஒப்பந்தத்தின் பேரி லேயே நமக்கு இந்த உடம்பு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை உள்ளும் புறமும் தூயதாகவும் மாசின்றியும் வைத்துக் கொள்வது நம்முடைய கடமை; இவ்வாறு செய்தால்தான், அது நமக்குக் கிடைத்தபோது இருந்த அதே தூய்மையுடன், அதைக் கொடுத்தவரிடம் உரிய காலத்தில் நாம் அதைத் திரும்ப ஒப்படைக்க முடியும். ஆண்டவனுக்குத் திருப்தி ஏற்படும் விதத்தில் ஒப்பந்த நிபந்தனைகளை நாம் நிறைவேற்றினால், அவர் நமக்கு நிச்சயமாகச் சம்மானம் அளிப்பார், நம்மைச் சிரஞ்சீவி களாக்குவார்.

உடம்பு நல்ல பணியாளாக இருக்க முடியும், ஆனால் அது நம் எஜமானனாகிவிட்டால், அதன் தீய சக்திகளுக்கு அளவே இருக்காது.

நம்முடைய தேவைகளைத் திட்டவட்டமாக, இஷ்ட பூர்வமாகக் குறைத்துக் கொள்வதுதான் 'நாகரிகம்' என்ற சொல்லின் உண்மையான பொருள், தேவைகளைப் பெருக்கிக் கொண்டு போவதல்ல. இவ்வாறு குறைத்துக் கொள்வதுதான் உண்மையான சந்தோஷத்தையும் திருப்தியையும் அளிக்கும், தொண்டு புரியும் சக்தியை அதிகரிக்கும்.

ஓரளவு தேக சௌகரியமும் வசதியும் அவசியம் தான்; ஆனால் அது அளவுக்கு மேல் போய்விட்டால்

உதவிக்குப் பதில் உபத்திரவமே செய்யும். ஆகவே எண்ணற்ற தேவைகளை ஏற்படுத்திக் கொண்டு அவற்றைப் பூர்த்திசெய்து கொள்ளவேண்டும் என்ற இலட்சியம் ஒரு மாயைதான், மயக்குத்தான் என்று தோன்றுகிறது. சொந்த அறிவுத் தேவைகள் உட்பட, ஒருவருடைய உடல் தேவைகளைத் திருப்தி செய்து கொள்வது ஒரு அளவை எட்டியவுடன் அடியோடு நின்றுவிடவேண்டும்; இல்லாவிடில் அவை உடலின்ப வேட்டையாகவும் அறிவு வேட்டையாகவும் இழிந்து விடும். மனித உலகத்துக்குச் சேவை செய்வதற்குக் குந்தகம் ஏற்படாத விதத்தில் ஒருவர் தம்முடைய உடல் நலனையும், கலாசாரத்தையும் வாழ்வையும் ஒழுங்குபடுத்திக் கொள்ளவேண்டும். இவ்வாறு சேவை செய்வதில்தான் தம்முடைய ஆற்றல்களை எல்லாம் அவர் ஒருமுகமாக ஈடுபடுத்த வேண்டும்.

மனிதன் தன்னுடைய அன்றாடத் தேவைகளைப் பெருக்கிக் கொள்வதற்கு ஆசைப்பட்டால், அந்தக் கணத்திலிருந்து, 'எளிய வாழ்வு, உயரிய சிந்தனை' என்ற இலட்சியப் பாதையிலிருந்து சரிந்து விடுகிறான். சரித்திரத்தில் இதற்கு எவ்வளவோ சான்று இருக்கிறது. போதும் என்ற மனம்தான் மனிதனுக்கு உண்மையான இன்பம் அளிக்கும். ஒருவனிடம் எவ்வளவுதான் செல்வம் இருந்தாலும், திருப்தி இல்லாவிடில் அவன் தன் ஆசைகளுக்கு அடிமையாகி விடுகிறான். உண்மையாகவே ஆசைகளுக்கு ஈடான அடிமைத்தனம் வேறு இல்லை. மனிதன் தனக்குத்தானே உற்ற நண்பனாகவும் இருக்கலாம், கொடிய விரோதியாகவும் இருக்க முடியும் என்று எல்லாத் தீர்க்கதரிசிகளும் பறைசாற்றியிருக்கிறார்கள். சுதந்திரமாக இருப்பதா, அல்லது அடிமையாக இருப்பதா என்பது அவனுடைய இஷ்டத்தையே பொறுத்திருக்கிறது. தனிநபர் பற்றிய இந்த உண்மை சமூகத்துக்கும் பொருந்தும்.

சத்திய உபாசகனுக்கு உரிய நெறியில் மௌன விரதமும் ஒரு பகுதியாகும் என்பது அனுபவரீதியாக நான் பெற்றுள்ள படிப்பினை; உணர்ந்தோ, உணராமலோ, உண்மையை மிகைப்படுத்தவும், மறைக்கவும், மாற்றவும் விரும்புவது மனிதனின் இயற்கையான பலவீனமாகும்; அதை அடக்குவதற்கு மௌன விரதம் அவசியம்.

குறைவாகப் பேசுகின்ற ஒருவர் சிந்தனையின்றிப் பேசுவது மிகவும் அபூர்வம்: அவர் ஒவ்வொரு வார்த்தையையும் எடைபோட்டே பேசுவார்.

என்னுடைய உடம்புக்கும் ஆன்மாவுக்கும் மௌன விரதம் இப்போது அத்தியாவசியமாகிவிட்டது. வேலைப் படபடப்பைக் குறைப்பதற்காக அதை முதலில் மேற்கொண்டேன். பின்னர், எழுதுவதற்கு அவகாசம் பெறுவதற்கு அது பயன்பட்டது. ஆனால், சிறிது காலம் அனுஷ்டித்த பின்னர், அதன் ஆன்மிகப் பலனைக் கண்டு கொண்டேன். அந்த (மௌன விரத) நேரம்தான் கடவுள் தியானத்தில் லயிப்பதற்கு மிகவும் ஏற்றகாலம் என்ற எண்ணம் என் உள்ளத்தில் திடீரெனப் பளிச்சிட்டது. மௌனமாக இருக்கும் இயல்புடனேயே நான் படைக்கப்பட்டிருக்கலாம் என்றுகூட இப்போது தோன்றுகிறது.

பேசும் ஆற்றல் இருந்தபோதிலும், அனாவசியமாக ஒரு வார்த்தைகூடப் பேசாமல் இருப்பவர்தான் உண்மையான மௌனி.

★ ★ ★ ★

# VIII. மனிதக் குடும்பம்

இந்தியாவுக்குச் சேவை செய்யும் பணிவுள்ள ஊழியன் நான்; இந்தியாவுக்குத் தொண்டாற்றுவதன் வாயிலாக மனிதகுலம் முழுவதற்கும் நான் தொண்டாற்றுகிறேன்......ஒருவர் தம்முடைய நாட்டுக்குச் சேவை செய்வதற்கும் உலக சேவைக்கும் இடையே முரண்பாடு இல்லை என்ற சித்தாந்தத்தில் எனக்குள்ள நம்பிக்கை வளர்ந்திருக்கிறது என்பதைச் சுமார் ஐம்பது ஆண்டுப் பொது வாழ்வுக்குப் பின் கூற முடிகிறது. அது ஒரு நல்ல சித்தாந்தம். அதை ஏற்றுக் கொண்டால்தான் உலக நிலைமை அபிவிருத்தியடையும், நம்முடைய பூமியில் உள்ள நாடுகள் இடையே நிலவும் பரஸ்பரப் பொறாமைகள் மறையும்.

இந்திய மக்களின் மத்தியில் கடவுள் என்னைப் பிறப்பித்திருக்கிறார். ஆகவே அவர்களுக்கு நான் தொண்டு புரியாவிடில் என்னுடைய சிருஷ்டிகர்த்தா வுக்குத் துரோகம் செய்தவனாவேன். அவர்களுக்கு எவ்வாறு சேவை செய்வது என்பதை நான் அறியாவிடில், மனித குலத்துக்கு எவ்வாறு சேவை செய்வது என்பதை ஒருக்காலும் அறியமுடியாது. என்னுடைய நாட்டுக்குச் சேவை செய்யும்போது மற்ற நாடுகளுக்குத் தீங்கு இழைக்காமல் இருக்கும்வரை நான் தவறு செய்வதற்கு இடமிருக்காது.

(தேசியவாதியாக இல்லாதவர் ஒருவர் சர்வதேசிய வாதியாக இருக்கமுடியாது. தேசியம் நடைமுறைக்கு வந்தால்தான்......அதாவது பல்வேறு நாடுகளைச் சேர்ந்த

மக்களினங்கள் இணைந்து ஒரே ஆள் போலச் செயலாற்றும் நிலை ஏற்பட்டால்தான்......சர்வதேசியம் தோன்றமுடியும்.)

தேசியம் தீயது அல்ல; நவீன தேசங்களுக்கு ஆதாரமாக இருக்கும் குறுகிய மனப்பான்மை, சுயநலம், தனித்திருக்கும் இயல்பு ஆகியவைதாம் தீயவை. ஒவ்வொரு நாடும் இன்னொருநாட்டை அழித்து, தான் இலாபம் பெறவும் செழிப்படையவும் விரும்புகிறது இந்திய தேசியமோ வேறொரு பாதையை வகுத்துக் கொண்டிருக்கிறது. மனித குலம் முழுவதற்கும் நலனளிக்கும் விதத்தில், சேவை செய்யும் விதத்தில், அது தன்னை உருவாக்கிக் கொள்ளவும், முழுச் சுயேச்சையுடன் தன் பண்பை வெளிப்படுத்தவும் விரும்புகிறது.

இந்தியாவில் உள்ள மனித குலத்தினர் இடையே சகோதரத்துவம் ஏற்படுத்துவது மாத்திரம் என் பணியல்ல. இந்தியாவின் விடுதலையே இப்போது அநேகமாய் என்னுடைய ஆயுள் முழுதையும், நேரம் முழுதையும், கவர்ந்திருக்கிறது. என்றாலும், அது மாத்திரம் என்னுடைய பணியல்ல. ஆனால், இந்தியாவுக்கு விடுதலை பெறுவதன் வாயிலாக, மனித குலத்தின் சகோதரத்துவத்தை நிலைநிறுத்தும் பணியை நடத்தலாம் என்று நம்புகிறேன். என்னுடைய (தேசபக்தி என் நாட்டிற்கு மாத்திரம் உரியது அல்ல. அது சர்வவியாபகமானது. மற்ற நாடுகளின் கஷ்டத்தையும், அவற்றைச் சுரண்டுவதையும் ஆதாரமாகக் கொண்ட தேசாபிமானம் எதையும் நான் நிராகரிக்கிறேன். மனித குலம் முழுவதும் பரவலாக நலன் பெறுவதற்கு முரணாக எச்சமயத்திலாவது என்னுடைய நாட்டுப் பற்று இருந்தால் அது தேசபக்தியே அல்ல. இது மாத்திரம் அல்ல; என்னுடைய மதமும், என் மதத்தி

லிருந்து விளைந்த என்னுடைய தேசபக்தியும், எல்லாச் சீவராசிகளின் நலனையும் தம்மகத்தே கொண்டிருக்கின்றன.

பூரண சுயராஜ்யம் என்று நான் கருதுவது என் நாடு சுதந்திரமாகத் தனித்திருக்கவேண்டும் என்பதல்ல; ஆரோக்கியமாக, கௌரவமாக மற்ற நாடுகளுடன் பரஸ்பரம் சார்ந்திருக்கும் நிலையையே அது குறிக்கிறது. என்னுடைய தேசியம் கடுமையானதாக இருந்தபோதி லும், வேறு எந்த நாட்டுக்கும் அல்லது நபருக்கும் தீங்கிழைப்பது அதன் நோக்கமல்ல. சட்ட நியதிகள் முதலில் தார்மிக ரீதியானவை, அதற்கு அடுத்தபடியாகத்தான் சட்டரீதியானவை; "உன்னுடைய அண்டை வீட்டாளின் சொத்துக்குக் குந்தகமில்லாத விதத்தில் உன்னுடைய சொத்தை அனுபவி" என்ற சிரஞ்சீவி உண்மையில் எனக்கு நம்பிக்கை உண்டு.

நம்மை வேறு நாடு சுரண்டுவதற்கு அனுமதியோம் என்பது போலவே, வேறு எந்த நாட்டையும் நாம் சுரண்டமாட்டோம் என்பதனால், மற்ற நாடுகளுக்கு நம்முடைய தேசிய வாதம் ஒரு ஆபத்தாக இருக்க முடியாது. சுயராஜ்யத்தின் வாயிலாக உலகம் முழுவதற்கும் நாம் சேவை செய்வோம்.

அரசின் எல்லைகளைத் தாண்டி நம் அண்டை நாடுகளுக்கு நம்முடைய சேவைகளை விஸ்தரிப்பதற்கு வரம்பு எதுவும் இல்லை. இந்த எல்லைகள் கடவுளால் ஏற்படுத்தப் பட்டவையல்ல.

நம்முடைய நாட்டுக்குச் சுதந்திரம் பெற விரும்புகிறோம் ; இதற்காக மற்ற நாடுகளைக் கஷ்டப்படுத்தவோ இழிவுபடுத்தவோ நாம் விரும்பவில்லை. இங்கிலாந்தோ, ஆங்கிலேயர்களோ அழிவதன் மூலம் இந்தியாவுக்குச் சுதந்திரம் கிடைக்கும் என்றால் அந்தச் சுதந்திரம் எனக்கு வேண்டாம். என்னுடைய சுதந்திர நாட்டினிடமிருந்து மற்ற நாடுகள் ஏதாவது கற்றுக்கொள்ளலாம் என்பதற்காகவும், என் நாட்டின் ஆதார வசதிகள் மனித குலத்துக்குப் பயன்படவேண்டும் என்பதற்காகவுமே, என் நாட்டுக்குச் சுதந்திரம் வேண்டும் என்று விரும்புகிறேன். குடும்பத்துக்காகத் தனி நபர் சாக வேண்டும். கிராமத்துக்காகக் குடும்பம் சாகவேண்டும். ஜில்லாவுக்காக கிராமம் சாகவேண்டும், மாகாணத்துக்காக ஜில்லா சாகவேண்டும், நாட்டுக்காக மாகாணம் சாகவேண்டும் என்று தேசபக்திச் சமயம் நமக்கு இன்று போதிப்பது போலவே, உலகின் நலனுக்காக, அவசியமானால், தான் சாவதற்குத் தயாராக ஒரு நாடு சுதந்திரத்துடன் இருக்கவேண்டும். ஆகவே, மனித இனம் வாழ்வதற்காக என்னுடைய நாடு சாகத் தயாராய் இருக்கவேண்டும் என்பதுதான் என்னுடைய தேசியப் பற்றின், தேசியம் பற்றிய கருத்தின், பொருளாகும். அதில் இனத் துவேஷத்துக்கு இடமில்லை—நம்முடைய தேசியம் இத் தன்மையதாக இருக்கட்டும்.

நாம் எல்லாரும் ஒரே அச்சில் வார்க்கப்பட்டவர்கள்; நாம் எல்லாரும் ஒரே பெரிய மனித குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். நம்மிடையே வேறுபாடுகள் எவற்றையும் நான் குறிப்பிடமாட்டேன். இந்தியர்கள் எவ்விதத்திலும் மற்றவர்களைவிட உயர்ந்தவர்கள் என்று நான் உரிமை கொண்டாட முடியாது. மற்றவர்களிடம் உள்ள

அதே நற்குணங்களும் தீயகுணங்களும் நம்மிடமும் உள்ளன. மனிதகுலம் தொடர்பற்ற தனித்தனி அறைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கவில்லை; ஓர் அறையிலிருந்து இன்னொன்றுக்குப் போக முடியாது என்பதில்லை. அவர்கள் ஆயிரம் அறைகளில் வசிக்கலாம்; ஆனால் அவர்கள் அனைவரும் பரஸ்பர உறவுள்ளவர்களே. "இந்தியா தான் சர்வ முக்கியமானது, உலகம் அழிந்தால் பரவாயில்லை" என்று நான் சொல்லமாட்டேன். அதுவல்ல என்னுடைய போதனை. உலகத்தில் உள்ள மற்ற நாடுகளின் நல்வாழ்வுக்கு உகந்த விதத்தில்தான் இந்தியா சர்வமுக்கியத்துடன் இருக்கவேண்டும். உலகில் ஒரு சிறு புள்ளியாக இருக்கும் இந்தியாவில் வசிக்கும் மனிதக் குடும்பத்தினிடம் மாத்திரம் எனக்கு நல்லெண்ணம் இருந்தால் போதாது; மனிதக் குடும்பம் முழுவதனிடமும் எனக்கு நல்லெண்ணம் இருக்கவேண்டும்; அப்போதுதான் இந்தியாவையும் அதன் சுதந்திரத்தையும் நான் காப்பாற்றிக் கொள்ளமுடியும். மற்றச் சிறு நாடுகளுடன் ஒப்பிட்டால் இந்தியா பெரிய தேசம் தான்; ஆனால் பரந்த உலகில், அல்லது பிரபஞ்சத்தில் இந்தியா எம்மாத்திரம்?

மனித இனத்தில் ஐந்தில் ஒரு பங்காக இருக்கும் ஒரு தேசிய சமுதாயத்தைச் சேர்ந்தவன் என்ற முறையில், உலகில் உள்ள வேறு எந்த இனத்தையுமோ அல்லது எந்தத் தனி நபரையுமோ சுரண்டுவதற்காக என் நாடு சுதந்திரம் பெறவேண்டும் என்று நான் விரும்பவில்லை. என்னுடைய தேசம் சுதந்திரம் பெறவேண்டும் என்று நான் விரும்புவதும். அதற்கு உதவ முயல்வதும் இதற்காக அல்ல. இவ்வாறு நான் சொல்வதை நீங்கள் நம்பவேண்டும். என் நாட்டுக்குச் சுதந்திரம் வேண்டும்

என்று நான் ஆசைப்படும்போது, வலியவை-மெலிந்தவை என்ற பேதமின்றி, எல்லா இனங்களுக்கும் அதே சுதந்திரத்தை அனுபவிக்கச் சம உரிமை உண்டு என்பதை நான் போற்றிப் பாதுகாக்காவிட்டால், அத்தகைய சுதந்திரத்தைப் பெற எனக்கு அருகதை இல்லை.

---

# மூல நூல்களும் பத்திரிகைகளும்

## (ஆங்கிலம்)

அமிர்த பஜார் பத்ரிகா :

சுயசரிதை அல்லது சத்திய சோதனை : (ஆன் ஆட்டோபயா கிராஃபி ஆர் தி ஸ்டோரி ஆஃப் மை எக்ஸ்பெரிமென்ட்ஸ் வித் ட்ரூத்)—எம். கே. காந்தி—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ், அஹமதாபாத்.

பம்பாய் கிரானிக்கிள் :

மீராவுக்கு பாபுவின் கடிதங்கள் : (பாபுஸ் லெட்டர்ஸ் டு மீரா)—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.

நிர்மாணத் திட்டம், அதன் பொருளும் ஸ்தானமும் : (கன்ஸ்ட்ரக்டிவ் புரோகிராம், இட்ஸ் மீனிங் அண்டு பிளேஸ்—எம். கே. காந்தி—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்).

டில்லி நாட்குறிப்பு : (டில்லி டைரி)—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.

இதிகாசச் சிறப்பு வாய்ந்த உண்ணாவிரதம் : (தி எப்பிக் ஃபாஸ்ட்)—மஹாத்மா காந்தி—எஸ். கணேசன், சென்னை.

அறநெறி மதம் : (எதிக்கல் ரிலிஜன்)—மஹாத்மா காந்தி—எஸ். கணேசன், சென்னை.

எரவாடா ஆலயத்திலிருந்து : ஆசிரமக் குறிப்புகள் (ஃப்ரம் எரவாடா மந்திர் : ஆஷ்ரம் அப்ஸர்வன்ஸஸ்)—எம். கே. காந்தி—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.

ஆரோக்கிய வழிகாட்டி : (ஏ கைடு டு ஹெல்த்)—மஹாத்மா காந்தி—எஸ். கணேசன்.

ஹரிஜன் : 1933-ல் மஹாத்மா காந்தி தொடங்கிய ஆங்கில வாரப் பத்திரிகை

இந்திய சுயராஜ்யம்: (ஹிந்த் ஸ்வராஜ் ஆர் இண்டியன் ஹோம் ரூல்)—மஹாத்மா காந்தி—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.

இந்தியா ஏன் சுயராஜ்யம் பெறவேண்டும்?: (இண்டியாஸ் கேஸ் ஃபார் ஸ்வராஜ்)—டபிள்யூ. பி. கபாடி தொகுத்தது—யஷானந்த் அண்டு கம்பெனி, பம்பாய்.

ஆரோக்கியத் திறவுகோல்: (கீ டு ஹெல்த்)—எம். கே. காந்தி—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.

என் அருமைக் குழந்தை: (மை டியர் சைல்டு)—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.

மஹாதேவ தேசாயின் நாட்குறிப்பு: (டைரி ஆஃப் மஹாதேவ் தேசாய்)—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.

மஹாத்மா: மோஹன்தாஸ் கரம்சந்த் காந்தியின் வாழ்க்கை வரலாறு: (மஹாத்மா: லைஃப் ஆஃப் மோஹன்தாஸ் கரம்சந்த் காந்தி)—டி. ஜி. டெண்டுல்கர், 8 பாகங்கள்—பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், புது டில்லி.

மஹாத்மா காந்தி: கடைசிக் கட்டம்: (மஹாத்மா காந்தி: தி லாஸ்ட் ஃபேஸ்)—பியாரேலால்—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.

எம். கே. காந்தி: தென் ஆப்பிரிக்காவில் ஒரு இந்திய தேச பக்தர் (எம். கே. காந்தி: ஆன் இன்டியன் பேட்ரியட் இன் ஸவுத் ஆப்பிரிக்கா)—ஜே. ஜே. டோக்—தி லண்டன் கிராணிக்கிள், லண்டன், 1909, பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், புது டில்லி, 1967.

**மாடன் ரிவ்யூ, கல்கத்தா:**

ஸ்ரீ காந்தி என்ற மனிதர் (மிஸ்டர் காந்தி, தி மேன்)—மில்லி கிரஹாம் போலக்.

இந்திய தேசிய காங்கிரஸ் நியமித்த பஞ்சாப் உபகமிட்டியின் யாதாஸ்து: கே. சந்தானம் பிரசுரித்தது, லாகூர், 1920.

பொறுக்கியெடுத்த கடிதங்கள் I (ஸெலக்டெட் லெட்டர்ஸ் I)—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.

தென் ஆப்பிரிக்க சத்தியாக்கிரகம் : (*ஸத்யாக்ரஹா இன் ஸவுத் ஆஃப்ரிக்கா*)—*எம். கே. காந்தி—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.*

மஹாத்மா காந்தியின் உரைகளும் எழுத்துக்களும் : (*ஸ்பீச்சஸ் அண்டு ரைட்டிங்ஸ் ஆஃப் மஹாத்மா காந்தி*)—*ஜி. ஏ. நடேசன் அண்டு கம்பெனி, சென்னை.*

புதிய தொடுவானத்தை நோக்கி : (*டுவேர்ட்ஸ் நியூ ஹொரைஸன்ஸ்*)—*பியாரேலால்—நவஜீவன் பப்ளிஷிங் ஹவுஸ்.*

இலங்கையில் காந்திஜியுடன் (*வித் காந்திஜி இன் ஸிலோன்*) *மஹாதேவ தேசாய் தொகுத்தது—எஸ். கணேசன்.*

யங் இந்தியா : *மஹாத்மா காந்தி நடத்திய ஆங்கில வாரப் பத்திரிகை.*

